# விடுதலை

## நீ நீயாக இரு



**ஓஷோ**

புது வாழ்விற்கான பார்வைகள்

# விடுதலை

## நீ நீயாக இரு

# ஓஷோ

## புது வாழ்விற்கான
## பார்வைகள்

தமிழாக்கம்
**சியாமானந்த்**


**கவிதா பப்ளிகேஷன்**
தபால் பெட்டி எண்: 6123
8, மாசிலாமணி தெரு, பாண்டிபஜார்
தி. நகர், சென்னை–600017.
✆ : 24364243: 24322177

# வாசக நெஞ்சங்களுக்கு...

உண்மையான உணர்வுகளோடு நமக்குள்ள தொடர்பை நாம் இழந்துவிட்டோம். நமது அதிவேகமும், பரபரப்பும், ஓட்டமும், போட்டியும், அநாவசிய தேவைகளின் அதிகரிப்பும் நமது சக்தியை பெரிதும் உறிஞ்சி விடுகின்றன.

நுண்ணுணர்வுகளை உணரக்கூடிய தளர்வும், கூர்மையும், தீவிரமும் நம்மிடம் இல்லை. அப்படி சக்தியோடிருக்க நமக்கு வழியும் தெரியவில்லை.

இந்நிலையில் நாம் உணர்வுகளுக்கு பதிலாக, அதைக் குறிக்கும் வெற்றுச் சொற்களில் சிக்கிக் கிடக்கிறோம்.

அந்த சொற்களின் உணர்வுகளை நாம் இழந்துவிட்டோம். அதனால் மதம், அரசியல், அதிகாரம், செல்வம் படைத்த சுயலாபக் கும்பல், அதற்குத் தவறான விளக்கங்களைக் கூறி அதை நம்மை நம்ப வைத்து, நம்மைஆண்டுகொண்டிருக்கின்றனர்.

ஓஷோ இப்போது நம்மை அந்த முக்கியமான சொற்களின் நிஜ உணர்வுகளுக்குக் கூட்டிச் செல்ல முயற்சிக்கிறார்.

நாம் எப்படி தவறான விளக்கங்களில் சிக்கிக் கிடக்கிறோம் என்று சிக்கல் எடுக்கிறார். மேலும் அந்த உணர்வுகளின் உச்சிகளைத் தொட்டுக்காட்டி விழிப்பூட்டுகிறார்.

இதுதான் இந்த புதியதொரு வாழ்க்கைக்கான பார்வைகள் புத்தகவரிசை. இவை புத்தகங்களல்ல விழிப்புணர்வூட்டும் ஓர் விடியலின் வைகறை அனுபவங்கள்.

இவை மூலம் மன இருளிலிருந்து விழிப்புணர்வு வெளிச்சத்திற்கு வர அனைவரையும் அழைக்கிறேன்.

நன்றியும் அன்பும்
**தியான் சித்தார்த்**

சுதந்திரம் அல்லது விடுதலை என்பதற்கு, எப்போது 'சரி' என்று சொல்ல வேண்டுமோ, அப்போது 'சரி' என்று சொல்வதற்கும், எப்போது 'முடியாது' என்று சொல்ல வேண்டுமோ, அப்போது 'முடியாது' என்று சொல்வதற்கும், மேலும் சில நேரங்களில் எதுவுமே சொல்லத் தேவையில்லாத போது அமைதியாக இருப்பதற்கும், எதுவுமே சொல்லாமல் மௌனமாக இருப்பதற்குமான திறமையோடு இருத்தல் என்பது தான் அர்த்தமாகும். இப்படி எல்லாப் பரிமாணங்களும் கிடைக்கும் போது, அங்கே சுதந்திரம் இருக்கும்.

– ஓஷோ

# பொருளடக்கம்

# விடுதலையின் மூன்று பரிமாணங்கள்

விடுதலை என்பது ஒரு முப்பரிமாண விஷயம். அதில் முதலாவது பரிமாணம் உடல். உடலளவில் உங்களை எவரும் அடிமைப்படுத்த முடியும். ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக சந்தையில் ஏனைய விளை பொருட்களைப் போல் மனிதனும் விற்கப்பட்டு வந்துள்ளான். இந்த உலகம் முழுவதும் அடிமைகள் இருந்துள்ளனர். அவர்களுக்கு அடிப்படை மனித உரிமைகள் கூட வழங்கப்படவில்லை; உண்மையில் அவர்கள் மனித இனமாகவே ஏற்றுக் கொள்ளப்பட வில்லை; மனித இனத்திற்குக் கீழானவர்களாகக் கருதப் பட்டனர். இன்னமும் கூட மக்கள் கீழானவர்களாகத் தான் நடத்தப்படு கின்றனர். இந்தியாவில் சூத்திரர்கள் என்னும் தீண்டத்தகாதவர்கள் இருக் கின்றனர். இந்தியாவின் பெரும்பகுதி இன்னமும் அடிமைத் தளையில் தான் வாழ்கிறது. இந்த நாட்டில் சில பகுதிகளில் அத்தகைய மக்களுக்கு கல்வி அறிவு கிடைப்ப தில்லை. ஐயாயிரம் வருடங்களுக்கு முன்பு அவர்களுக் கென்றே பாரம்பரிய மாக தீர்மானிக்கப்பட்ட வேலையைத் தவிர வேறு வேலைக்கு அவர்களால் செல்ல முடியவில்லை. அவர்களைத் தொட்டாலே தீட்டு என்று எண்ணப்படுகிறது; உடனே நீங்கள் குளித்தாக வேண்டும். மேலும், அந்த ஆளை நீங்கள் தொடாவிட்டாலும் கூட அவனது நிழல் உங்கள் மீது விழுந்தால்கூட, அதற்குக் கூட நீங்கள் குளிக்க வேண்டும்.

> ஏதோ ஒன்றிலிருந்து விடுதலை அடைவது, உண்மையான விடுதலை ஆகாது. நீங்கள் செய்ய விரும்புகின்ற வற்றையெல்லாம் செய்வதற்கான சுதந்திரமும், நான் குறிப்பிடுகிற சுதந்திரம் ஆகாது.

இந்த உலகம் முழுவதும் பெண்ணின் உடலானது ஆணின் உடலுக்குச் சமமானதாகக் கருதப்படுவதில்லை. ஆணைப் போல் அவள் சுதந்திரமாக இருக்க முடியாது. சீனாவில் பல நூற்றாண்டுகளாக, மனைவி கணவனது ஒரு உடைமை என்பதால், மனைவியை கணவன் கொன்று விட்டால்கூட அவனுக்கு எந்த ஒரு தண்டனையும் கிடையாது என்றே இருந்து வந்தது. உண்மையில் வெறுமனே நீங்கள் உங்களது

நாற்காலியை அழித்துவிடுவதைப் போல, உங்களது வீட்டினை எரித்துவிடுவதைப் போல, உங்களது மனைவியையும் அழித்துவிடலாம். ஏனெனில், உங்களுடைய மனைவி உங்களது நாற்காலி போல உங்களது வீடு போலத்தான். சீன நாட்டின் சட்டப்படி, ஒரு கணவன் தனது மனைவியைக் கொன்றுவிட்டால், அவனைத் தண்டிக்க முடியாது; ஏனெனில், அவள், ஆன்மா என்று ஒன்று இல்லாதவளாகக் கருதப்பட்டாள். அவள் ஒரு மனித உயிர்களை உற்பத்தி செய்கின்ற இயந்திரமாக, குழந்தைகளை உற்பத்தி செய்கிற ஒரு தொழிற்சாலையாகத் தான் கருதப்பட்டாள்.

எனவே, இப்படி இங்கே உடல் அடிமைப்படுத்தப்பட்டு இருக்கிறது. ஆனால் அதேசமயம் உண்மையில் உடல் சுதந்திரமாகவே உள்ளது. அதாவது, உங்களது உடல் சங்கிலிகளால் பிணைக்கப்படவில்லை, மற்றவர்களின் உடலைவிட உங்களது உடல் கீழ்நிலையில் உள்ளதாக பிரிக்கப்படவில்லை. மேலும், உடலைப் பொறுத்தமட்டில், சமத்துவம்தான் உள்ளது. ஆனால், இன்றும் கூட இப்படிப்பட்ட சுதந்திரம் எல்லா இடத்திலும் இல்லை. அடிமைத்தனம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து வருகிறது என்று கூறலாமே தவிர, அது முற்றிலும் மறைந்துவிடவில்லை.

சுதந்திரமான உடல் என்று கூறுவதற்கு, கருப்பு மற்றும் வெள்ளை நிறத்திற்கு இடையே எந்த பாகுபாடும் இல்லை என்றும், ஆண் மற்றும் பெண்ணுக்கும் இடையே எந்தப் பாகுபாடும் இல்லை என்றும் தான் அர்த்தமாகும். உடலைப் பொறுத்தமட்டில், எந்த வகையான பாகுபாடும் இல்லை என்று தான் அர்த்தமாகும். யாரும் மாசற்றவர்களும் அல்ல யாரும் மாசு படிந்தவருமல்ல, எல்லா உடல்களும் ஒன்றுதான்.

இதுதான் சுதந்திரத்திற்கான மிகவும் முக்கியமான அடித்தளம். அதன் பின்னர் இங்கே இரண்டாவதாக ஒரு பரிமாணம் உள்ளது; மன விடுதலை. இந்த உலகில் மனதளவில் விடுதலை பெற்றவர்களாக ஒரு சில தனி மனிதர்கள் மட்டுமே உள்ளனர். ஏனெனில், நீங்கள் ஒரு முகமதியராக இருக்கும் பட்சத்தில், நீங்கள் மனதளவில் விடுதலை பெற்றவராக இருக்க முடியாது; நீங்கள் ஒரு இந்துவாக இருக்கும் பட்சத்தில், நீங்களும் மனதளவில் விடுதலை பெற்றவராக இருக்க முடியாது. நாம், நமது குழந்தைகளை வளர்க்கின்ற முழு வழியும் அவர்களை முழுமையான அடிமைகளாக ஆக்குவது தான் - அரசியல் கருத்துக்களுக்கு அடிமைகளாக, சமூக கருத்துக்களுக்கு அடிமைகளாக, மதக் கருத்துக்களுக்கு அடிமைகளாக ஆக்குவது தான். நாம் அவர்கள் சுயமாக சிந்திப்பதற்கும், அவர்களே சுயமாக தேடிக் காண்பதற்குமான சந்தர்ப்பத்தை அவர்களுக்குக் கொடுப்பதில்லை. நாம் அவர்களின் மனதை ஒரு குறிப்பிட்ட வார்ப்பில் இருக்கும்படி நிர்ப்பந்திக்கிறோம். நாம் இன்னமும் அனுபவித்துப் பார்த்திராத விஷயங்களிலும் கூட

அவர்களின் மனதை நிரப்புகிறோம். பெற்றோர்கள் குழந்தைகளிடம் கடவுள் ஒருவர் உண்டு என்று கற்பிக்கின்றனர் - ஆனால, அவர்களோ கடவுளைப் பற்றி ஏதும் அறியாதவர்கள். அவர்கள் தங்களின் குழந்தைகளிடம் சொர்க்கம் மற்றும் நரகம் உள்ளது என்று கூறுகின்றனர் - ஆனால், அவர்களுக்கோ சொர்க்கம் மற்றும் நரகத்தைப் பற்றி எதுவும் தெரியாது.

நீங்களே இன்னமும் தெரிந்து கொள்ளாத விஷயங்களைத் தான், உங்களது குழந்தைகளுக்கு கற்றுக் கொடுக்கிறீர்கள். உங்களது பெற்றோர்களால் உங்களது மனம் கட்டுக்குள்ளாக்கப்பட்டது போல, நீங்களும் உங்களது குழந்தைகளின் மனதை வெறுமனே கட்டுப் படுத்தி விடுகிறீர்கள். இப்படியாக, இந்த நோயானது ஒரு தலைமுறையில் இருந்து அடுத்த தலைமுறைக்கு போய்க் கொண்டே இருக்கிறது.

குழந்தைகள் அனைவரும் அதிக அறிவாற்றலுடனும், அதிக புத்திசாலித்தனத்துடனும், அதிக தன்னுணர்வுடனும், அதிக விழிப்புடனும் வளர உதவும் போதுதான், வளர அனுமதிக்கும் போது தான் மன விடுதலை என்பது சாத்தியமாகும். எந்த ஒரு நம்பிக்கையும் அவர்களுக்கு கொடுக்கப்பட மாட்டாது. அவர்களுக்கு எந்தவிதமான நம்பிக்கைகளும் போதிக்கப்படாது. ஆனால், அவர்கள் சத்தியத்தை தேடுவதற்கு எந்த அளவுக்கு ஊக்கம் தேவையோ அந்த அளவுக்கு அவர்களுக்கு ஊக்கம் அளிக்கப்படும். ஆரம்பத்திலிருந்தே அவர்களுக்கு, "உங்களது சுய உண்மையும், உங்களது சுயமான தேடுதலும் தான் உங்களுக்கு விடுதலையைக் கொடுக்குமே தவிர, வேறு எதனாலும் அதை உங்களுக்கு செய்ய முடியாது," என்பது நினைவூட்டப்பட வேண்டும்.

உண்மையை வேறு எங்கும் பார்க்க முடியாது. அதை நீங்கள் புத்தகத்தில் படிக்க முடியாது. யாராலும் அதைப்பற்றி உங்களுக்கு சொல்லித் தர முடியாது. நீங்கள் தான் உங்களது புத்திசாலித்தனத்தை, நீங்களாகவே கூர் தீட்ட வேண்டும். அப்போது தான் உங்களால் இந்த இயற்கையை ஊடுருவிப் பார்த்து, அதைக் கண்டு கொள்ள முடியும். ஒரு குழந்தை திறந்த மனதுடன், எதையும் கிரகித்துக் கொள்ளும்படி, விழிப்புடன் இருக்கும்படி விடப்பட்டால், மேலும் அதுவே தேடிக் கண்டு கொள்வதற்கான ஊக்கமும் கொடுக்கப்பட்டால், அவன் மன விடுதலை பெற்றவனாக ஆகிவிடுவான். மேலும், இந்த மன விடுதலை கிடைக்கும் போது, அதோடு சேர்ந்து அவனுக்கு அளவுக்கு அதிகமான பொறுப்பும் வந்துவிடும். நீங்கள் அதை அவனுக்கு கற்றுக் கொடுக்க வேண்டியதில்லை. அது, அவனுக்கு கிடைத்த மன விடுதலையின் நிழல் போல் பின்தொடர்ந்து வந்துவிடும். எல்லாக் குழந்தைகளும் அவர்களது பெற்றோர் மீது கோபமாக இருக்கின்றன. ஏனெனில், அவர்கள் அவனது வாழ்வை அழித்துவிட்டார்கள், அவனது சுதந்திரத்தை அவர்கள்

அழித்துவிட்டார்கள். அவர்கள் அவனது மனதிற்கு நிபந்தனைகளை வைத்துவிட்டார்கள். அவன் கேள்வி கேட்பதற்கு முன்பாகவே, அவன் மனதை போலியான பதில்களால் நிரப்பி விடுகிறார்கள். ஏனெனில், அவர்களது பதில்கள் அவர்களின் சொந்த அனுபவம் கிடையாது.

இந்த உலகம் முழுவதும் இப்படிப்பட்ட மன அடிமைத்தனத்தில் தான் வாழ்கிறது.

மேலும், மூன்றாவது பரிமாணம் தான், முடிவான விடுதலை - அது என்னவென்றால், நீங்கள் இந்த உடல் அல்ல என்று அறிவது, நீங்கள் இந்த மனம் அல்ல என்று அறிவது, நீங்கள் என்பது மாசற்ற உங்களது தன்னுணர்வு மட்டும்தான் என்று அறிந்து கொள்வதாகும். அந்த அறிதல், தியானத்தின் மூலமே வரும். (தியானம் தான் உங்களை உங்களது உடலில் இருந்து பிரிக்கும், அதுதான் உங்களை உங்கள் மனதில் இருந்து பிரிக்கும். முடிவாக அங்கே நீங்கள் மட்டுமே ஒரு மாசற்ற தன்னுணர்வாக, பரிசுத்தமான விழிப்புணர்வாக இருப்பீர்கள். அது தான் ஆன்ம விடுதலை.)

இவைகள் தான் தனி மனிதனுக்கான விடுதலையின் மூன்று அடிப்படைப் பரிமாணங்கள். மக்கள் கூட்டத்திற்கு ஆன்மா கிடையாது; மக்கள் கூட்டத்திற்கு மனம் என்பதும் கிடையாது. மக்கள் கூட்டத்திற்கு உடலும் கூட கிடையாது; மக்கள் கூட்டம் என்பது வெறும் பெயர் மட்டுமே. அது, வெறும் ஒரு வார்த்தை தான். எனவே, கூட்டத்திற்கு விடுதலைக்கான அவசியமும் இல்லை. தனி மனிதர்கள் ஒவ்வொருவரும் விடுதலை பெறும் போது, அந்தக் கூட்டமும் விடுதலை பெற்றுவிடும். ஆனால், நமக்கே வார்த்தைகள் தான் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்துள்ளது. அந்த வார்த்தைகளில் எந்தவிதமான பொருளும் இல்லை என்பதையும் நாம் மறந்துவிடுகிறோம். மக்கள் கூட்டம், சமுதாயம், கூட்டமைப்பு, மதம், திருச்சபை - இவைகள் எல்லாம் வார்த்தைகள் தான். அவைகளுக்கு பின்னால் எந்த உண்மையும் இல்லை.

'அற்புதத் தீவில் அலீஸ்' (Alice in Wonderland) என்கிற புத்தகத்தில் உள்ள ஒரு கதை எனக்கு ஞாபகத்திற்கு வருகிறது. அலீஸ், மகாராணியின் அரண்மனைக்கு வருகிறாள். அவள் வந்தவுடன் மகாராணிஅவளிடம், "நீ வரும் வழியில் எனது சேவகனைச் சந்தித்தாயா?" என்று கேட்டாள்.

அதற்கு அந்தச் சிறுமி, "யாருமில்லை, நான் யாரையும் சந்திக்கவில்லை!" என்றாள். ஆனால், அந்த மகாராணியோ 'யாருமில்லை' என்பது யாரோ ஒருவர் என்று நினைத்துவிட்டாள். எனவே, அவள் மீண்டும் சிறுமியிடம், "அப்படியானால், இன்னும் அந்த 'யாருமில்லை' இங்கே வந்து ஏன் சேரவில்லை?" என்று கேட்டாள்.

## முன்னுரை

அதற்கு அந்தச் சிறுமி, "அம்மா, 'யாருமில்லை' என்பது யாருமில்லை!" என்றாள்.

உடனே அந்த மகாராணி, "முட்டாள்தனமாகப் பேசாதே. நான் புரிந்து கொண்டேன். யாருமில்லை என்பவர் யாருமில்லாமல் தான் இருக்க முடியும். ஆனால், அவர் உனக்கு முன்பாக அல்லவா இங்கு வந்திருக்க வேண்டும். நீ நடந்து வந்ததைவிட அந்த 'யாருமில்லை' இன்னும் மெதுவாக நடந்து வருகிறான் போலிருக்கிறது," என்றார்.

உடனே அலீஸ், "இது முற்றிலும் தவறானது! யாராலும் என்னைவிட வேகமாக நடந்துவர முடியாது," என்றாள்.

இப்படியாக இந்த உரையாடல் தொடர்கிறது. அவர்கள் இருவரின் உரையாடல் முழுவதிலும் 'யாருமில்லை' என்பது, யாரோ ஒரு ஆள் என்பது போல் ஆகிவிட்டது. மேலும், இந்த 'யாருமில்லை' என்பது, யாருமேயில்லை என்று அந்த மகாராணியை ஒப்புக் கொள்ள வைப்பதற்கு அலீஸினால் முடியாமல் போயிற்று.

கூட்டம், சமூகம் - இவைகள் எல்லாம் வெறும் வார்த்தைகள் தான். உண்மையில் இருப்பது, தனிப்பட்ட மனிதர்கள் தான்; அப்படியில்லையெனில், அங்கே பிரச்சனை தான் எழும். ரோட்டரி சங்கத்தின் விடுதலை என்றால் என்ன? லயன்ஸ் கிளப்பின் விடுதலை என்றால் என்ன? இவைகள் எல்லாம் வெறும் பெயர்கள் தான்.

நாடு என்பதன் பெயரால், நாடுகள் தனி மனிதர்களைத் தியாகம் செய்து வந்துள்ளன - ஆனால் 'நாடு' என்பது வெறும் ஒரு வார்த்தை தான். நீங்கள் உங்களது தேச வரைபடத்தில் வரைந்துள்ள கோடுகள், இந்த பூமியில் எங்கும் இல்லை. அவைகள் எல்லாம் உங்களது விளையாடல் தான். ஆனால், அப்படி நீங்கள் உங்களது தேசப் படத்தில் வரைந்து வைத்துள்ள கோட்டிற்காக், லட்சக்கணக்கான மக்கள் மாண்டு போய்விட்டார்கள். இல்லாத கோட்டிற்கு, இருக்கின்ற மக்கள் செத்து மடிந்து போகிறார்கள். மேலும், நீங்கள் அவர்களைத் தலைவர்களாக, தேசியத் தலைவராக ஆக்கி விடுகிறீர்கள்!

எனவே, இந்தக் கூட்டம், குழு என்கின்ற கருத்துக்கள் முற்றிலும் அழிக்கப்பட வேண்டும். இல்லையெனில், ஏதாவது ஒரு வழியில் நாம் தொடர்ந்து தனி மனிதர்களை பலி கொடுத்துக் கொண்டு தான் இருப்போம். மதம் மற்றும் மதப் போர் என்கிற பெயரில் கூட, நாம் தனி மனிதர்களை தியாகம் செய்து வருகிறோம். ஒரு முகமதியன், தான் ஒரு மதப் போரில் உயிர்விட்டால் அவனுக்கு சொர்க்கம் நிச்சயம் என்று நினைக்கிறான். அவனது மதகுரு அவனிடம், "நீ இஸ்லாமிற்காக உனது உயிரைவிட்டால், அதன்பிறகு உனக்கு சொர்க்கம் நிச்சயம் கிடைக்கும். நீ இதுவரை கற்பனை கண்டு வந்த அல்லது கனவு கண்டு வந்த எல்லா

இன்பங்களும் அங்கே உனக்குக் கிடைக்கும். மேலும், நீ கொன்ற அந்த மனிதனுக்கும் சொர்க்கம் கிடைக்கும். ஏனெனில், அவன் ஒரு முகமதியனால் கொல்லப்பட்டிருக்கிறான். அது, அவனுக்கு ஒரு சிறப்புதான். எனவே, நீ 'ஒரு மனிதனைக் கொன்று விட்டோமே' என்கிற குற்றவுணர்வும் கொள்ளத் தேவையில்லை," என்று கூறுகிறார். கிறிஸ்தவர்கள் சிலுவைப் போர் என்கின்றனர் - 'ஜிகாத்' என்கின்ற மதப்போர் உள்ளது. இப்படி எல்லா மக்களும் உயிருள்ள மனிதர்களை எரிக்கின்றனர். எதற்காக? ஏதோ ஒரு கூட்டத்திற்காக - கிறிஸ்தவத்திற்காக, பௌத்தத்திற்காக, இந்து மதத்திற்காக, கம்யூனிஸத்திற்காக, பாசிஸத்திற்காக, இப்படி ஏதாவது ஒன்றிற்காக செய்கின்றனர். ஏதோ ஒரு குழுவைக் குறிக்கின்ற எந்தப் பெயராக இருந்தாலும் சரி, அதற்காக தனி மனிதர்களைத் தியாகம் செய்கின்றனர்.

இப்படி, கூட்டம் என்கிற ஒன்றுகூட இருக்க வேண்டிய அவசியம் இல்லை; தனி மனிதர்களே போதும். இந்த தனி மனிதர்கள் விடுதலை பெற்றால், மன விடுதலை பெற்றால், ஆன்ம விடுதலை பெற்றால், அதன் பிறகு இயல்பாகவே அந்தக் கூட்டமும் ஆன்மீக விடுதலை பெற்றுவிடும்.

ஒரு குழு தான் தனி மனிதர்களைக் கொண்டுள்ளதே அன்றி வேறில்லை. தனி மனிதன் ஒரு கூட்டத்தின் ஒரு அங்கம் தான் என்று கூறப்படுகிறது. அது உண்மை அல்ல. தனி மனிதன், கூட்டத்தின் ஒரு அங்கம் அல்ல; கூட்டம் என்பது தனி மனிதர்கள் ஒன்றாகச் சந்திப்பதற்குண்டான ஒரு அடையாள வார்த்தை மட்டுமேயாகும். அவர்கள், எந்த ஒன்றின் பகுதியாகவும் இல்லை; அவர்கள் சுதந்திரமாகத் தான் இருக்கிறார்கள். அவர்கள் உடலளவில் சுதந்திரமாகத் தான் இருக்கின்றனர். எனவே, அவர்கள் கூட்டத்தின் ஒரு அங்கமாக ஆகிவிடுவதில்லை.

உண்மையிலேயே நாம் ஒரு விடுதலை பெற்ற உலகை விரும்பினால், அதன் பின்னர், இதுவரை இப்படிப்பட்ட கூட்டங்களின் பெயரால் அநேக மனித படுகொலைகள் நடந்துவிட்டன என்பதையும், அதை நிறுத்துவதற்கு இதுதான் சமயம் என்பதையும் புரிந்து கொள்ள வேண்டும். இந்தக் கூட்டப் பெயர்கள் எல்லாம், கடந்த காலங்களில் பெற்ற கம்பீரத்தை இழந்து தான் ஆக வேண்டும். தனி மனிதர்கள் தான் உயர்ந்த மதிப்புள்ளவர்களாக ஆக்கப்பட வேண்டும்.

ஏதோ ஒன்றிலிருந்து விடுதலை அடைவது, உண்மையான விடுதலை ஆகாது. நீங்கள் செய்ய விரும்புகின்றவற்றையெல்லாம் செய்வதற்கான சுதந்திரமும், நான் குறிப்பிடுகிற சுதந்திரம் ஆகாது. என்னைப் பொறுத்தவரை நீங்கள் நீங்களாகவே இருப்பதுதான், சுதந்திரம்! எதிலிருந்தாவது விடுதலை பெறுகிறாய் என்பதைப் பொறுத்ததல்ல நான்

கூறும் விடுதலை. அந்த விடுதலை ஆகாது. ஏனெனில், அது இன்னமும் பிறரால் உனக்கு கொடுக்கப்படுவதாகிறது; அதற்கான காரணம் ஒன்று உள்ளது. நீங்கள் எந்த விஷயத்தைச் சார்ந்து இருந்தீர்களோ, இன்னமும் அந்த விஷயம் உங்களது விடுதலையில் சம்பந்தப்பட்டுள்ளது. நீங்கள் அதற்கு கடமைப்பட்டிருக்கிறீர்கள். அது இல்லையென்றால், உங்கள் விடுதலையும் இல்லை.

நீங்கள் செய்ய விரும்புவதைச் செய்வதற்கான சுதந்திரமும் கூட, சுதந்திரம் ஆகாது. ஏனெனில், விரும்புதல், ஏதோ ஒன்றைச் 'செய்ய' ஆசைப்படுதல் ஆகிய இவையெல்லாம் உங்கள் மனதில் இருந்து தான் எழுகிறது. மேலும், உங்களது மனம் என்பதே ஒரு அடிமைத்தளை தான்.

உண்மையான விடுதலையானது, எதையும் தேர்வு செய்யாத விழிப்புணர்வின் மூலம் வருவதாகும்; ஆனால், அப்படிப்பட்ட எதையும் தேர்வு செய்யாததொரு விழிப்புணர்வு நிலை வந்து விடும் போது, அந்த விடுதலையானது எந்த ஒரு விஷயத்தையும் சார்ந்ததாகவோ அல்லது ஏதோ ஒன்றினைச் செய்வதைச் சார்ந்ததாகவோ இருக்காது. எதையும் தேர்வு செய்யாமல், இருக்கின்ற விழிப்புணர்வு நிலையைப் பின்தொடர்ந்து வருகின்ற விடுதலையானது, 'நீங்கள் வெறும் நீங்களாகவே' இருக்கின்ற சுதந்திரமாக இருக்கும். ஏற்கனவே நீங்கள் நீங்களாகவே இருக்கிறீர்கள், நீங்கள் அதோடு தான் பிறந்திருக்கிறீர்கள்; எனவே, அது வேறு எதையும் சார்ந்ததாக இருக்காது. யாரும் அந்த சுதந்திரத்தை உங்களுக்கு கொடுக்கவும் முடியாது. மேலும், உங்களிடமிருந்து அதை யாரும் எடுத்துக் கொள்ளவும் முடியாது. ஒரு வாள் உங்களது தலையை வெட்டலாம். ஆனால், அதனால் உங்களது சுதந்திரத்தை, உங்களது ஆன்மாவை வெட்ட முடியாது.

இது, "நீங்கள் உங்களது மையத்தில் இருக்கிறீர்கள், நீங்கள் உங்களது இயல்பான, இயற்கையான ஆன்மாவில் ஒன்றி இருக்கிறீர்கள்" என்பதைக் கூறுவதற்கான மற்றொரு வழி போல் ஆகிவிடும். அதற்கும், உங்களது வெளிப்புறத்திற்கும் எந்த சம்பந்தமும் கிடையாது.

விடுதலையுடையவராகத் தான் நீங்கள் பிறந்திருக்கிறீர்கள். நீங்கள் வெறுமனே அதனை மறந்துவிடுவதற்கு பழக்கப்படுத்தப்பட்டு இருக்கிறீர்கள். அடுக்கின் மேல் அடுக்காக உள்ள கண்டிப்புகள், உங்களை ஒரு கைப்பாவை ஆக்கிவிட்டது. பொம்மலாட்ட பொம்மை போன்ற உங்களின் கயிறுகள், வேறு யாருடைய கைகளிலோ உள்ளது. நீங்கள் ஒரு கிறிஸ்தவர் என்றால், நீங்கள் ஒரு கைப்பாவை. உங்களது கயிறுகள், இல்லாத கடவுளின் கைகளில் உள்ளன. மேலும், (கடவுள் இருக்கிறார் என்பது போன்ற உணர்வை உங்களுக்கு கொடுப்பதற்காகத் தான் இங்கே தீர்க்கதரிசிகளும், மீட்பர்களும், கடவுளின் பிரதிநிதிகளாக இருக்கின்றனர்.)

அவர்கள், யாரையும் பிரதிநிதித்துவம் செய்யவில்லை. அவர்கள், வெறுமனே, 'நான்' என்னும் ஆணவம் பிடித்தவர்கள். மேலும், அவர்களது அந்த ஆணவம், உங்களை ஒரு கைப்பாவையாக தரம் தாழ்த்திவிடுகிறது. அவர்கள், நீங்கள் என்ன செய்ய வேண்டும் என்று கூறுகிறார்கள். அவர்கள் உங்களுக்குப் பத்து கட்டளைகளைக் கொடுக்கிறார்கள். அவர்கள் தான், உங்களுக்கு நீங்கள் ஒரு கிறிஸ்தவர், ஒரு யூதர், ஒரு இந்து, ஒரு முகமதியர் என்கின்ற தனி மனிதப் பண்பைக் கொடுக்கிறார்கள். நீங்கள் அறிவு என்று அழைக்கின்ற அந்த ஒன்றினை உங்களுக்குக் கொடுக்கிறார்கள். மேலும், அவர்கள் இப்படி உங்களது குழந்தைப் பருவத்திலிருந்தே உங்கள் மீது சுமத்துகின்ற மிகப்பெரிய சுமையின் அடியில், இமயமலை போன்ற சுமையின் அடியில் மறைந்து கொண்டு, அமுக்கப்பட்டுக் கொண்டு உங்களது இயல்பான ஆன்மா இருக்கிறது. உங்களால் இந்த கட்டுதிட்டங்களை எல்லாம் ஒழித்துவிட முடியுமென்றால், நீங்கள் ஒரு கிறிஸ்தவனோ அல்ல அல்லது ஒரு முகமதியனோ அல்ல என்றும் நினைக்க முடியுமென்றால்... ...

(நீங்கள் ஒரு கிறிஸ்தவனாகவோ அல்லது முகமதியராகவே பிறக்கவில்லை; நீங்கள் வெறுமனே தூய்மையான, கள்ளம் கபடமற்ற தன்னுணர்வாகத் தான் பிறந்தீர்கள். நீங்கள் மீண்டும் அந்த தூய்மையில், அந்த கள்ளம் கடபமற்ற தன்மையில், அந்தத் தன்னுணர்வில் இருப்பதைத் தான் நான் விடுதலை என்கின்றேன்.)

விடுதலை என்பது, வாழ்க்கையின் முடிவானதொரு அனுபவம். அதைவிட உயர்ந்தது எதுவும் இல்லை. மேலும், இந்த விடுதலையினால் அநேக மலர்கள் உங்களுக்குள் மலரும்.

அன்பு என்பது, உங்களது அந்த விடுதலையின் மலர்ச்சி தான்; கருணை என்பதும், அதன் மற்றொரு மலர்ச்சி தான்.

உங்களது வாழ்வில் மதிப்புமிக்கவையெல்லாம் உங்களது ஆன்மாவின் இந்த கள்ளம் கபடமில்லாத, இயல்பான நிலையில் மலர்கின்றவை தான்.

எனவே, விடுதலையை சுதந்திரம் என்று நீங்கள் சொல்வதோடு தொடர்பு படுத்தாதீர்கள். உங்கள் சுதந்திரம் என்பது, நீங்கள் ஏதோ ஒன்றிலிருந்து, யாரோ ஒருவரிடமிருந்து பெறுவதாகும். மேலும், விடுதலை என்பதை, நீங்கள் செய்ய விரும்புகின்றவற்றைச் செய்வதோடு தொடர்பு படுத்தாதீர்கள். ஏனெனில், அது உங்களது மனம், நீங்கள் உங்களது விருப்பம், ஆசை இவைகளின் அடிமையாக இருக்கிறீர்கள். நான் பேசிக் கொண்டிருக்கின்ற இந்த விடுதலையில் நீங்கள் வெறுமனே இருப்பீர்கள் - ஆழ்ந்த அமைதியில், அழகில், ஆனந்தத்தில் இருப்பீர்கள்.

# அடிமைத்தனையின் வேர்களைப் புரிந்து கொள்ளுதல்

[ஒருவர் முழுமையாக விடுதலை பெற வேண்டுமெனில், அவர் முழுமையான விழிப்புணர்வுடன் இருக்க வேண்டியது அவசியம்.] ஏனெனில், நமது அடிமைத்தன மானது, நமது தன்னுணர்வற்ற தன்மையில் வேர் ஊன்றி உள்ளது; அது, வெளிப்புறத்தில் இருந்து வருவதில்லை. யாரும் உங்களை விடுவிக்க முடியாது. நீங்கள் அழிக்கப்படலாம். ஆனால், உங்களது விடுதலையை நீங்களாகவே விட்டுக் கொடுக்காத வரையில், யாராலும் கொள்ள முடியாது. இறுதியாக, அலசி ஆராய்ந்ததில் விடுவிக்கப்படாமல் இருக்க வேண்டும் என்கின்ற உங்களது ஆசை தான் உங்களை விடுதலை அடைய முடியாதவராக ஆக்கி விடுகிறது. யாரையாவது சார்ந்து இருக்க வேண்டும் என்கின்ற உங்களது ஆசை தான், நீங்கள் நீங்களாகவே இருக்கும். பொறுப்பை விட்டுவிட ஆசைப்படுவதுதான், உங்களை சுதந்திரமற்றவராக ஆக்கி விடுகிறது.

> மனிதன்,
> உண்மையிலேயே
> மனிதன் ஆகிவிட்டால்
> - பெயரளவில்
> மட்டுமல்ல, ஆனால்
> உண்மையாகவே
> ஆகிவிட்டால் -
> அவனுக்கு எந்த
> விதிகளும்
> தேவைப்படாது.

மேலும், ஒருவர் தனக்குள்ள பொறுப்புகளை எடுத்துக் கொள்கின்ற அந்த தருணத்தில்... ... அதில் எங்கும் ரோஜாக்கள் இருப்பதில்லை, அங்கே முட்களும் இருக்கும்; அங்கு எல்லாமே இனிப்பல்ல, அங்கே அநேக கசப்பான தருணங்களும் இருக்கும் என்பதை நினைவில் கொள்ளுங்கள். இனிப்பு எப்போதுமே கசப்பினால் சமநிலைப் படுத்தப்படுகிறது. அவை இரண்டும் எப்போதும் ஒரே விகிதத்தில் தான் வரும். ரோஜாக்கள் முட்களால் சமன் செய்யப்படுகின்றன. பகல்கள் இரவுகளாலும், கோடைகள் குளிர்காலங்களாலும் சமன் செய்யப்படுகின்றன. இப்படிப்பட்ட எதிர் எதிர் துருவங்களுக்கு இடையே ஒரு சமநிலையை வாழ்க்கை ஏற்படுத்துகிறது. ஆகவே, யார் ஒருவர் இப்படிப்பட்ட அழகுகள், கசப்புகள், சந்தோஷங்கள், துக்கங்கள் இவற்றையெல்லாம் ஏற்றுக் கொண்டு, தான் தானாகவே இருக்கின்ற

அந்த பொறுப்பை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கின்றாரோ, அவரால் தான் சுதந்திரமாக இருக்க முடியும். இப்படிப்பட்ட மனிதன் மட்டுமே சுதந்திரமாக இருக்க முடியும்.

வாழ்க்கையை அதன் துக்கம், ஆனந்தம் இவற்றோடு முழுவதுமாய் வாழ்ந்து பாருங்கள் - இரண்டுமே உங்களுடையவை தான். மேலும், துக்கம் இல்லாமல் சந்தோஷம் இருக்க முடியாது என்பதையும், மரணம் இல்லாமல் வாழ்வு இருக்க முடியாது என்பதையும் எப்போதும் நினைவில் கொள்ளுங்கள். விஷயங்கள் அப்படித்தான் இருக்கின்றன. அதனைக் குறித்து எதுவும் செய்ய முடியாது. அது தான் வாழ்க்கை உள்ள விஷயங்களின் இயற்கை நிலை, தாவோ என்னும் இயல்பு நிலை.

நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ, அப்படியே ஏற்றுக் கொள்கின்ற பொறுப்பினை, உங்களிடம் உள்ள எல்லா நல்லதுமான, எல்லா கெட்டதுமானவற்றோடும், உங்களிடம் உள்ள எல்லா அழகானவற்றோடும், எல்லா அழகில்லாதவற்றோடும் ஏற்றுக் கொள்கின்ற அந்தப் பொறுப்பினை எடுத்துக் கொள்ளுங்கள். அப்படி ஏற்றுக் கொள்ளும் போது, அவை எல்லாவற்றையும் கடந்து செல்கின்றதொரு நிலை வரும். அப்போது ஒருவர் விடுதலை பெற்றவராகிவிடுகிறார்.

## சமூகமும் தனிமனித விடுதலையும் - ஒரு பேட்டி

மனித இனத்திற்கு சமுதாய விதிமுறைகள் அடிப்படைத் தேவையாக இருப்பது போல் தெரிகிறது. இருப்பினும், எந்த ஒரு சமூதாயமும், மனிதன் தன்னை அறிந்து கொள்வதற்கு ஒரு போதும் உதவவில்லை. எனவே, இந்த சமுதாயத்திற்கும் தனி மனிதனுக்கும் இடையே என்ன வகையான உறவு இருக்கிறது என்று தயவுசெய்து விளக்க முடியுமா, மேலும் அவர்கள் வளர்ச்சி அடைவதற்கு ஒருவருக்கொருவர் உதவுவது எப்படி?

இது மிகவும் சிக்கலான கேள்வி. ஆனால், மிகவும் அடிப்படையானதும் கூட. இங்குள்ள இயற்கை முழுவதிலும், மனிதனுக்கு மட்டுமே விதிமுறைகள் தேவைப்படுகிறது. வேறு எந்த மிருகத்திற்கும் விதிகள் தேவையில்லை.

நாம் புரிந்து கொள்ள வேண்டிய முதல் விஷயம் என்னவென்றால், இந்த விதிகளில் ஏதோ செயற்கைத் தனம் இருப்பதைத் தான். மனிதனுக்கு இவை தேவைப்படுவதற்கான காரணம் என்னவென்றால், அவன் மிருகமாக இருந்த நிலையை விட்டுவிட்டான். என்றாலும்கூட,

அவன் இன்னும் மனித இனமாக ஆகவில்லை. அவன், இரண்டிற்கும் இடையில் இருக்கிறான். அதனால் தான், இத்தனை விதிகள் தேவைப்படுகிறது. அவன் மிருகமாகவே இருந்திருந்தால், இங்கே எந்த தேவையும் இருந்திருக்காது. மிருகங்கள் எந்தவிதமான விதிமுறைகளும், அரசியல் சாசனங்களும், சட்டங்களும், நீதிமன்றங்களும் இல்லாமலேயே, முற்றிலும் நலமாக வாழ்கின்றன. மனிதன், உண்மையிலேயே மனிதன் ஆகிவிட்டால் - பெயரளவில் மட்டுமல்ல, உண்மையாகவே ஆகிவிட்டால் - அவனுக்கு எந்த விதிகளும் தேவைப்படாது.

இதுவரை மிகச் சில மக்கள் தான் அதை அடைந்துள்ளனர். உதாரணமாக, சாக்ரட்டீஸ், ஜரதுஷ்ட்ரர், போதிதர்மர் ஆகிய இவர்களைப் போன்ற மனிதர்களுக்கு எந்த விதிமுறைகளும் தேவையில்லை. மற்றவர்களுக்கு எந்தவிதமான தீங்கும் செய்யக் கூடாது என்பதில் அவர்கள் போதுமான விழிப்புணர்வுடன் இருக்கின்றனர். அவர்களுக்கு எந்த சட்டமும், எந்த அரசியல் சாசனமும் தேவையில்லை. இந்த முழு சமுதாயமும் உண்மையிலேயே மனித சமுதாயமாக பரிணாம வளர்ச்சி அடைந்துவிட்டால், அங்கே அன்பு இருக்கும்; ஆனால், அங்கே சட்டங்கள் இருக்காது.

பிரச்சனை என்னவென்றால், மனிதனுக்கு சட்டங்களும், அரசாங்கங்களும், நீதிமன்றங்களும், ராணுவங்களும், காவல்துறையும் தேவைப்படுகிறது. ஏனெனில், அவன் மிருகத்தின் இயல்பான நடவடிக்கைகளைத் தொலைத்துவிட்டான். அவன் இன்னமும் அதற்கு பதிலாக இன்னொரு புதிய இயல்பு நிலையை மீண்டும் பெறவில்லை. அவன் இரண்டும் இடையே இருக்கிறான். அவன் எங்கும் இல்லை, அவன் ஒருவித குழப்பத்தில் இருக்கிறான். அந்தக் குழப்பத்தை கட்டுப்படுத்துவதற்கு இந்த விஷயங்கள் எல்லாம் தேவைப்படுகிறது.

இந்தப் பிரச்சனை மேலும் சிக்கலாகிவிட்டது. ஏனெனில், மனிதனை கட்டுப்படுத்துவதற்காக உருவாக்கப்பட்ட இந்த சக்திகள் - மதங்கள், அரசாங்கங்கள், நீதிமன்றங்கள் - ஆகிய இவைகள் மிகவும் பலம் வாய்ந்தவையாக வளர்ந்துவிட்டன. அவைகளுக்கு அதிகாரங்கள் கொடுக்கப்பட வேண்டும்; இல்லையெனில், அவைகளால் மக்களை எப்படி கட்டுப்படுத்த முடியும்? ஆகவே, நாமே சுயமாக தேடிக் கொண்டதொரு அடிமைத்தனத்தில் நாம் வீழ்ந்துவிட்டோம். மேலும், இப்போது அந்த அமைப்புகள் மிகவும் பலம் வாய்ந்தவையாக ஆகிவிட்டபடியால், அவைகள் தங்களின் சுயலாபத்தை விட்டுவிட விரும்பவில்லை. அவைகள், மனிதன் வளர்ச்சி அடைவதை விரும்பவில்லை.

மனிதனும் இந்த சமுதாயமும், தனி மனிதனும் இந்த சமூகமும் எப்படி வளர முடியும் என்று நீ என்னிடம் கேட்கிறாய். இதில் உள்ள பிரச்சனையை நீ இன்னமும் புரிந்து கொள்ளவேயில்லை. தனி மனதன் வளர்ந்தால், அதன் பின்னர் இந்த சமூகம் கரைந்து போய்விடும். தனி மனிதர்களை வளர்ச்சியடையாமல் இருக்கச் செய்வதினால் தான் இந்த சமூகம் நிலைத்து நிற்கிறது. இந்த அதிகாரங்கள் எல்லாம் பல நூற்றாண்டுகளாக மனிதனைக் கட்டுப்படுத்தி வந்துள்ளன. மேலும், அவைகள் தங்களின் அதிகாரத்தையும் கௌரவத்தையும் அனுபவித்து வந்துள்ளன. அவைகள், மனிதனை வளர்ச்சியடைவதற்கு விடத் தயாராக இல்லை. இந்த அமைப்புகள் தாங்கள் பயனற்றதாக போகுமளவுக்கு மனிதன் வளர்ச்சி அடைய விட்டுவிடத் தயாராக இல்லை. நீ புரிந்து கொள்வதற்கு, உனக்கு உதவ அநேக சூழ்நிலைகள் இங்கு உள்ளன.

25 நூற்றாண்டுகளுக்கு முன்பு சீனாவில் நடந்தது இது :

லாவோத் ஸு மிகவும் புகழ்பெற்ற ஞானியாக இருந்தார். சந்தேகமில்லாமல், உலகில் தோன்றிய மிகவும் புத்திசாலிகளில் அவரும் ஒருவர். சீன நாட்டின் சக்கரவர்த்தி, அவரை தனது நாட்டின் உச்ச நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியாக இருக்கும்படி மிகவும் பணிவுடன் கேட்டுக் கொண்டார். ஏனெனில், அவரைப் போல வேறு யாராலும் நாட்டின் சட்டங்களைக் குறித்து வழிகாட்ட முடியாது. ஆனால், அவரோ "நான் அதற்குச் சரியான ஆள் கிடையாது," என்று சக்கரவர்த்தியிடம் கூறினார். ஆனால், அந்தச் சக்கரவர்த்தி இவரை மிகவும் வற்புறுத்தினார்.

அதற்கு லாவோத் ஸு, "நான் சொல்வதை நீங்கள் கேட்க மறுக்கிறீர்கள். எனவே, வெறுமனே நான் ஒரே ஒருநாள் உங்களது நீதிமன்றத்தில் இருந்தால் போதும். அதன் பின்னர் நீங்கள், நான் அதற்கு சரியான ஆள் அல்ல என்பதைத் தெரிந்து கொள்வீர்கள். ஏனெனில், உங்களது இந்த அமைப்பு தவறானதாகும். அடக்கத்தின் காரணமாக நான் இந்த உண்மையை உங்களிடம் சொல்லாமலிருந்தேன். ஒன்று, நான் இருக்க வேண்டும் அல்லது உங்களது சட்டம், உங்களது ஆணை, உங்களது சமுதாயம் இருக்க வேண்டும். எனவே, வேண்டுமானால் நாம் முயற்சி செய்து பார்ப்போம்," என்று கூறினார்.

முதல் நாள், அந்த நீதிமன்றத்திற்கு, அந்த தலைநகரத்திலேயே மிகப்பெரிய செல்வந்தரின் வீட்டில் கிட்டத்தட்ட பாதி செல்வங்களைக் கொள்ளையடித்த ஒரு திருடன் கொண்டு வந்து நிறுத்தப்பட்டான். லாவோத் ஸு, அந்த வழக்கை கவனித்தார். அதன் பிறகு அவர், 'அந்தச் செல்வந்தரும், அந்தத் திருடனும் ஆகிய இருவரும் ஆறு மாதங்கள் சிறைக்குச் செல்ல வேண்டும்' என்று கூறினார்.

அதைக் கேட்ட செல்வந்தர், "நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? நான் திருட்டு கொடுத்துள்ளேன். என் வீட்டில் கொள்ளையடிக்கப்பட்டுள்ளது. அப்படி இருக்கும் போது, இது எந்த வகையான தீர்ப்பு? அந்த திருடனுக்கு கொடுத்த அதே கால அளவு நானும் சிறைக்குப் போக வேண்டும் என்று கூறுவது எந்த விதத்தில் நியாயமாகும்?" என்று கேட்டார்.

அதற்கு லாவோத் ஸு, "நான் அந்த திருடனுக்கு நிச்சயமாக அநீதி இழைத்துவிட்டேன். நீங்கள் திருடனைவிட, இன்னும் அதிக காலம் சிறைவாசம் இருக்க வேண்டும். ஏனெனில், நீங்கள் அளவுக்கு அதிகமாக உங்களிடம் பணத்தை சேர்த்து வைத்துக் கொண்டதால், அநேக மக்களுக்கு அந்தப் பணம் கிடைக்காமல் போய்விட்டது. ஆயிரக்கணக்கான மக்கள் ஏழைகளாக இருக்கின்றனர். ஆனால், நீங்களோ மேலும், மேலும் சேர்த்துக் கொண்டே போகிறீர்கள். இது எதற்காக? உங்களது இந்தப் பேராசை தான் திருடர்களை உருவாக்கியுள்ளது. நீங்கள் தான் பொறுப்பு. முதல் குற்றம் உங்களுடையது தான்," என்று கூறினார்.

லாவோத் ஸுவின் தர்க்கவாதம் முற்றிலும் தெளிவானது.

இங்கே அநேக ஏழை மக்களும், ஒரு சில பணக்காரர்களும் மட்டுமே இருப்பார்களேயானால், உங்களால் திருடர்களைத் தடுத்து நிறுத்த முடியாது; உங்களால் திருட்டைத் தடுக்க முடியாது. இதைத் தடுத்து நிறுத்துவதற்கான ஒரே வழி என்னவென்றால், ஒவ்வொருவருக்கும் அவர்களது தேவைகளை நிறைவேற்றும் அளவுக்கு பணம் இருக்கும்படியானதொரு சமுதாயத்தை, பேராசையினால் யாரும் தேவையில்லாமல் பணத்தைச் சேர்த்து வைத்துக் கொள்ளாததொரு சமுதாயத்தை பெற்றிருந்தால் மட்டுமே முடியும்.

அந்த செல்வந்தர், லாவோத் ஸுவிடம், "நீங்கள் என்னைச் சிறைக்கு அனுப்புவதற்கு முன்பு, நான் சக்கரவர்த்தியைப் பார்க்க விரும்புகிறேன். ஏனெனில், இது அரசியல் சாசனத்தின்படி இல்லை, இந்த நாட்டின் சட்டத்தின்படி இல்லை," என்றார்.

அதற்கு லாவோத் ஸு, "அது அரசியல் சாசனத்தின் தவறாக, இந்த நாட்டின் சட்டத்தின் தவறாக இருக்கலாம். நான் அதற்கு பொறுப்பாக முடியாது. போய், சக்கரவர்த்தியைப் பாருங்கள்," என்றார்.

அந்த செல்வந்தர் சக்கரவர்த்தியிடம் சென்று அவரிடம், "இங்கே பாருங்கள், இந்த ஆளை உடனடியாக இந்தப் பதவியிலிருந்து நீக்க

வேண்டும்; அவர் மிகவும் ஆபத்தானவர். இன்று நான் சிறைக்குச் செல்கிறேன். நாளை நீங்களும் சிறைக்குச் செல்வீர்கள். நீங்கள் உங்களைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமெனில், இந்த மனிதரை வெளியேற்ற வேண்டும். இவர் மிகவும் அபாயகரமானவர். ஆனால், அவர் கூறுவது பகுத்தறிவுக்கு பொருந்தியதாகவே உள்ளது. அவர் கூறுவது சரிதான். என்னால் அதைப் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால், அவர் நம்மையெல்லாம் அழித்து விடுவார்," என்று கூறினார்.

அந்த சக்கரவர்த்தியும் இதை நன்றாகப் புரிந்து கொண்டார். "இந்த செல்வந்தர் குற்றவாளி என்றால், அதன் பிறகு நான் தான் இந்த தேசத்தின் மிகப்பெரிய குற்றவாளி ஆகிவிடுவேன். என்னையும் சிறைக்கு அனுப்ப லாவோத் ஸு தயங்கமாட்டார்," என்று நினைத்தார்.

உடனே,. லாவோத் ஸு அந்தப் பதவியிலிருந்து விடுவிக்கப் பட்டார். அப்போது அவர், "நான் முன்பே உங்களிடம் கூறினேன்; நீங்கள் தேவையில்லாமல் எனது நேரத்தை வீணாக்கிவிட்டீர்கள். நான் அதற்கு சரியான ஆள் அல்ல என்று உங்களிடம் கூறினேன். உண்மை என்னவென்றால், உங்களது சமூகம், உங்களது சட்டம், உங்களது அரசியல் சாசனம் ஆகியவை சரியில்லை. இப்படிப்பட்ட தவறானதொரு வழிமுறையை நடத்திச் செல்வதற்கு உங்களுக்கு ஒரு தவறான ஆள் தான் தேவை," என்று கூறினார்.

பிரச்சனை என்னவென்றால், மனிதன் குழப்பத்தில் விழுந்துவிடக் கூடாது என்பதற்காக உருவாக்கப்பட்ட இந்த அதிகார மையங்கள், இப்போது அதிக பலம் பெற்று இருப்பதால், அவைகள் மனிதனைச் சுதந்திரமாக வளரவிட விரும்புவதில்லை. ஏனெனில், நீங்கள் வளர்ச்சி அடைகின்ற தகுதியைப் பெற்றுவிட்டால், தனி மனிதனாக ஆகிவிட்டால், உஷாராகவும் விழிப்புணர்வுடனும் தன்னுணர்வுடனும் இருந்துவிட்டால், இப்படிப்பட்ட அமைப்புகள் இங்கே தேவைப்படாது. அந்த அதிகார வர்க்கத்தினர், தங்களது வேலையை இழந்துவிடுவார்கள். அவர்களது வேலை போய்விடும் போது, அவர்கள் தங்களது கௌரவத்தையும் இழந்துவிடுவார்கள். தங்களது அதிகாரத்தையும், தங்களின் தலைமையையும், தங்களின் மதகுரு நிலையையும், தங்களின் போய் ஆண்டவர் நிலையையும் இழந்துவிடுவார்கள். எல்லாமே போய்விடும். ஆகவே, இந்த சமுதாயத்தின் பாதுகாப்பிற்காக யார் தேவைப்பட்டார்களோ, அவர்களே இப்போது இந்த மனித இனத்தின் விரோதிகளாக மாறிவிட்டார்கள்.

இத்தகைய மக்களுக்கு எதிராகப் போராடுவது எனது அணுகுமுறை அல்ல; ஏனெனில், அவர்கள் அதிகாரம் மிக்கவர்கள்.

அவர்கள் ராணுவத்தை வைத்துள்ளனர். அவர்கள் பணத்தை வைத்திருக்கின்றார்கள். அவர்களிடம் எல்லாம் உள்ளது. நீ அவர்களுக்கு எதிராகப் போராட முடியாது, நீ அழிக்கப்பட்டு விடுவாய். இந்தக் குழப்பத்திலிருந்து விடுபடுவதற்கென ஒரே வழி, நீ உனது சொந்த தன்னுணர்வில் அமைதியாக வளர்ச்சி அடைய ஆரம்பிப்பது மட்டும் தான். அவர்களால் அதை எந்த விதத்திலும் தடுக்க முடியாது. உண்மையில், உனக்குள் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதும் கூட அவர்களால் அறிய முடியாது.

உனக்கு ஏற்படக்கூடிய அகமாற்றத்திற்கான ரசவாதத்தை நான் உனக்கு அளிக்கிறேன். உனது அக இருப்பு நிலையை மாற்று. மேலும், அப்படி மாற்றிய அந்த நொடிப் பொழுதே, முற்றிலும் உருமாற்றம் அடைந்த அந்த நொடிப் பொழுதே, நீ இந்த சிறை வாசத்திலிருந்து உடனே வெளியேறிவிட்டதை, நீ இனிமேல் அடிமை இல்லை என்பதைக் கண்டு கொள்வாய். உனது குழப்பத்தினால் தான் நீ இதுவரை அடிமையாய் இருந்தாய்.

ரஷ்யப் புரட்சியின் போது நடந்தது இது :

ரஷ்யப் புரட்சி வெற்றி கண்ட அன்றைய தினம், மாஸ்கோவில் ஒரு பெண்மணி நடு ரோட்டில் நடந்து செல்ல ஆரம்பித்தாள். காவல்துறையினர் அவளிடம், "இது சரியல்ல. நீங்கள் நடுரோட்டில் நடந்து செல்லக் கூடாது!" என்றனர்.

அதற்கு அந்தப் பெண்மணி, "இப்போது தான் நாம் சுதந்திரமாகிவிட்டோமே," என்றாள்.

ஆனால், நீ விடுதலை அடைந்தாலும் கூட, போக்குவரத்து விதிகளை நீ பின்பற்றத் தான் வேண்டும்; இல்லையெனில், போக்குவரத்து சாத்தியமாகாது. வாகனங்களும் மக்களும் அவர்கள் விருப்பம் போல் போய்க் கொண்டிருந்தால், விருப்பம் போல் திரும்பிக் கொண்டிருந்தால், போக்குவரத்துக் கட்டுப்பாட்டு விளக்குகளைக் கவனிக்காமல் போக ஆரம்பித்தால், மக்கள் வெறுமனே விபத்துக்குள்ளாகி கொல்லப்படுவார்கள். இது, ராணுவத்தை உள்ளே கொண்டு வந்துவிடும். நீங்கள் இடது பக்கமோ அல்லது வலது பக்கமோ இப்படி அந்தந்த நாட்டின் சட்டத்தின்படி நடந்து செல்வதற்கு, உங்களை நிர்பந்தம் செய்ய காவல்துறை வந்துவிடும். எனவே, யாரும் நடுவில் நடந்து செல்ல முடியாது. அதன் பின்னர், துப்பாக்கி முனையில் நீங்கள் விதிகளைப் பின்பற்றும்படி செய்ய வேண்டியதாகிவிடும். நான் எப்போதும் அந்தப் பெண்மணியை நினைவில் கொள்வேன். அவள் ஒரு நல்ல குறியீடு.

சுதந்திரம் என்றால், குழப்பம் என்று அர்த்தமாகாது. சுதந்திரம் என்றால் அதிக பொறுப்புணர்வு, அதாவது உங்களது வாழ்க்கையில் யாரும் குறுக்கிடாத அளவுக்கு அதிக பொறுப்புணர்வுடன் இருப்பது என்று தான் அர்த்தம். அப்போது நீ தனிமையில் விட்டுவிடப்பட முடியும். அப்போது, காவல்துறை உன் வழியில் குறுக்கிட வேண்டிய அவசியம் இருக்காது; இந்த அரசாங்கம் உனது வழியில் குறுக்கிட வேண்டிய அவசியம் இருக்காது; இந்த சட்டம் உன்னை ஒன்றும் செய்ய முடியாது. நீ வெறுமனே இந்த உலகிற்கு வெளியில் இருப்பாய்.

இது தான் எனது அணுகுமுறை. நீங்கள் உண்மையில் இந்த மனித இனத்தை மாற்றம் செய்ய விரும்பினால், ஒவ்வொரு தனி மனிதனும் சுயமாகவே, தானாகவே வளர்ச்சி அடைய ஆரம்பிக்க வேண்டும். மேலும், வளர்ச்சி அடைவதற்கு உண்மையில் ஒரு கூட்டம் தேவையில்லை.

வளர்ச்சி என்பது, ஒரு தாயின் கருப்பையில் ஒரு குழந்தை வளர்வதைப் போன்று இருக்க வேண்டும். அங்கே கூட்டம் தேவையில்லை. தாய் மட்டும் கொஞ்சம் கவனமாக இருக்க வேண்டும். உனக்குள் ஒரு புதிய மனிதன் பிறக்க வேண்டும். ஒரு புதிய மனித இனத்தின் கருப்பையாக நீ ஆகிவிட வேண்டும். அதை யாரும் தெரிந்து கொள்ள முடியாது. மேலும், யாருக்கும் அது தெரியாமல் இருப்பது நல்லது. நீ வெறுமனே உனது வேலையை சாதாரணமாகச் செய்து கொண்டிரு, இந்த சாதாரண உலகில் வாழ்ந்து கொண்டிரு, மிகவும் எளிமையாகவும் சாதாரணமாகவும் இருந்து கொண்டிரு. ஒரு கிளர்ச்சியாளனாகவோ அல்லது எதிர்ப்பாளனாகவோ ஆகிவிடாதே. அது உனக்கு உதவாது. அது வெறும் முட்டாள்தனம். நீ விரக்தியில் தான் அப்படி மாறுகிறாய் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனாலும்கூட, அது பைத்தியக்காரத்தனம் தான். இந்தச் சமுதாயம் புத்தி சுவாதீனமற்று இருக்கிறது. மேலும், விரக்தியினால் நீயும் புத்தி சுவாதீனம் இல்லாமல் ஆகிவிட வேண்டுமா? இந்த சமுதாயம் இப்படிப்பட்ட மக்களைக் கண்டு அஞ்சுவதில்லை, யார் எல்லாம் தங்களுக்குள் மையம் கொண்டு இருக்கிறார்களோ, தங்களுக்குள் தன்னுணர்வுடன் இருக்கிறார்களோ, இந்த சமுதாயச் சட்டங்கள் யாருக்கு பயனற்றதாக ஆகிவிடுகிறதோ, அவர்களைப் பார்த்து மட்டுமே இந்த சமுதாயம் பயப்படும். அவர்கள் எப்போதும் சரியானதைத் தான் செய்வார்கள். அவர்கள், நீங்கள் அதிகாரவர்க்கம் என்றழைக் கிறவர்களின் பிடிக்குள் மாட்டாமல், அதற்கு அப்பால் இருப்பார்கள்.

தனி மனிதர்கள் வளர்ச்சி அடைந்தால், இந்த சமுதாயம் சிறுத்துவிடும். இந்த சமுதாயம் என்பது எப்படி அறியப்

பட்டிருக்கிறதோ, அதாவது இந்த அரசாங்கம், இந்த ராணுவம், நீதிமன்றங்கள், காவல்துறை, சிறைச்சாலை, இவற்றால் ஆன இந்த சமுதாயம் சிறுத்துவிடும், நிச்சயமாக சிறுத்துவிடும். ஏனெனில், இங்கு அநேக மக்கள் இருப்பதால், மக்கள் கூட்டத்திற்கு புதிய உருவங்கள் வரும். நான் அவற்றை 'சமூகம்' என்று அழைக்க விரும்பவில்லை. அந்த வார்த்தைகளுக்கு இடையே உள்ள குழப்பத்தை தவிர்ப்பதற்காக, நான் இந்த புதிய மக்கள் கூட்டத்தை ஒரு கம்யூன் (COMMUNE) என்று அழைக்கிறேன். இந்த வார்த்தை மிகவும் சிறப்புடையது; இதற்கு மக்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து வாழ்கின்ற ஒரு இடம் மட்டுமல்ல, மக்கள் இங்கே ஒருவருக்கொருவர் ஆழ்ந்த தொடர்புடையவர்களாகவும் இருக்கின்ற ஒரு இடம் என்று தான் அர்த்தமாகும்.

மக்கள் ஒன்றாக வாழ்வது என்பது ஒரு விஷயம்; நாம் அதைத் தான் செய்து கொண்டிருக்கிறோம்; ஒவ்வொரு மாநகரிலும், ஒவ்வொரு நகரிலும் ஆயிரக்கணக்கான மக்கள் ஒன்றாகத் தான் வாழ்கிறார்கள் - ஆனால், அவர்களுக்குள் என்ன ஒன்றுபடுதல் உள்ளது? அவர்களுக்குத் தங்களின் பக்கத்து வீட்டுக்காரரைப் பற்றி கூடத் தெரியாது. அதே வானளாவிய கட்டிடத்தில் தான் எல்லோரும் இருப்பார்கள். ஆயிரக்கணக்கானவர்கள் அதில் வசிப்பார்கள். ஆனால், அவர்கள் அங்கு வசிக்கின்ற மற்றவர்களைப் பற்றி ஏதும் தெரிந்திருக்க மாட்டார்கள். அது, ஒன்றுபட்டு வாழ்தல் அல்ல. ஏனெனில், அங்கே ஒருவருக்கொருவர் தொடர்பு இல்லை. அது வெறுமனே ஒரு கூட்டம், அவ்வளவு தான்; அது ஒரு கம்யூன் அல்ல. ஆகவே, நான் இந்த 'சமூகம்' என்கிற வார்த்தைக்கு மாற்றாக, கம்யூன் என்கிற வார்த்தையைக் கூறுகிறேன்.

சமூகம் ஒரு குறிப்பிட்ட கொள்கைகளுக்காக இருக்கிறது. நீ அதை விலக்க வேண்டும். இல்லையெனில், இந்த சமுதாயம் மறையாது. இந்த சமுதாயத்தின் முதலாவது மற்றும் முக்கியமானதொரு பிரிவு 'குடும்பம்' என்பதாகத் தான் இருந்து வருகிறது. இந்த குடும்பம் என்பது, இப்போது இருப்பதைப் போன்று இன்னமும் இருக்குமேயானால், அதன் பிறகு இந்தச் சமூகம் என்பது மறைந்து போகாது; இந்த திருச்சபை என்பது மறையாது; அதன் பின்னர் இந்த மதம் என்பதும் மறையாது. அதன் பின்னர், நம்மால் ஓர் உலகம், ஒரே மனித இனம் என்பதை உருவாக்க முடியாது.

மனதளவில் குடும்பம் என்பது கடந்த கால விஷயமாகிவிட்டது, குடும்பம் என்பது எப்போதுமே இங்கு இருந்து வந்தது என்பதல்ல; குடும்பம் என்பது இல்லாமலும் கூட ஒரு காலம் இருந்துள்ளது, மக்கள் பழங்குடிகளாக வாழ்ந்தனர். தனிப்பட்ட சொத்துரிமையினால் தான்

குடும்பம் என்பதே இங்கு வந்தது. மற்றவர்களைவிட அதிக சொத்துக்களைச் சம்பாதிக்க முடிந்த பலம் வாய்ந்த மக்கள் இங்கு இருந்தார்கள். மேலும், அவர்கள் அந்தச் சொத்துக்கள் தங்களுக்குப் பிறகு தங்களது குழந்தைகளுக்கு கொடுக்கப்பட வேண்டும் என்று விரும்பினார்கள். ஆகவேதான் குடும்பம் பிறந்தது. அதுவரையில் குடும்பம் என்கிற கேள்விக்கே இடமில்லை. ஆணும் பெண்ணும் காதலினால் சந்தித்தார்கள். அப்போது அங்கே திருமணங்களும் இல்லை, குடும்பமும் இல்லை. ஆனால், இந்த சொத்து என்பது வந்தவுடன், ஆண் பெண்ணை தன்னுடையதாக்கிக் கொள்ள ஆரம்பித்தான். அவன் பெண்ணையும்கூட தனது சொத்தின் ஒரு பகுதியாக மாற்றிவிட்டான்.

இந்திய மொழிகளில் பெண் என்பவள் உண்மையில் 'சொத்து' என்றுதான் அழைக்கப்படுகிறாள். சீனாவில் பெண் என்பவள் ஒரு சொத்து என்பதைவிட, இன்னும் மோசம். ஏனெனில், அங்கே ஒரு கணவன் தனது மனைவியை கொன்று போட்டாலும்கூட, அங்கு அவனுக்கு எதிராக எந்தச் சட்டமும் கிடையாது. அது, குற்றம் புரிந்ததாக ஆகாது. அங்கே நீ உனது சொந்தச் சொத்தை அழிப்பதற்கு முழுமையான சுதந்திரம் உண்டு. நீ உனது வீட்டு மரச்சாமான்களை எரிக்க முடியும், உன்னால் உனது வீட்டையும் கூட எரிக்க முடியும். அது குற்றம் ஆகாது. ஏனெனில், அது உனது வீடு. இதே போன்று, நீ உனது மனைவியையும் கொன்றுவிட முடியும் ... ...

தனிப்பட்ட சொத்து என்று வந்ததனால், பெண்ணும் தனிப்பட்ட சொத்தாக ஆகிவிட்டாள். மேலும், தனது மனைவி மூலம் பிறந்த குழந்தை உண்மையில் தன்னுடையது தான் என்பதை முழுமையாக நிச்சயப்படுத்திக் கொள்வதற்காக, ஆண் எல்லாவிதமான தந்திர யுக்திகளையும் பயன்படுத்தினான்.

ஆனால், அப்போது அது ஒரு கடினமான பிரச்சனையாக ஆகிவிட்டது. தந்தையால் ஒரு போதும் முழுமையான நிச்சயத்துடன் இருக்க முடியாது. தாயார் மட்டுமே இந்தக் குழந்தை யாருடையது என்பதை அறிவாள். எனவே, அந்தப் பெண்ணுக்கு எதிராக எல்லாவிதமான தடைகளையும் அந்தத் தந்தை உருவாக்கினார். அப்போது தான் அந்தப் பெண் வேறு ஆண்களுடன் தொடர்பு வைத்துக் கொள்ளாமல் இருக்க முடியும். அதற்கான எல்லா சாத்தியங்களும், எல்லாக் கதவுகளும் மூடப்பட்டன.

இப்போது கோயில்களுக்கும், தேவாலயங்களுக்கும் ஏன் வயதான பெண்மணிகளே செல்கிறார்கள் என்பது, ஏதோ இப்போது மட்டுமே நடக்கின்ற ஒரு காரியம் அல்ல. ஏனெனில், பல நூற்றாண்டுகளாக பெண்கள் செல்வதற்கு அனுமதிக்கப்பட்ட ஒரே இடம், அவைகள் தான். ஏனென்றால், தேவாலயம் என்பது குடும்பத்தை பாதுகாப்பது என்று எண்ணப்பட்டது. அதேபோன்று, இந்த குடும்பம் என்பது போய்விட்டால், திருச்சபையும் போய்விடும் என்பதும் அவர்களுக்கும் தெரியும். மேலும், இந்த காதல் சமாச்சாரங்கள் நடப்பதில் தேவாலயங்கள் கடைசி இடமாகத் தான் இருக்க முடியும். அதற்கான எல்லா முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளையும் அவர்கள் எடுத்து வந்தனர். அங்கிருக்கும் பாதிரியார் பிரம்மச்சாரியாக இருக்க வேண்டும் - இவையெல்லாம் உத்திரவாதங்கள் - பாதிரியார் பிரம்மச்சாரியாக இருக்க வேண்டும்; அவர் பாலுணர்வுக்கு எதிரானவராக இருக்க வேண்டும், அவர் பெண்களுக்கு எதிரானவராக இருக்க வேண்டும், இப்படி பல்வேறு மதங்களில் பல்வேறு வழிகளில் முன்னெச்சரிக்கையுடன் இருந்தனர்.

ஒரு சமணத்துறவி ஒரு பெண்ணை தொடக்கூட முடியாது. உண்மையில், பெண்கள் ஒரு சமணத்துறவியிடம் எட்டு அடியைத் தாண்டி நெருங்கிவரக் கூடாது. பௌத்த மத துறவிகளும், பெண்களைத் தொடுவதற்கு அனுமதிக்கப்படுவதில்லை. மேலும், மத சம்பந்தமான இடங்களுக்குப் பெண்களை அனுமதிக்காத சில மதங்களும் உள்ளன அல்லது அவர்களைத் தனிமைப்படுத்தி வைப்பதற்கான தடுப்புகளை ஏற்படுத்தி இருப்பார்கள். ஆண்கள், அந்தக் கோவில் அல்லது மசூதியில் முக்கியமான பகுதிகளில் இருப்பார்கள். பெண்களுக்கு சிறிய இடம் இருக்கும். அதுவும் தனியாகத் தான் இருக்கும். ஆண்களால் அவர்களைப் பார்க்கக்கூட முடியாது; அங்கு யாரையும் சந்திப்பது என்பது நடக்காது.

இஸ்லாமைப் போன்ற அநேக மதங்கள், தங்களது பெண்களின் முகங்களை மூடி மறைக்கின்றன. முகமதிய பெண்களின் முகம் வெளிரிப் போய் இருக்கும். ஏனெனில், அவைகள் ஒருபோதும் சூரிய ஒளியைப் பார்த்ததில்லை. அவர்களது முகங்கள் மூடப்பட்டிருக்கும். அவர்களது உடல்களும் கூட எல்லா விதத்திலும் மூடப்பட்டிருக்கும். பெண்களை கல்வி கற்க அனுமதிப்பதில்லை. ஏனெனில், கல்வியானது மக்களிடம் வித்தியாசமான சிந்தனையைக் கொடுத்துவிடும். அதன் பின் பெண்கள் சிந்திக்க ஆரம்பித்துவிடுவார்கள், பெண்கள் விவாதம் செய்ய ஆரம்பித்துவிடுவார்கள்.

பெண்கள், சம்பாதிக்கின்ற வேலைக்குக்கூட அனுமதிக்கப் படுவதில்லை. ஏனெனில், அது அவர்களுக்கு சுதந்திரத்தைக் கொடுத்துவிடும். பெண், எல்லா முனைகளிலும் வெட்டப்பட்டாள். அதற்கான எளிய காரணம் என்னவென்றால், ஆண் தனக்குப் பிறக்கும் மகன், உண்மையில் தன்னுடைய மகன் தானா என்பதை உறுதிப்படுத்திக் கொள்வதற்காகத் தான். உண்மையிலேயே, அதிகாரம் படைத்த மக்கள் - உதாரணமாக, அரசர்கள் - அவர்களிடம் இருந்த ஆண் சேவகர்கள் விதையடிக்கப்பட்டார்கள். ஏனெனில், அவர்கள் அரண்மனையில் வேலை செய்து கொண்டும், சேவை செய்து கொண்டும், அங்கும் இங்கும் அலைந்து கொண்டிருப்பவர்கள். அவர்களுக்கு காயடிக்கப்பட வேண்டும். இல்லையெனில் ஆபத்தாகிவிடும். அந்த ஆபத்து எதனால் என்றால், ஒவ்வொரு பேரரசரும் நூற்றுக்கணக்கான மனைவிமார்களைக் கொண்டிருந்தனர். அவர்களில் அநேகம் பேரை அவர் ஒருபோதும் பார்த்தும்கூட இருக்க மாட்டார். இயல்பாகவே அவர்கள் யாரிடமும் காதலில் விழக்கூடும். எனவே, விதையடிக்கப்பட்ட ஆண்கள் தான் அரண்மனைகளில் சேவகம் செய்ய அனுமதிக்கப்பட்டனர். ஏனெனில், அங்குள்ள பெண்கள், இந்த ஆண் சேவகர்களுடன் காதலில் ஈடுபட்டாலும், அவர்களால் குழந்தைகளை உருவாக்க முடியாது. அது தான் முக்கியமான விஷயம்.

எனவே, இந்த குடும்பம் என்பது மறைந்து போய், கம்யூன் என்பதற்கு இடம் கொடுக்க வேண்டும். ஒரு கம்யூன் என்பதற்கு, நாம் நமது எல்லா சக்திகளையும் ஒரே இடத்தில் குவித்து, நமது பணத்தையெல்லாம் ஒரே இடத்தில் குவித்து, எல்லாவற்றையும் ஒன்று சேர்த்துவிட்டால், அதன் பின்னர் அதுவே எல்லா மக்களையும் கவனித்துக் கொள்ளும். குழந்தைகள் அனைவரும் கம்யூனிற்கு சொந்தமாகிவிடுவார்கள். எனவே, அங்கே தனிப்பட்ட பரம்பரை என்கிற கேள்விக்கே இடமில்லை. மேலும், இப்படி நீங்கள் உங்களது எல்லா சக்தியையும், எல்லாப் பணத்தையும், எல்லா மூலதனங்களையும் ஒரே இடத்தில் சேர்த்தால், ஒவ்வொரு கம்யூனும் செல்வச் செழிப்பு மிக்கதாக இருக்க முடியும். மேலும், ஒவ்வொரு கம்யூனும் சமமான வாழ்க்கையை அனுபவிக்க முடியும்.

எனவே, ஒரு பக்கம் தனி மனிதர்கள் வளர்ச்சி அடைந்து கொண்டே வருவதோடு, இந்த கம்யூனும் அருகருகே வளர்ந்து வந்தால், அதன் பிறகு இந்த சமுதாயம் மறைந்து போய்விடும். அதோடு, இந்த சமுதாயத்தால் உருவாக்கப்பட்ட எல்லாத் தீமைகளும் மறைந்து போகும்.

நான் ஒரு உதாரணத்தைக் கொடுக்கிறேன்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு சீனாவில் ஒரு புரட்சிகரமான நடவடிக்கை எடுக்கப்பட்டது. அந்த புதிய முறையின்படி, நோயாளிகள் ஆரோக்கியமாக இருக்கும்வரை தான் மருத்துவருக்கு பணம் கொடுக்கப்படும். அந்த நோயாளி நோயுற்றுப் படுத்துவிட்டால், அதன்பிறகு மருத்துவருக்கு பணம் கிடையாது. இது விநோதமானதாகத் தெரிகிறது. நாமோ நோயுற்று இருக்கும் போது தான் மருத்துவருக்குப் பணம் கொடுக்கிறோம். அதன் பிறகு அவர் நம்மை ஆரோக்கியமானவராக ஆக்குகிறார். ஆனால், இது ஆபத்தானது. ஏனெனில், நீங்கள் அந்த மருத்துவரை உங்களது நோயைச் சார்ந்து இருக்கும்படி செய்துவிடுகிறீர்கள். உங்களது நோய் தான் அவரது ஆதாயம். எந்த அளவுக்கு மக்கள் அதிக நோய்வாய்ப்படுகிறார்களோ, அந்த அளவுக்கு அவரால் சம்பாதிக்க முடியும். அவரது ஆர்வம் ஆரோக்கியத்தில் இருக்காது, நோயில் தான் இருக்கும். எல்லோருமே ஆரோக்கியமாக இருந்துவிட்டால், அதன் பின்னர் அந்த மருத்துவர் ஒருவர் மட்டும் தான் நோயாளியாக இருப்பார்!

இப்படிப்பட்டதொரு புரட்சிகரமான கருத்தை அவர்கள் கொண்டு வந்தனர்; மிகவும் செயல்படுத்தக் கூடியதும் ஆகும். இதில் ஒவ்வொரு மனிதரும் அவன் அல்லது அவளுக்கென்று சொந்தமாக ஒரு மருத்துவரை வைத்திருப்பார்கள். மேலும், அந்த மனிதர்கள் எதுவரை ஆரோக்கியமாக இருக்கிறார்களோ, அதுவரை ஒவ்வொரு மாதமும் அந்த மருத்துவருக்கு சம்பளம் கொடுக்கப்படும். அந்த மனிதரை ஆரோக்கியமாக வைத்திருக்க வேண்டியது அந்த மருத்துவரின் கடமை. மேலும், இயல்பாகவே அவர் அதைச் செய்துவிடுவார். ஏனெனில், அவருக்கு அதற்காகத் தான் சம்பளம் கொடுக்கப்படுகிறது. ஒருவர் நோய்வாய்ப்பட்டால், அந்த மருத்துவருக்கு சம்பளம் இழப்பாகிவிடும். மேலும், அங்கு கொள்ளை நோய் ஏற்பட்டால் அந்த மருத்துவர் திவாலாக வேண்டியது தான்.

ஆனால், இப்போது நிலைமை நேர் எதிரானதாக உள்ளது. இது, நான் கேள்விப்பட்ட கதை :

மருத்துவர் ஒருவர் முல்லா நஸ்ருதீனிடம் வந்து, "நீங்கள் எனக்கு இன்னும் பணம் தரவில்லை. நானும் உங்களிடம் திரும்பத் திரும்ப வந்து நினைவுபடுத்தி இருக்கிறேன். நான் தான் உங்களது குழந்தையின் அம்மை நோயைக் குணப்படுத்தினேன். நீங்கள் கண்டு கொள்ளாமல் இருக்கிறீர்களே," என்று கேட்டார்.

அதற்கு முல்லா, "நான் கூறுவதை நீங்கள் கேளுங்கள், இல்லையெனில் நான் உங்கள் மீது நீதிமன்றத்தில் வழக்கு தொடருவேன்," என்றார்.

அதைக் கேட்ட மருத்துவர், "இது ஆரோக்கியமாக உள்ளது... நான் தானே உங்களது குழந்தையை குணப்படுத்தினேன்," என்றார்.

அதற்கு முல்லா, "ஆம், அது எனக்குத் தெரியும். ஆனால், இந்த கொள்ளை நோயை இந்த நகரம் முழுவதும் பரப்பியது யார்? என் குழந்தைதானே! ஆகவே, நீங்கள் இதனால் சம்பாதித்த பணத்தை, என்னுடன் பகிர்ந்து கொள்ள வேண்டும்," என்றார்.

அவர் கூறியதும் சரிதான். அவரது குழந்தை ஒரு மாபெரும் வேலையைச் செய்துள்ளது. மேலும், அன்றைய நாளில் இருந்து அந்த மருத்துவர் பணத்தைக் கேட்பதற்காக மீண்டும் ஒருபோதும் திரும்பி வரவில்லை. முல்லாவின் ஆராய்ச்சி சரியானது தான். அந்தக் கொள்ளை நோயால், அந்த மருத்துவர் அதிகம் சம்பாதித்துவிட்டார்.

ஆனால், இது மிகவும் ஒரு விநோதமான முறையாகும். இந்த கம்யூனில் உள்ளவர்களை ஆரோக்கியமாக வைத்திருப்பதற்கு, மருத்துவருக்கு இந்த கம்யூன் பணம் கொடுக்கும். ஆனால், இந்த கம்யூனில் யாருக்காவது நோய் ஏற்பட்டால், அந்த மருத்துவரின் சம்பளம் நிறுத்தப்படும். எனவே, இப்போது ஆரோக்கியம் தான் மருத்துவரின் வியாபாரமாக இருக்குமேயொழிய, நோய் அவரது வியாபாரமாக இருக்காது. மேலும், கீழ்க்கண்ட வேறுபாட்டை நீ காணலாம். மேலைநாடுகளில் மருத்துவத் தொழிலானது 'மருந்து' என்று அழைக்கப்படுகிறது. அது நோயோடு சம்பந்தப்பட்டது. கீழை நாடுகளில் அது 'ஆயுர்வேதம்' என்று அழைக்கப்படுகிறது. அதற்கு, வாழ்க்கையின் விஞ்ஞானம் என்று அர்த்தமாகும் - நோய் அல்ல. மருத்துவத் தொழிலின் அடிப்படையானது, மக்கள் நீண்ட நாட்கள் வாழ்வதும், ஆரோக்கியமாக வாழ்வதும், முழுமையாக வாழ்வதுமாக இருக்க வேண்டும். மேலும், அதற்குத் தான் மருத்துவருக்குப் பணம் கொடுக்கப்பட வேண்டும். எனவே, இது போன்ற ஒவ்வொரு கம்யூனும், ஒரு மருத்துவரை, ஒரு பொறியாளரை, ஒரு குழாய் சரி செய்பவரை சுலபமாக வேலைக்கு வைத்துக் கொள்ள முடியும். இது போன்று, என்னென்ன சேவைகள் தேவையோ, அதற்குண்டானவர்களை வைத்துக் கொள்ள முடியும். அதுதான் கம்யூனின் பொறுப்பாக இருக்க வேண்டும். மேலும், அந்த கம்யூனில் சேவை செய்பவர்கள் சுழற்சி முறையில் சேவை செய்ய அனுமதிக்கப்பட வேண்டும். அப்போது தான் மீண்டும் அங்கே ஒரு அதிகார மையம் ஏற்படாது.

அந்த கம்யூனின் நிர்வாகக் குழு உறுப்பினர்கள், ஒவ்வொரு வருடமும் மாற வேண்டும். புதியவர்கள் பதவிக்கு வருவார்கள், பழையவர்கள் வெளியேறிவிடுவார்கள். எனவே, இதில் யாரும் அதிகார போதைக்கு அடிமையாகிவிட முடியாது. அதிகாரம்

கொடுக்கப்பட வேண்டும். ஆனால், இது மிகவும் குறைந்த அளவிலானதாக இருக்க வேண்டும். மேலும், அது நீண்ட காலத்திற்கு கொடுக்கப்படக் கூடாது. தனி மனிதனும் வளர வேண்டும். அதே சமயம் அவன் சார்ந்துள்ள கம்யூனும் வளர வேண்டும்.

ஆனால், இப்போதைக்கு இந்த சமுதாயததைப் பற்றி எல்லாவற்றையும் மறந்துவிடு; அதை எதிர்த்துப் போராடாதே; இந்த சமுதாயத்தோடு ஒன்றும் செய்யாதே; இந்த சமுதாயம் அதன் வழியில், அது எப்படி உள்ளதோ அப்படியே போகட்டும். இந்த சமுதாயம் என்பது வாழ வேண்டும் என்று விரும்பினால், அது அதன் அமைப்பை, வடிவை மாற்றிக் கொள்ள வேண்டும். அது செத்து மடிய விரும்பினால், அதை செத்து மடிய விட்டுவிடு. இதில் எந்தவிதமான தீங்கும் கிடையாது. இந்த உலகில் ஜனத்தொகை அதிகமாக உள்ளது; இப்போது இருப்பதில் கால் பங்கு ஜனத்தொகை தான் இந்த உலகிற்குத் தேவை. எனவே, பழைய அழுகிய சிந்தனையுள்ளவர்கள், புதியதாக எது ஒன்றையும் கருத்தில் கொள்ள முடியாதவர்கள், தாங்கள் செய்வது தீங்கானது, விஷம் போன்றது என்பதைக் கண்டு கொள்ள முடியாமல், முற்றிலும் குருடர்கள் போன்று இருப்பவர்கள் ... ... ஆகிய இவர்கள் செத்துவிட தீர்மானித்தால், அமைதியாக செத்துப் போகட்டும். அவர்களை தொந்தரவு செய்யாதே.

புரட்சியாளர்களாக இருக்கும்படி நான் போதிப்பதில்லை. நீ மிகவும் அமைதியாகவும், கிட்டத்தட்ட யாருக்கும் தெரியாதபடி உனது அடித்தளத்தில் மாற்றத்தை செய்பவனாகவும் இருக்க வேண்டும் என்று தான் நான் விரும்புகிறேன். ஏனெனில், எல்லாப் புரட்சிகளும் தோற்றுப் போய்விட்டன. இப்போது சாத்தியப்படுகின்ற ஒரே வழி, சத்தம் போடாமலும் அமைதியாகவும், அது நிகழும்படி செய்வதற்காக நாம் செயலாற்ற வேண்டியது மட்டும் தான்.

அமைதியில் மட்டுமே நிகழ்கின்ற விஷயங்கள் உள்ளன. உதாரணமாக, நீ மரங்களை நேசிப்பவனாக இருந்தால், நீ ஒவ்வொரு நாளும் அந்த இளம் மரச் செடியைப் பிடுங்கி, அதில் வேர்கள் வளர்ந்துள்ளதா என்று பார்க்கக் கூடாது; அப்படிச் செய்தால், நீ அதை உயிரற்றுப் போகும்படி செய்துவிடுவாய். அதன் வேர்கள் வெளியில் தெரியாமல் பூமிக்குள் மறைந்து தான் இருக்க வேண்டும். அமைதியாக அந்த வேர்கள் அவைகளின் வேலையைச் செய்து கொண்டிருக்கும்.

என்னுடைய மக்களும் அந்த வேர்களைப் போன்று தான் இருக்க வேண்டும்; அமைதியாக வேலையைச் செய்து கொண்டிருக்க வேண்டும். தங்களை மாற்றிக் கொண்டும், ஆர்வம் உள்ளவர்கள் யாராக

இருந்தாலும் அவர்களையும் மாற்றிக் கொண்டும், மாற்றத்தை உண்டாக்கக் கூடிய வழிமுறைகளை பரப்பிக் கொண்டும், சிறிய குழுக்களை, சிறிய கூட்டத்தை, சிறிய கம்யூனை, எங்கெல்லாம் சாத்தியப்படுமோ, அங்கெல்லாம் பெரிய கம்யூனை உருவாக்கிக் கொண்டும் இருக்க வேண்டும். ஆனால், இந்த முழு வேலையும் மிகவும் அமைதியாக, எந்தவிதமான திடீர் மாற்றத்தையும் உருவாக்காமலும் செய்ய வேண்டும்.

எல்லாப் பிரச்சனைகளுக்கும் மூலகாரணம், இந்தக் குடும்பம் தான். நமது இந்த வறுமை, நமது நோயுற்ற நிலை, நமது பைத்தியக்காரத்தனம், நமது வெறுமை, நமது அன்பற்ற தன்மை, ஆகிய இவற்றிற் கெல்லாம் இந்த 'குடும்பம்' தான் காரணம். மேலும், இந்தக் குடும்பம் தான் நமது எல்லா மனக்கட்டு திட்டங்களுக்கும் காரணம்.

இந்த சமுதாயம் என்பது அழிந்தால் மட்டுமே, தனி மனிதர்கள் இருக்க முடியும்; இரண்டும் ஒன்று சேர்ந்து இருக்க முடியாது. இந்த சமுதாயம் என்பது, மடிந்து போவதற்கான நேரம் இதுதான். நாம் புதிய வழியில் ஒன்றுபட்டு வாழ முன்வர வேண்டும். அப்படி ஒன்றுபட்டு வாழ்வது, இதுவரை உள்ளது போன்று இல்லாமல், அதிக இதயம் சார்ந்ததாக இருக்க வேண்டும். இந்த குடும்பம் என்பது தான் அதைத் தடுக்கிறது. இந்தக் குடும்பமானது, ஒவ்வொரு குழந்தையைச் சுற்றிலும் ஒரு எல்லைக் கோட்டை வரைந்துவிடுகிறது. இந்த குடும்பமானது, "நான் உனது தந்தை. எனவே, என் மீது பாசமாக இரு. நான் உனது தாய். ஆகவே, என்மீது நேசமாக இரு. இது உனது குடும்பம். தேவை ஏற்பட்டால், இந்த குடும்பத்திற்காக உன்னைத் தியாகம் செய்," என்று கூறுகிறது. இதே கருத்துத்தான் இன்னும் கொஞ்சம் பெரிய அளவில் 'நாடு' என்ற பெயரில் நீட்டிக்கப்படுகிறது. "இது உனது தேசம். உனது நாட்டிற்கு நீ தேவையென்றால், உன்னைத் தியாகம் செய்துவிடு," என்கிறது. குடும்பம், சமுதாயம், நாடு ... .... இப்படி ஒரே கருத்துதான் மேலும் மேலும் பெரிதாகிக் கொண்டே போகிறது.

ஆகவே, என்னுடைய அடிப்படை விமர்சனம் குடும்பத்தைப் பற்றி உள்ளது. எல்லாப் பிரச்சனைகளுக்கும் மூலகாரணம், இந்தக் குடும்பம் தான். நமது இந்த வறுமை, நமது நோயுற்ற நிலை, நமது பைத்தியக்காரத்தனம், நமது வெறுமை, நமது அன்பற்ற தன்மை, ஆகிய

இவற்றிற்கெல்லாம் இந்த ‘குடும்பம்’ தான் காரணம். மேலும், இந்தக் குடும்பம் தான் நமது எல்லா மனக்கட்டு திட்டங்களுக்கும் காரணம். ஆரம்பத்திலிருந்தே அது உங்களது மனதை கண்டிக்க ஆரம்பித்து விடுகிறது. “நீ ஒரு யூதன், நீ ஒரு கிறிஸ்தவன், நீ ஒரு இந்து, நீ இது, நீ அது - இப்படி கூறுகிறது. மேலும், இப்படிப்பட்ட முட்டாள்தனங்களைப் பற்றி நீங்கள் என்ன பேசுகிறீர்கள் என்ட தும் கூட அந்த ஒன்றுமறியாத குழந்தைக்குத் தெரியாது.

ஒரு யூத மதக் குருவைப் பற்றியும், ஒரு கத்தோலிக்க மத குருவைப் பற்றியும் நான் கேள்விப்பட்டது இது :

அவர்கள் இருவரும் எதிர் எதிர் வீட்டில் வசித்து வந்தனர். எனவே, இயல்பாகவே அவர்கள் இருவரும் எதற்கெடுத்தாலும் ஏட்டிக்குப் போட்டியாகச் செய்து கொண்டிருந்தனர்.

ஒருநாள் காலையில் அந்த யூத குரு, அந்த கத்தோலிக்க குரு ஒரு புதிய வண்டியை வாங்கியுள்ளதைப் பார்த்தார். அவர், “நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?” என்று கேட்டார்.

அந்த கத்தோலிக்க மத குரு தனது வண்டியின் மீது தண்ணீர் ஊற்றிக் கொண்டிருந்தார். எனவே, அவர், “நான் எனது வண்டிக்கு ஞானஸ்நானம் செய்கிறேன். நான் புதியதாக ஒரு கெடிலாக் கார் வாங்கியுள்ளேன்,” என்றார்.

யூத மத குருவிற்கு இதயம் வெடித்துவிட்டது. தனது கண் முன்னா லேயே, தனது வீட்டின் முன்னாலேயே அந்த வண்டிக்கு ஞானஸ்நானம் செய்யப்படுகிறது!

அடுத்த நாள் அந்த கத்தோலிக்க குரு வெளியே வந்த போது, அவர் ஆச்சரியமடைந்தார். அவர் யூத மத குருவிடம், “நீங்கள் என்ன செய்கிறீர்கள்?” என்று கேட்டார்.

அங்கே ஒரு அழகான ரோல்ஸ் ராய்ஸ் கார் நின்று கொண்டிருந்தது. அந்த யூத மத குரு, அந்த காரின் புகைபோக்கி குழாயை வெட்டிக் கொண்டிருந்தார். அவர் கத்தோலிக்க மத குருவிடம், “நான் எனது ரோல்ஸ் ராய்ஸிற்கு சுன்னத் செய்து கொண்டிருக்கிறேன். இப்போது இது ஒரு யூதனாகிவிட்டது!” என்றார்.

இதைத் தான், இவர்கள் ஒவ்வொரு குழந்தையிடமும் செய்து வருகின்றனர். மேலும், ஒவ்வொரு குழந்தையும் அந்த கெடிலாக்கைப் போன்றும், அந்த ரோல்ஸ் ராய்ஸைப் போன்றும் கள்ளம் கபடமற்றவர்கள். அவனுக்கு என்ன செய்யப்படுகிறது என்றே அவனுக்குத் தெரியாது.

நமது எல்லாக் கட்டுப்பாடுகளுக்குமான தளம், இந்த குடும்பம் தான்; அது தான் உனக்கு அதன் கடந்த காலச் சுமை முழுவதையும், பல நூற்றாண்டுகளாக தவறு என்று நிரூபிக்கப்பட்ட அந்த பழைய விஷயங்களின் சுமை முழுவதையும், தனது பாரம்பரியச் சொத்து என்று உனக்கு கொடுக்கிறது. நீ அந்த தவறான விஷயங்களால் பாரம் ஏற்றப்பட்டு இருக்கிறாய். மேலும், உனது மனமானது மூடியும், அடைபட்டும் இருப்பதால், அதற்கு எதிராகப் போகின்ற எந்த ஒரு புதிய விஷயத்தையும் உன்னால் ஏற்றுக் கொள்ள முடியாது.

மேலும், அந்தக் குழந்தைகள் நான் கூறுகின்ற அந்த கம்யூனின் கைகளில் இருந்தால் ... ... நான் அதனை பரிசோதனை செய்து பார்த்து, அதை மிகவும் வெற்றிகரமாக செயல்படுத்த முடியும் என்று கண்டு கொண்டிருக்கிறேன். அங்கே குழந்தைகள் மிகவும் சந்தோஷத்துடன் இருக்கின்றனர். ஏனெனில், அங்கே அவர்கள் சுதந்திரமாக உள்ளனர். எந்த ஒரு கண்டிப்பிற்கான முத்திரையும் அவர்கள் மீது குத்தப்படுவதில்லை. அவர்கள், இளம் வயதிலேயே பக்குவம் அடைந்துவிடுகின்றனர். ஏனெனில், யாரும் அவர்களைத் தங்களைச் சார்ந்து இருக்கும்படி முயற்சி செய்யாததால், அவர்கள் சுதந்திரமாக இருக்கிறார்கள். யாரும் அவர்களின் உதவிக்குப் போவதில்லை. எனவே, அவர்கள் தாங்களாகவே தங்களுக்கு உதவிக் கொள்வது எப்படி என்று கற்றுக் கொள்கின்றனர். இது ஒரு குறிப்பிட்ட தெளிவையும், பக்குவத்தையும், பலத்தையும் அவர்களுக்குக் கொடுக்கிறது. மேலும், அவர்கள் அனைவரும் தியானம் செய்கின்றனர்; தியானம் செய்வது கண்டிப்பு அல்ல. அவர்கள் எதுவும் செய்யாமல், அமைதியாக உட்கார்ந்து கொண்டு, அந்த அமைதியை அனுபவித்துக் கொண்டு, வெறுமனே உட்கார்ந்திருக்க வேண்டியது தான். இரவின் அமைதியையும், அதிகாலையில் அமைதியையும் அனுபவிக்க வேண்டியது தான். இப்படி கொஞ்சம் கொஞ்சமாக, நீ உனது உயிரினுள் பரவியுள்ள அந்த அமைதியோடு பழக்கம் கொண்டுவிடுவாய். அதன் பின்னர், நீ உனது கண்களை மூடிக் கொண்டு உட்கார்ந்த அந்த நொடிப் பொழுதே, நீ அமைதி என்னும் ஆழம்காண முடியாத ஏரிக்குள் விழுந்துவிடுவாய். மேலும் அந்த அமைதியினால் ஒவ்வொரு கணமும் நீ புத்துணர்வு பெறுவாய்.

அந்த அமைதியின் மூலமாக, உனது அன்பு, உனது அழகு, உனது கண்களில் சிறப்புமிக்க ஆழம், உனது இருப்பைச் சுற்றிலும் ஒரு சிறப்பு ஒளிவட்டம், உனது தனி மனிதத் தன்மைக்கான பலம், மேலும் சுயமரியாதை வந்துவிடும்.

தனி மனித சுதந்திரம் மற்றும் தனி மனித உரிமை ஒருபுறமும், ஆட்சி ஆதிக்கத்திற்கு அடிபணிதல் மற்றும் சர்வாதிகாரம் மறுபுறமும் சேர்ந்து மனிதனின் வாழ்க்கையையும், அவனது மாபெரும் வேட்கையையும் நடத்திச் செல்கின்றன. தயவு செய்து இதைப் பற்றிக் கூறுங்கள்.

இதுவும் அதே பிரச்சனை தான், அதே கேள்வி தான். ஆனால், மாற்றிக் கேட்கப்பட்டுள்ளது. இந்த சமுதாயம் ஒரு ஆதிக்க சக்தி; இந்த திருச்சபை ஒரு ஆதிக்க சக்தி, இந்த கல்விமுறை ஒரு ஆதிக்க சக்தி. அவைகள் எல்லாம், "நாங்கள் என்ன கூறினாலும் அது தான் சரியானது, நீ அதைப் பற்றி கேள்வி கேட்க வேண்டிய அவசியம் கிடையாது. வெறுமனே அதைப் பின்பற்றினால் போதும்," என்று கூறுகின்றன.

ஆனால், பிரச்சனைகள் இருக்கத்தான் செய்கின்றன. உதாரணமாக, கல்வி முறையைச் சொல்லலாம். நான் ஒரு மாணவனாகவும் இருந்திருக்கிறேன். நான் ஒரு பேராசிரியராகவும் இருந்திருக்கிறேன். 'ஒரு மனிதன் இந்த பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள் இவற்றில் உள்ள ஆதிக்க சக்திகளால் பாழாக்கப்படுகிறான்' என்பதை, நான் எனது வாழ்க்கையின் மூலம் தெரிந்து கொண்டுள்ளேன்.

எந்த ஒரு ஆதிக்க சக்தியையும் நான் ஏற்றுக் கொள்ளவில்லை என்கிற ஒரே காரணத்திற்காக, நான் அநேக கல்லூரிகளில் இருந்து வெளியேற்றப்பட்டிருக்கிறேன். நான் அவர்களிடம், "நீங்கள் கூறுகின்றவற்றை நிரூபியுங்கள். அதன் பின்னர், நான் அதை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கிறேன். ஆனால், அதை நிரூபிக்காத போது, அதற்கு சரியான வாதங்களைக் கொடுக்காத போது, அதை ஒரு பகுத்தறிவுள்ள வாக்குமூலமாக ஆக்காத போது, நான் அதை ஏற்றுக் கொள்ளப் போவதில்லை," என்று கூறுவேன். மேலும், நான் ஒவ்வொரு பாட வகுப்பிலும் சண்டை போடுவேன். ஏனெனில், ஒவ்வொரு வகுப்பிலும் ஆசிரியர்கள் வெறுமனே உரையாற்றிக் கொண்டே இருப்பார்கள். மாணவர்களும் அவர்களின் உரையை அப்படியே எழுதிக் கொள்வார்கள். ஏனெனில், அவர்கள் செய்ய வேண்டியது என்னவென்றால், ஆசிரியர்கள் என்னவெல்லாம் சொன்னார்களோ, அதை அப்படியே மீண்டும் தேர்வுத் தாள்களில் திருப்பி எழுத வேண்டியது தான். மேலும், அதில் எந்த அளவுக்கு நீ சிறப்பாக, ஒரு கிளிப்பிள்ளையைப் போல திரும்பக் கூறுகிறாயோ, அந்த அளவுக்கு உனக்கு மதிப்பு கிடைக்கும்.

ஆனால், அந்தப் பேராசிரியர்களால் சிறிய விஷயங்களைக் கூட நிரூபிக்க முடியாமல் போய்விடும். மேலும், அது அவர்களுக்கு

தர்மசங்கடமாகவும் ஆகிவிடும். ஒவ்வொரு நாளும் அது பிரச்சனையாயிற்று. அவர்கள் எதைச் சொன்னாலும், நான் உடனே எழுந்து நின்று அவர்களிடம், "எந்த அடிப்படையில் கூறுகிறீர்கள்?" என்று கேட்பேன். நான் அவர்களிடம் சம்பந்தமுள்ள கேள்வியைத் தான் கேட்பேன்.

உதாரணமாக, மதம் சம்பந்தமாக சொல்லிக் கொடுக்கின்ற பேராசிரியரில் ஒருவர், இந்துக்களின் புனித நூலாகிய வேதங்கள் கடவுளால் எழுதப்பட்டவை என்று கூறினார். நான் இதற்கு எதிர்ப்புத் தெரிவித்தாக வேண்டும். நான் அவரிடம், "நான் இதை மறுக்கிறேன். முதல..வதாக, கடவுள் என்று ஒருவர் இருக்கிறாரா என்பதை நீங்கள் நிரூபிக்கவில்லை. இரண்டாவதாக, இப்போது இந்தப் புத்தகங்கள் முழுவதும், குப்பைகளால் நிரம்பியுள்ள இந்தப் புத்தகங்கள் முழுவதும் கடவுளால் எழுதப்பட்டது என்று கூறுகிறீர்கள். நீங்கள் எப்போதாவது இந்த வேதங்களைப் புரட்டிப் பார்த்து இருக்கிறீர்களா? நீங்கள் எப்போதாவது இதன் முதல் பக்கத்தில் இருந்து கடைசிப் பக்கம் வரை படித்திருக்கிறீர்களா?," என்று கேட்டேன். வேதங்கள் நான்கு உள்ளன. அவை பெரிய புத்தகங்கள். நான் அவரிடம், "இப்போது நான் தேர்ந்தெடுத்து சில பகுதிகளை திறந்து படிக்கிறேன். இந்த வகுப்பறையில் உள்ளவர்கள் அனைவரும் அதைக் கேட்கட்டும். அதன் பின்னர், இந்த வேதத்தில் உள்ள வாக்குமூலங்கள் கடவுள் எழுதியது தானா என்பதை இந்த வகுப்பில் உள்ளவர்கள் முடிவு செய்யட்டும்," என்று கூறினேன்.

வேதங்கள் முழுவதும் பிரார்த்தனைகளாக உள்ளன. ஆனால் கடவுள் பிரார்த்தனை செய்ய முடியாது; அவர் யாரிடம் பிரார்த்தனை செய்வார்? முட்டாள்தனமான விஷயங்களுக்காக இதில் பிரார்த்தனைகள் உள்ளதால், இவைகள் எல்லாம் கடவுளால் எழுதப்பட்டவை என்று கூறுவது மிகவும் நகைப்புக்குரியதாகும். ஒரு பிராமணர், "நான் எல்லாவிதமான சடங்குகளையும் தொடர்ந்து செய்து வருகிறேன். புனித நூல்கள் கூறுவது போல் வாழ்ந்து வருகிறேன். ஆனால், நீயோ எனக்கு இன்னமும் ஒரு குழந்தையைக் கொடுக்கவில்லையே. எனக்கு ஒரு குழந்தையைக் கொடு; அது தான் நான் உன்னை வேண்டிக் கொண்டதற்கு நிரூபணம் ஆக இருக்கும்," என்று பிரார்த்தனை செய்கிறார்.

நான் அந்தப் பேராசிரியரிடம், "இந்தப் பகுதியை கடவுள் எப்படி எழுதி இருக்க முடியும்? இது யாராலோ எழுதப்பட்டு, கடவுளுக்கு விலாசமிடப்பட்டுள்ளது. ஆனால், இது கடவுளால் எழுதப்பட்டதாக இருக்க முடியாது. மேலும், இது தான் கடவுளின் சூழ்நிலை என்றால்,

அதன் பிறகு இந்த ஏழை மனிதன் அதைப் பற்றி கவலைப்படக் கூடாது. கடவுளே வேறு யாரிடமோ ஒரு குழந்தையைக் கொடுக்கும்படி கேட்கும் போது, நாமும் ஏன் அந்த ஆளிடமே நேரடியாகக் கேட்கக் கூடாது? இந்த வேதத்தை எழுதிய கடவுளைப் பற்றி நாம் ஏன் கவலைப்பட வேண்டும்?" என்று கேட்டேன்.

இதனால், கடைசியாக எல்லாக் கல்லூரிகளும் என்னை ஒதுக்கித் தள்ளின. அது தான் எனது கேள்விகளுக்கு அவர்களது பதிலாக இருந்தது. அந்தக் கல்லூரியின் முதல்வர் என்னிடம், "நாங்கள் மிகவும் வருந்துகிறோம். நீ கூறுவது சரி தான் என்று எங்களுக்குத் தெரிகிறது; ஆனால், நாங்கள் கல்லூரியை நடத்தியாக வேண்டும். நீ இந்த நிறுவனத்தையே அழித்துவிடுவாய். பேராசிரியர்கள் எல்லோரும் ராஜினாமா செய்வதாக மிரட்டுகிறார்கள். மாணவர்களோ, நீ பேராசிரியர்களை கற்றுக் கொடுக்க விடுவதில்லை என்கின்றனர். ஏனெனில், ஒவ்வொரு நாளும் ஒரு சிறிய கருத்திற்காக அந்த வகுப்பு நேரம் முழுவதும் வீணடிக்கப்படுகிறது. இப்படியே போனால், ஏற்கனவே எட்டு மாதங்கள் போய்விட்டது, மீதியுள்ள இரண்டு மாதங்களில் எல்லாப் பாடத்திட்டங்களையும் முடிக்க முடியாமல் போய்விடும்," என்று கூறுவார்.

அவர் மேலும், "மாணவர்கள் இங்கே தேர்வு எழுதி தேர்ச்சி பெறுவதற்காகத் தான் வந்திருக்கிறார்கள். அவர்களுக்கு சத்தியத்தின் மீது ஆர்வம் இல்லை. அவர்களுக்கு எந்த ஒரு வாக்குமூலத்தின் செல்லத் தகுந்த தன்மை பற்றியும் ஆர்வம் கிடையாது. அவர்கள் இங்கே இருப்பதற்கான ஒரே காரணம், ஒரு சான்றிதழ் பெறுவது மட்டுமே. ஆனால், நீ ஒரு வித்தியாச மானவனாக இருக்கிறாய். உனக்கு இந்தச் சான்றிதழ்களில் ஆர்வம் இல்லை போல் தெரிகிறது," என்று என்னிடம் கூறினார்.

நானும் அவரிடம், "எனக்கு இந்தச் சான்றிதழ்களில் ஆர்வம் கிடையாது. ஒன்றும் தெரியாத இந்தப் பேராசிரியர்களிடமிருந்து பெறுகின்ற இந்தச் சான்றிதழ்களை வைத்துக் கொண்டு நான் என்ன செய்வது? இத்தகைய மக்களை என்னுடைய தேர்வாளர்களாக நினைத்துப் பார்க்க முடியாது. நீங்கள் என்னிடம் சான்றிதழ்களைக் கொடுக்கின்ற அன்றைய தினமே, உங்களது கண் முன்னே நான் அந்தச் சான்றிதழ்களை கிழித்தெறிவேன். ஏனெனில், இந்தப் பேராசிரியர்களால் எனது எளிமையான கேள்விக்குக் கூட பதில் சொல்லத் தெரியவில்லை," என்று கூறினேன்.

ஆனால், இந்தக் கல்விமுறை முழுவதும் இது போன்ற வழிகளில் தான் முடுக்கிவிடப்பட்டுள்ளது. அதனால், நான் ஒரு பேராசிரியர் ஆனவுடன், நான் ஒரு புதிய ஏற்பாட்டினை செய்ய வேண்டியதாயிற்று. அந்த ஏற்பாடு என்னவென்றால், எனது பாட நேரத்தின் அந்த ஒவ்வொரு நாற்பது நிமிடத்திலும், இருபது நிமிடங்களுக்கு நான் பாடத்திட்டத்தில் உள்ளவற்றை புத்தகத்தில் எழுதியுள்ளபடி சொல்லிக் கொடுப்பேன். அதன் பிறகு, அடுத்த இருபது நிமிடங்களுக்கும் நான் அதைப் பற்றி விமர்சனம் செய்வேன். எனது மாணவர்கள், 'எங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிடும்,' என்று கூறுவார்கள்.

அதற்கு நான் அவர்களிடம், "அது உங்களது பிரச்சனை - ஆனால், நான் இந்த வாக்கியங்களை விமர்சனம் செய்யாமல் விட்டுவிட முடியாது. நீங்கள் தான் இதில் ஒன்றைத் தேர்வு செய்ய வேண்டும். உங்களுக்குத் தேர்வு வரும் போது, நீங்கள் எழுதுவதற்கு எதை விரும்புகிறீர்களோ, அதைத் தேர்வு செய்ய வேண்டும். நீங்கள் தோல்வியடைய விரும்பினால், எனது பகுதியைத் தேர்ந்தெடுங்கள். நீங்கள் வெற்றி பெற வேண்டுமானால், முதல் பகுதியைத் தேர்வு செய்யுங்கள். இதை நான் தெளிவுபடுத்திவிட்டேன். நான் யாரையும் ஏமாற்றவில்லை. ஆனால், அதே சமயம் நான் தவறு என்று நினைக்கின்ற ஏதோ ஒன்றினை உங்களுக்கு கற்பித்துக் கொடுத்துக் கொண்டு, உங்களை ஏமாற்றிக் கொண்டு போகவும் விரும்பவில்லை," என்று கூறினேன்.

இறுதியாக, பல்கலைக் கழக துணைவேந்தர் என்னை அழைத்தார். அவர் என்னிடம், "இது ஒரு விநோதமான முறையில் சொல்லிக் கொடுப்பது போல் தெரிகிறது. எனக்கு நீங்கள் பாதி நேரம் தான் பாடத்திட்டத்தின் படி கற்பிப்பதாகவும், அடுத்த பாதி நேரம் நீங்கள் விவாதிப்பதாகவும், அது, அதுவரை நீங்கள் அவர்களுக்குச் சொல்லிக் கொடுத்த அந்தப் பாடங்களை முழுவதுமாக அழித்துவிடுவது போன்றும் இருப்பதாக எனக்கு தினமும் தகவல் வருகிறது. எனவே, மாணவர்கள் உங்களது வகுப்பினும் நுழையும் போது எப்படி இருந்தார்களோ, அதே போன்று, ஒன்றுமே அறியாமல் வெறுமையாக வகுப்பறையை விட்டு வெளியே வருவதாகவும், இன்னும் சொல்லப் போனால், அதிக குழப்பத்தில் வெளியே வருவதாகவும் எனக்குத் தகவல் வருகிறது," என்று கூறினார்.

அதற்கு நான், "எனக்கு யாரைப் பற்றியும் கவலை இல்லை. நான் ஒரு மாணவனாக இருந்த போது, அவர்கள் இத்தனை ஆண்டுகளாக என்ன செய்தார்கள்? நான் ஒரு கல்லூரியில் இருந்து மற்றொரு கல்லூரிக்கு வெளியேற்றப்பட்டேன். வேண்டுமானால் நீங்கள் ஒருநாள்

எனது வகுப்பிற்கு வந்து, நீங்கள் குறிப்பிட்டுள்ள அந்தப் பாடத்திற்கு நேர்மையாக நான் நடந்து கொள்கிறேனா என்று பாருங்கள். நான் அதைத் தெளிவாக ஆக்குவதற்காக முழுமையாகச் செய்கிறேன்," என்றேன்.

அவரும் ஒருநாள் வந்து, நான் வகுப்பில் பாடம் நடத்துவதைக் கவனித்தார். முதல் இருபது நிமிடங்கள் முடிந்தவுடன் அவர் என்னிடம், "இது உண்மையிலேயே பிரமாதம். நானும் கூட ஒரு தத்துவ மாணவனாக இருந்துள்ளேன். ஆனால், யாரும் இது போன்ற வழியில் எனக்கு கற்றுக் கொடுக்கவில்லை," என்றார்.

உடனே நான், "இது பாடத்தின் பாதி தான். நீங்கள் கொஞ்சம் பொறுங்கள்; ஏனெனில், இப்போது நான் படிப்படியாக இதுவரை நான் சொல்லிக் கொடுத்ததையெல்லாம் அழிக்கப் போகிறேன்," என்றேன்.

மேலும், நான் அதை முற்றிலுமாக அழித்த பின்னர், அவர் என்னிடம், "அட கடவுளே! இப்போது, இந்த மாணவர்கள் என்னிடம் குறை கூறுவது ஏன் என்பதைப் புரிந்து கொள்ள முடிகிறது. இது போன்ற நிறுவனங்களில் பேராசிரியராக இருக்க வேண்டிய ஆள் அல்ல நீங்கள். நீங்கள் செய்வது முற்றிலும் நேர்மையானது என்பதை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால், இங்குள்ள கல்வி முறையானது, புத்திசாலி மக்களை உருவாக்குவதற்காக இல்லை. இந்த கல்விமுறை, நல்ல நினைவாற்றல் உள்ள மக்களைத் தான் உருவாக்குகிறது. மேலும், அதுதான் தேவையும்கூட. நமக்குத் தேவை எழுத்தர்கள், அதிகார வர்க்கத்தினர். மேலும், அந்த வேலைக்குப் புத்திசாலித்தனம் அதிகம் தேவையில்லை. அவர்களுக்கு நல்ல நினைவாற்றல் இருந்தால் போதுமானது," என்று பதில் கூறினார்.

அதற்கு நான் அவரிடம், "வேறு விதமாகச் சொல்ல வேண்டுமென்றால், உங்களுக்குத் தேவை கணிப்பொறிகள் தான், மனிதர்கள் அல்ல. இதுதான் சூழ்நிலை என்றால், இதுதான் உங்களது கல்விமுறை என்றால், கூடிய விரைவில் நீங்கள் மனிதர்களுக்குப் பதிலாக கணிப்பொறிகளை வைத்துவிடுவீர்கள்," என்றேன். இப்போது அவர்கள் அதைத் தான் செய்து கொண்டிருக்கிறார்கள். எங்கு பார்த்தாலும், முக்கியமான நிலைகளில் கணிப்பொறிகளை நிறுவியுள்ளனர். ஏனெனில், கணிப்பொறிகள் அதிக நம்பகத்தன்மை கொண்டவை. அவைகள் வெறும் நினைவாற்றல் தான்; புத்திசாலித் தனமானவை அல்ல.

எவ்வளவு தான் அடக்கி வைக்கப்பட்டாலும், ஒரு மனிதனிடம் நிச்சயமாக புத்திசாலித்தனம் இருக்கும்.

ஹிரோசிமா மற்றும் நாகசாகி ஆகிய இடங்களில் அணுகுண்டுகளை வீசிய அந்த மனிதனுக்குப் பதிலாக, அங்கே ஒரு கணிப்பொறியிருந்திருந்தால், எந்தக் கேள்வியும் எழுந்திருக்காது. சரியான நேரத்தில், சரியான தொலைவில், அது அந்த அணுகுண்டை வீசிவிட்டு திரும்பி வந்திருக்கும். அது வெறுமனே ஒரு இயந்திரத்தின் வேலையாக ஆகி இருக்கும். ஆனால், அணுகுண்டினை வீசிய அந்த மனிதன், எவ்வளவு தான் நீங்கள் அவனது புத்திசாலித்தனத்தை அழித்திருந்தாலும், அவன் என்ன செய்கிறான் என்பதை அவன் இரண்டாவது முறையாக சிந்திக்கவே செய்திருப்பான். ஒன்றுமறியாத ஒரு நூறாயிரம் மக்களை, சாதாரண மக்களை, ராணுவத்தில் இல்லாதவர்களை, யாருக்கும் எந்தத் தீங்கும் செய்யாதவர்களை கொன்றார்களே - இது சரியா?

இப்போது எங்கும் எல்லா அணு ஆயுதங்களும் மனிதர்களின் கையில் இல்லை, கணிப்பொறிகளின் கைகளில் தான் உள்ளது. மூன்றாம் உலகப் போரில் கணிப்பொறிகள் தான் போரிடும். மனிதர்கள் தான் கொல்லப்படுவார்கள். அது வேறு விஷயம். கணிப்பொறிகளுக்கு இந்த மனித இனம் உயிரோடு இருக்கிறதா அல்லது அழிந்து போகிறதா என்கின்ற கவலை கிடையாது. இதைப் பற்றி அவைகள் எண்ணிப் பார்ப்பதில்லை. ஆனால், அவைகள் ஒரு மனிதன் செய்ய முடியாத அந்த வேலையை சரியாகவும், திறமையாகவும் செய்துவிடும். இந்த மனித இனம் முழுவதையும் அழிக்க ஒரு மனிதன் தயங்கலாம். அவனது புத்தியில் ஏதோ ஒன்று, "நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன்?" என்கின்ற கேள்வியை, அவனது புத்திசாலித்தனத்தில் ஒரு சின்ன பகுதி எழுப்பினால், அது போதும்.

நமது எல்லா நிறுவனங்களும், நமது மதங்களும் ஆதிக்க சக்திகளாக இருக்கின்றன. அவைகள், நீ ஏன் ஒரு காரியத்தைச் செய்ய வேண்டும் என்று சொல்வதில்லை. "புத்தகங்களில் அப்படி எழுதியுள்ளதால், வெறுமனே நீ அப்படிச் செய், இயேசு அப்படிச் சொல்வதால், நீ அப்படிச் செய்," என்று தான் கூறுகின்றன. அதை ஏன் செய்ய வேண்டும் என்று இயேசு ஒரு சிறு விவாதத்தைக்கூட எடுத்து வைக்கவில்லை. அவர் தனது கொள்கைகளுக்கு எந்த ஒரு பகுத்தறிவு தளத்தையும் கொடுக்கவில்லை. அதே போன்று, மோசஸூம் செய்யவில்லை, கிருஷ்ணரும் செய்யவில்லை.

கிருஷ்ணர் வெறுமனே அர்ஜுனனிடம், "இது கடவுளிடமிருந்து வருகிறது. நீ போரிடத்தான் வேண்டும்," என்கிறார். இது ஆதிக்கம் செலுத்துவதாகும். மேலும், அவர்கள் எதைச் செய்தாலும், அதைப் பற்றி

கேள்வி கேட்காமல் இருப்பதற்கு, அவர் உங்களுக்குச் சாதகமாக ஒவ்வொரு சூழ்நிலையிலும் கடவுளை பயன்படுத்துகிறார்கள்.

இது போன்ற ஆதிக்க சக்திகளை இந்த உலகத்தில் ஒழித்தாக வேண்டும்.

சுய உறுதித்தன்மை என்பது முற்றிலும் வேறுபட்டது. ஆதிக்கம் செலுத்துவது என்பது, இந்த சமுதாயத்தோடும் இந்த திருச்சபையோடும் தொடர்புடையது; சுய உறுதித்தன்மை என்பது தனிப்பட்ட ஒருவர் உண்மையை தெரிந்து கொண்டதோடு சம்பந்தப்பட்டது.

நான் உனக்கு ஏதாவது ஒன்றைச் சொல்கிறேன் என்றால், அதை நான் எனது சுய உறுதித்தன்மையிலிருந்து சொல்கிறேன். அது எனது அனுபவம் என்பதனால் தான், நான் அதை உனக்குச் சொல்கிறேன் என்று தான் அர்த்தம். ஆனால், அதற்காக இதை நீ நம்பித்தான் ஆக வேண்டும் என்பது கிடையாது. நீ, நான் கூறியதைக் கேட்டது மட்டுமே போதும். இப்போது நீ அதைப் பற்றி சிந்திக்கலாம், அதற்கு சாதகமாகவோ அல்லது பாதகமாகவோ உன்னால் முடிவெடுக்க முடியும்.

நான் கூறுவது, நான் முக்கியத்துவம் கொடுப்பது எதற்காகவென்றால், நான் கூறுவதற்காக அதைச் சார்ந்து முடிவெடுக்காமல், நீயே சுயமாக, சொந்தமாக முடிவெடுக்க வேண்டும் என்பது தான். உனது முடிவு எனக்கு எதிரானதாகக் கூட இருக்கலாம். அதனால் பரவாயில்லை. ஆனால், முடிவு என்பது உனது ஆன்மாவில் இருந்து வரவேண்டும். அது உனது சொந்த ஆன்மாவிலிருந்து வரவில்லையென்றால், அதன்பின்னர் நீ என்னை உனது ஆதிக்க சக்தியாக ஆக்கிவிடுகிறாய்.

நான் எனது சொந்த சுய உறுதித்தன்மையில் பேசுகிறேன். தயவுசெய்து, என்னை ஒரு ஆதிக்க சக்தியாக ஆக்கிவிடாதே; ஏனெனில், நான் என்னால் முடிந்த அளவுக்கு வேகத்துடனும், சூடாகவும் இருக்கிற உண்மையைக் கூறுகிறேன். இதனால், நீ முற்றிலும் தெளிவுபட வேண்டும் என்பதற்காகத் தான் அப்படி உறுதியுடன் கூறுகிறேன். ஆனால், இப்போது முடிவெடுக்கும் சுதந்திரம் உன்னிடம் தான் உள்ளது. நான் உனக்காக முடிவெடுக்கவில்லை. மேலும், நீ என்னிடம் நம்பிக்கையும், விசுவாசமும் வைத்துக் கொள் என்று நான் உன்னிடம் கேட்கவும் இல்லை.

நான் வெறுமனே உன்னிடம், "எனக்கு கொஞ்சம் சந்தர்ப்பம் கொடு. நான் என்ன கூறுகிறேனோ, அதைப் பற்றி கொஞ்சம் சிந்தத்துப் பார்," என்று தான் கேட்கிறேன். அதைப் பற்றி நீ சிந்தித்தால், நான்

உனக்கு நன்றியுள்ளவனாக இருப்பேன். அது போதும். உனது சிந்தனை, உனகது புத்திக்கூர்மையை கொடுக்கும். மேலும், நான் புத்திக்கூர்மையை நம்புபவன். நீ சிந்தித்தால், நீ புத்தி கூர்மை அடைந்தால், நீ என்ன முடிவெடுத்தாலும் அது சரியாகத் தான் இருக்கும் என்பதை நான் அறிவேன்.

அப்படியே நீ ஒருமுறை தவறாக முடிவெடுத்தாலும்கூட, அதனால் பரவாயில்லை. ஒருவன் பலமுறை விழுந்து, மீண்டும் எழ வேண்டும். அப்படித் தான் இந்த வாழ்க்கை இருக்கிறது. ஒருவன் தவறுகள் செய்ய வேண்டும். மேலும், அந்தத் தவறுகளில் இருந்து கற்றுக் கொள்ள வேண்டும். ஒவ்வொரு தடைக் கற்களையும் படிக்கற்களாக மாற்று.

ஆகவே, என்னிடம் நீ எந்தவிதமான நம்பிக்கையும், விசுவாசமும் கொள்ள வேண்டும் என்கின்ற கேள்விக்கே இடமில்லை. தனி மனிதனின் சுதந்திரத்தில் ஆதிக்க சக்திகள் மாண்டு போய்விடும். மேலும், ஒரு புதிய சக்தி எழுந்துவிடும்; ஒரு புதிய அதிகாரம் எழுந்துவிடும். ஒவ்வொரு தனிமனிதனும் தனது சொந்த அனுபவங்களைப் பெறுகின்ற தகுதியுடன் இருக்கின்றனர். தனது சொந்த அனுபவத்திற்குப் பிறகு, அவனால், "நான் அதை அனுபவித்துப் பார்த்துவிட்டேன். நான் அதை ருசித்துவிட்டேன். நான் அதை சந்தோஷமாக அனுபவித்துவிட்டேன். நான் அதோடு நடனமாடிவிட்டேன். இதை நான் ஏதோ புனித நூலில் இருந்து ஒரு எடுத்துக்காட்டாகக் கூறவில்லை. நான் வெறுமனே எனது இதயத்தை உனக்குத் திறந்து காட்டுகிறேன்," என்று கூற முடியும்.

சுய உறுதித்தன்மை என்பது அனுபவத்திற்குச் சொந்தமானது.

ஆதிக்கம் செலுத்துவதென்பது வேறு யாருக்கோ சொந்தமானது. உனக்குச் சொந்தமானதல்ல. அதனால் தான், அது அடிமைத்தனத்தை உருவாக்குகிறது. சுதந்திரத்தை அல்ல. மேலும், விடுதலை என்பது தான் என்னைப் பொருத்தவரையில் இறுதியான மதிப்பு; ஏனெனில், சுதந்திரத்தில் மட்டுமே நீ மலர முடியும். மேலும், அதில் தான் உனது முழுச் சாத்தியத்திற்கும் உன்னால் மலர்ச்சி காண முடியும்.

சமுதாயம் என்பது, மனிதன் இருப்பதினால் தீர்மானிக்கப்பட்டதொரு உண்மையா அல்லது அது ஒரு பொய்யான கருத்தா, மனிதன் என்பவன் இன்னமும் தூங்கிக் கொண்டிருப்பதால் இருக்கின்றதொரு கட்டுத்திட்டமா?

சமுதாயம் என்பது, ஒரு இருக்கின்ற உண்மை அல்ல. அது, மனிதனால் உருவாக்கப்பட்டது. ஏனெனில், மனிதன் இன்னமும்

தூங்கிக் கொண்டிருக்கிறான். ஏனெனில், மனிதன் குழப்பத்தில் இருக்கிறான். ஏனெனில், மனிதன் சுதந்திரமாக இருக்கும் சக்தியின்றி, அந்த சுதந்திரத்தை பொறுப்பற்றதனமாக மாற்றி விடுகிறான். அதனால் அவனுக்கு சுதந்திரத்தின் ஆதாயம் இல்லாமல் போகிறது. ஆகவே, சமுதாயம் என்பது ஒரு செயற்கையான - ஆனால், தேவையான - மனிதனின் படைப்பு.

சமுதாயம் என்பது செயற்கையானதாக இருப்பதால், அதை அழிக்க முடியாது. ஒரு காலத்தில் அது தேவையுள்ளதாக இருந்ததால், அது எப்போதைக்கும் தேவையானது என்று அர்த்தமாகாது. அதை, தேவை என்று ஆக்கிய அந்த நிபந்தனைகளை மனிதன் மாற்ற வேண்டும். மேலும், அது பொய்யானதாக இருப்பது நல்லது. இல்லையெனில், அதை விட்டு ஒழிப்பதற்கு ஒரு வழியும் இருக்காது.

அது நமது சொந்த தயாரிப்பு. நாம் என்று விரும்புகிறோமோ, அன்று நாம் அதை அழித்து விடலாம்.

ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொண்டு, காட்டுமிராண்டித் தனமாக இருக்கின்ற அந்த தனிப்பட்ட ஒருவரின் ஆணவத்தினுள் விழுந்துவிடாமல், இந்த கூட்டம், நாடு இது போன்றவற்றிலிருந்து வளர்ச்சி அடைவது எப்படி?

உனது எல்லாக் கேள்விகளும் ஒரே ஒரு விஷயத்தை மையமாகக் கொண்டு தான் உள்ளது. நானும் ஒரே ஒரு பதிலைத் தான் கொடுக்க விரும்புகிறேன்.

எனக்கு ஒரு சிறுகதை ஞாபகத்திற்கு வருகிறது.

ஒரு மிகப்பெரிய குரு, கடற்கரையில் உட்கார்ந்து கொண்டிருந்தார். அப்போது, உண்மையைத் தேடித் திரிகின்ற ஒருவன் அவரிடம் வந்தான். வந்தவன், அவரது பாதங்களைத் தொட்டு வணங்கிவிட்டு, "உங்களுக்குத் தொந்தரவு இல்லையென்றால், நான் சத்தியத்தை தெரிந்து கொள்வதற்கு உதவுகின்றதாக நீங்கள் எதைச் சொன்னாலும், அதை நான் செய்ய விரும்புகிறேன்," என்றான்.

அந்த குரு, வெறுமனே கண்களை மூடிக் கொண்டு அமைதியாக இருந்தார். அந்த மனிதன் தனது தலையை அசைத்துவிட்டு, அவன் தனது மனதுக்குள், "இந்த ஆள் ஒரு பைத்தியம் போல் தெரிகிறது. நான் இவரிடம் ஒரு கேள்வி கேட்கிறேன். ஆனால், இவரோ கண்களை மூடிக் கொண்டிருக்கிறார்," என்று நினைத்தான். அவன் அந்த குருவை தட்டி எழுப்பி, அவரிடம், "எனது கேள்வி என்னவாயிற்று?" என்று கேட்டான்.

அதற்கு அந்த குரு, "நான் அதற்கு, பதில் ஏற்கனவே கூறிவிட்டேன். வெறுமனே இங்கு உட்கார்... எதுவும் செய்யாதே; எல்லாம் தானாகவே நடக்கும், புல் தானாகவே வளரும். நீ அதைப் பற்றி கவலைப்பட வேண்டாம். எல்லாம் நடக்கும். நீ வெறுமனே அமைதியாக உட்கார்நதிருந்து, அந்த அமைதியை அனுபவி," என்றார்.

அந்த மனிதன் அவரிடம், "நீங்கள் அதற்கு ஒரு பெயரைக் கொடுக்க முடியுமா? ஏனெனில், மக்கள் என்னிடம், 'நீ என்ன செய்கிறாய்?' என்று கேட்பார்கள்" என்று கூறினான்.

எனவே, அவர் அந்த கடற்கரை மணலில் தனது விரல்களால் 'தியானம்' என்று எழுதினார்.

அதற்கு அந்த மனிதன், "இந்த பதில் மிகச் சுருக்கமாக உள்ளது. இதைக் கொஞ்சம் விரிவாக கூற முடியுமா?" என்றான்.

அதற்கு அந்த வயதான குரு, 'தியானம்' என்று பெரிய எழுத்துக்களில் எழுதினார். உடனே அந்த மனிதன், "இவைகள் வெறும் பெரிய எழுத்துக்களாகத் தானே உள்ளது? நீங்கள் அதே விஷயத்தைத் தானே எழுதியிருக்கிறீர்கள்?" என்றான்.

அதற்கு அந்த வயதான குரு, "இதற்கு மேல் நான் கூறினால், அதன் பிறகு அது தவறாக இருக்கும். உன்னால் புரிந்து கொள்ள முடிந்தால், அதன் பின்னர் நான் உன்னிடம் என்ன கூறினேனோ, அதைச் செய். அப்போது நீ அறிந்து கொள்வாய்," என்றார்.

அது தான் எனது பதிலும் கூட.

ஒவ்வொரு தனி மனிதனும் தியானம் செய்பவனாக, அமைதியாக கவனிப்பவனாக ஆக வேண்டும். அப்போது தான் அவன் தன்னையே தேடிக் கண்டு கொள்ள முடியும். இந்தக் கண்டுபிடிப்பு, அவனைச் சுற்றியுள்ள எல்லாவற்றையும் மாற்றிவிடும். மேலும், தியானத்தின் மூலம் நாம் அநேக மக்களை மாற்ற முடியுமென்றால், நம்மால் ஒரு புதிய உலகினை உருவாக்க முடியும்.

பல நூற்றாண்டுகளாக, அநேக மக்கள் ஒரு புதிய உலகத்திற்காக நம்பிக் கொண்டிருந்தனர். ஆனால், அவர்களிடம் அதை எப்படி உருவாக்குவது என்கிற யோசனை இல்லை. நான் அதை மிகவும் சரியாக உருவாக்குவது எப்படி என்னும் விஞ்ஞானத்தை உனக்கு கொடுக்கின்றேன். தியானம் என்பது தான் அந்த அறிவியலின் பெயர்.

## கடவுள் என்னும் பிரச்சனை :

"கடவுள் இறந்துவிட்டார், மனிதன் விடுதலையடைந்து விட்டான்" என்கின்ற நீட்சேவின் தீர்க்கதரிசனமான கூற்று ஒன்று உள்ளது. அவர் இந்த விஷயத்தில் ஆழ்ந்து உண்மையைக் கண்டறிந்துள்ளார். அவரது இந்த வாக்குமூலத்தின் ஆழத்தை, ஒரு சிலர் தான் புரிந்து கொள்ள முடிந்தது. இது, தன்னுணர்வின் சரித்திரத்தில் ஒரு மைல் கல்.

கடவுள் இருக்கும் வரை, மனிதன் விடுதலை பெற முடியாது. அது சாத்தியமில்லாதது. கடவுளும், மனிதனின் விடுதலையும் ஆகிய இரண்டும் ஒருசேர இருக்க முடியாது. ஏனெனில், கடவுள் என்றாலே, அவர்தான் எல்லாவற்றையும் படைக்கிறவர் என்கிற அந்த அர்த்தம் இருக்கும் போது, நாம் வெறுமனே அவரது கைப்பாவை ஆகிவிடுகிறோம். அவரால் நம்மை படைக்க முடியுமெனில், அவரால் எந்நேரமும் நம்மை அழிக்கவும் முடியும். நம்மை படைத்த போதும், அவர் நம்மை ஒருபோதும் கேட்டதில்லை. அதே போன்று, அவர் எப்போது நம்மை அழிக்கப் போகிறார் என்ற நம்மிடம் கேட்க வேண்டிய தயவும் அவருக்கு இல்லை. படைப்பும், அழிப்பதும் சுத்தமாக அவரது விருப்பம் தான். அப்படியிருக்கும் போது, நீங்கள் எப்படிச் சுதந்திரமாக இருக்க முடியும்? நீங்கள் இங்கு இருப்பதற்கான சுதந்திரம் கூட உங்களுக்குக் கிடையாது. உங்களது பிறப்பும், உங்களது சுதந்திரம் கிடையாது, அல்லது உங்களது இறப்பும் உங்களின் சுதந்திரம் கிடையாது. மேலும், இந்த இரண்டு அடிமைத்தனங்களுக்கு இடையில் உங்களுடைய வாழ்வில் சுதந்திரம் இருக்க முடியும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

மனிதனின் விடுதலை காப்பாற்றப்பட வேண்டுமெனில், கடவுள் மரணமடைய வேண்டும். இந்தத் தேர்வு மிகவும் தெளிவானது; இதில் சமரசம் என்கிற பேச்சுக்கே இடமில்லை. கடவுள் என்பதோடு மனிதன் வெறும் அடிமையாகத் தான் இருப்பான். மேலும், விடுதலை என்பது வெறும் வார்த்தையாக மட்டுமே இருக்கும். கடவுள் என்பது இல்லாமல் இருந்தால் மட்டுமே விடுதலை என்பதற்கு அர்த்தம் ஏற்பட ஆரம்பிக்கும்.

ஆனால், பிரட்ரிக் நீட்சேயின் வாக்கியம் ஒரு பாதி தான்; யாரும் அதை பூர்த்தி செய்ய முயற்சி செய்யவில்லை. அது முற்றுப் பெற்றது போல் தெரியலாம். ஆனால், தோற்றங்கள் எப்போதும் உண்மைகள் அல்ல. பிரட்ரிக் நீட்சேவிற்கு, இந்த உலகில் கடவுள் என்னும் கருத்தே இல்லாத மதங்கள் இருப்பதே தெரியாது. என்றாலும், அந்த

மதங்களிலும்கூட மனிதன் விடுதலையானவன் அல்ல. அவருக்கு பௌத்தம், சமணம், மேலும் மதங்களுக்கெல்லாம் சிறப்பான தாவோயிஸம் ஆகியவைகளைப் பற்றி அவருக்குத் தெரியாது. இந்த மூன்று மதங்களுக்கும் கடவுள் கிடையாது.

இதே காரணத்திற்காகத் தான் லாவோத் ஸு, மகாவீரர் மற்றும் கௌதம புத்தர் ஆகியவர்கள் கடவுளை மறுத்தனர். ஏனெனில், கடவுள் என்று ஒருவர் இருந்தால், அதன் பின்னர் மனிதன் என்பவன் அவரது கைப்பாவையாகத் தான் இருக்க முடியும் என்பதை அவர்களால் கண்டு கொள்ள முடிந்தது. அதன்பின்னர் மெய்ஞானம் பெறுவதற்கான எல்லா முயற்சிகளும் அர்த்தமற்றவை தான்; நீ விடுதலை அடையாத போது, உங்களால் எப்படி மெய்ஞானம் பெற முடியும்? அங்கே, எங்கும் நிறைந்த சர்வ வல்லமை படைத்த ஒருவர் இருப்பதால், அவரால் உங்களது மெய்ஞானத்தை எடுத்துக் கொள்ள முடியும். அவரால் எதையும் அழிக்க முடியும்.

வெறுமனே கடவுளை இறந்து போனவராக ஆக்கிவிடுவதால் மட்டும் மனிதன் விடுதலை பெற்றுவிட முடியாது. நீங்கள் இன்னொரு விஷயத்தையும் மரணமடையச் செய்ய வேண்டும் - அது தான் மதம்.

ஆனால், கடவுள் நம்பிக்கை இல்லாத மதங்கள் இருப்பது நீட்சேவிற்குத் தெரியாது. இங்கே ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக, கடவுளின் இருப்பு தான் மனித விடுதலைக்கு மிகப்பெரிய தடை என்பதைப் புரிந்து கொண்ட மக்கள் இருந்து வந்திருக்கிறார்கள். அவர்கள், கடவுளை விலக்கிவிட்டனர். ஆனாலும்கூட, மனிதன் இன்னமும் விடுதலை பெறவில்லை.

நீங்கள் புரிந்து கொள்வதற்கு, உங்களை வழி நடத்திச் செல்வதற்கு நான் முயற்சிப்பது என்னவென்றால், வெறுமனே கடவுளை இறந்து போனவராக ஆக்கிவிடுவதால் மட்டும் மனிதன் விடுதலை பெற்றுவிட முடியாது. நீங்கள் இன்னொரு விஷயத்தையும் மரணமடையச் செய்ய வேண்டும் - அது தான் மதம்.

அதனால் தான் நான் மதம் என்பதும் மரணமடைய வேண்டும் என்கிறேன்; அதுவும் கடவுளைப் பின் தொடர்ந்து இறக்க வேண்டும். மேலும், நாம் கடவுள் இல்லாத, மதம் இல்லாத, உங்களைவிட பலம்மிக்க யாரோ ஒருவர் உங்களுக்கு மேலே இல்லாத, கிறிஸ்தவன், முஸ்லீம்,

இந்து, பௌத்தன் என்பது போன்ற விதவிதமான அழகான கூண்டுகளை உருவாக்குகின்ற அமைப்புரீதியான மதங்கள் இல்லாத, ஒரு புதிய மதத் தன்மையை உருவாக்க வேண்டும்.

கடவுள் மற்றும் மதம் ஆகிய இரண்டும் இறந்துவிடும்போது, இன்னொரு விஷயமும் தானாகவே அதோடு இறந்துவிடும். அதுதான் இந்த மத குரு, இந்த தலைவர், பல்வேறு மதத் தலைவர்கள் ஆகியவையாகும். இப்போது அவர்களுக்கு இங்கே வேலை கிடையாது. இங்கு அமைப்புரீதியான மதம் என்று ஒன்று இல்லாததால், அதில் போப் ஆண்டவர் என்பவர் இருக்க முடியாது அல்லது ஒரு சங்கராச்சாரியாரோ அல்லது ஒரு அயத்துல்லாவோ இருக்க முடியாது. அவர் பிரதிநிதியாக இருப்பதற்கு, அவருக்கு ஒரு கடவுள் இருக்க மாட்டார்; அவரது வேலை முடிந்து போய்விடும்.

பிரட்ரிக் நீட்சேயைப் போன்று அதே வழியில் புத்தரும், மகாவீரரும், லாவோத் ஸூவும் கடவுளை விட்டுவிட்டனர். ஆனால், (இந்த மதங்களால்) கடவுள் என்பது கிடையாது என்றாலும் கூட, இந்த மத குருக்களால், மனிதனை அடிமைத்தனத்தில் வைத்திருக்க முடியும் என்பதை அவர்கள் அறிந்திருக்கவோ அல்லது தெரிந்திருக்கவோ இல்லை. இந்த மத குருக்கள், மனிதனை அடிமைப்படுத்திவிட்டனர்.

எனவே, பிரட்ரிக் நீட்சேயின் உண்மைக் கண்டறிதலை முழுமை பெறச் செய்ய வேண்டுமெனில், இந்த மதம் என்பது இல்லாமல் போக வேண்டும். கடவுள் என்று ஒருவர் இல்லாத போது, இங்கே அமைப்புரீதியான மதம் ஒன்று இருப்பதில் எந்த முக்கியத்துவமும் இல்லை. யாருக்காக இந்த மத அமைப்பு உள்ளது? இந்த தேவாலயங்கள், இந்தக் கோவில்கள், இந்த மசூதிகள், இந்த யூதக் கோயில்கள், இவை யாவும் மறைய வேண்டும். மேலும், அப்படி நடந்துவிட்டால், அதனால் இந்த யூத மத ரபிக்களும், பிஷப்களும், மேலும் இது போன்ற மதத் தலைவர்களும் வேலை இழந்தவர்களாக ஆகிவிடுவார்கள். அவர்கள் பயனற்றவர்கள் ஆகிவிடுவார்கள். ஆகையால், ஒரு மாபெரும் எழுச்சி நடந்துவிட்டால், மனிதன் முற்றிலும் விடுதலையாகிவிடுவான்.

எனவே, இத்தகைய விடுதலையில் உள்ள சம்பந்தங்களைப் பற்றி நான் பேசுவதற்கு முன்பு, நீ கீழ்க்கண்டவற்றைப் புரிந்து கொள்ள வேண்டும். அப்படி நீட்சேயின் உள்ளக் கூற்று நிறைவு பெற்றுவிட்டால், அதன்பிறகு இந்த மனித இனத்திற்கு என்ன விதமான விடுதலை கிடைக்கும்? கடவுள் இறந்துவிட்டார், மனிதன் விடுதலையாகிவிட்டான்

... ... எதற்காக விடுதலை? அவனது விடுதலையானது, வெறுமனே ஏனைய விலங்குகளின் விடுதலை போன்று தான் இருக்கும்.

இதை விடுதலை என்று கூறுவதும்கூட சரியல்ல. இது ஒருவிதமான உரிமம். இது ஒரு சுதந்திரம் ஆகாது. ஏனெனில், இது எந்தவிதமான பொறுப்பையும், எந்தவிதமான தன்னுணர்வையும் கொண்டு வரவில்லை. இது, மனிதன் தன்னை மேல்நிலைக்கு உயர்த்திக் கொள்வதற்கும், அவன் அடிமையாக இருந்த போது இருந்ததைவிட இன்னும் உயர்ந்த நிலைக்குச் செல்வதற்கும் உதவப் போவதில்லை. உனக்கு அளிக்கப்பட்ட விடுதலை, நீ அடிமையாக இருந்ததைவிட இன்னும் உயர்ந்த நிலைக்கு உன்னை கொண்டு செல்லவில்லையென்றால், அது அர்த்தமற்றது. அந்த விடுதலையானது, உன்னை நீ அடிமையாக இருந்த போது இருந்ததைவிட இன்னும் கீழான நிலைக்குக் கொண்டு போகின்ற சாத்தியங்கள் உண்டு. ஏனெனில், நீ அடிமையாக இருந்த போது, அங்கு ஒரு குறிப்பிட்ட கட்டுப்பாடு, ஒரு குறிப்பிட்ட ஒழுக்க விதிமுறை, ஒரு குறிப்பிட்ட கொள்கைகள் உண்டு. அப்போது உன்னைக் கவனித்துக் கொள்ள மத அமைப்புகள் இருந்தன. அவைகள் உங்களை நரகம், தண்டனை என்று பயமுறுத்தியும், மோட்சம், சொர்க்கம் என்று பேராசை கொள்ளவும், உன்னை இந்த வனவிலங்குகளை விடவும் கொஞ்சம் உயர்ந்த நிலையில் சுதந்திரம் வைத்திருக்கும். அடைய சாத்தியமுள்ள, ஆனால் சுதந்திரம் இல்லாதவனாக அவை உன்னை வைத்திருக்கும். மேலும் அது, மனிதனுக்குப் பாராட்டும்படியான எந்த குணங்களையும் கொடுத்திருக்காது.

வெறுமனே சுதந்திரம் மட்டுமே கொடுத்துவிட்டால் போதாது என்று நீட்சே ஒருபோதும் யோசிக்கவில்லை; அது போதாது என்பது மட்டுமல்ல, அது ஆபத்தானதும் கூட. அது, மனிதனை மேலும் மிருக நிலைக்கு தரம் தாழ்த்திவிடும். சுதந்திரம் என்ற பெயரில், அவன் உயர்ந்த தன்னுணர்வு நிலையை நோக்கிச் செல்கின்ற பாதையை தவறவிட்டு விடலாம்.

எனவே, கடவுள் என்பவர் இறந்துவிட்டார், மதம் என்பது ஒரு அமைப்பு போன்று இருப்பது, மறைந்து போய்விட்டது என்று கூறும் போது; அதன் பிறகு மனிதன் தானாகவே விடுதலை பெற்வனாக ஆகிவிடுவான். முதல் முறையாக அவன் தனக்குள் ஆழத்தில் உள்ள ஆன்மாவை, எந்தவிதமான இடையூறும் இல்லாமல் கண்டுபிடிப்ப தற்கான சுதந்திரத்தைப் பெற்றுவிடுவான். அவன், அவனது ஆன்மாவின் ஆழத்தில் குதிப்பதற்கு சுதந்திரமானவன் ஆகிவிடுவான்;

அவன் தனது தன்னுணர்வின் உச்சிக்கு எழுந்து செல்வதற்கான சுதந்திரத்தைப் பெற்றவனாகி விடுவான். அவனுக்கு இடையூறு செய்வதற்கு யாரும் இருக்க மாட்டார்கள்; அவனது விடுதலை முழுமையானது. ஆனால், இந்த விடுதலை என்பது, கடவுள் தனது இருப்பிடத்திலிருந்து வெளியேறினால் மட்டுமே, மதம் என்பது இல்லாமல் போனால் மட்டுமே,, மத குருக்களும், மதத் தலைவர்களும் இல்லாமல் போனால் மட்டுமே சாத்தியப்படும். அப்போது தான், மதத் தன்மை என்று நான் அழைக்கின்ற அது மட்டுமே உயிரோடு இருக்கும்படி காப்பாற்ற முடியும். மனித விடுதலையோடு மதத்தன்மை என்பது முற்றிலும் ஒத்திசைவானதாக இருக்கும்; அது, மனித வளர்ச்சியை அதிகரிக்கும்.

'மதத்தன்மை' என்ற நான் கூறுவதன் மூலமாக, மனிதன் இப்போது எப்படி இருக்கிறானோ, அப்படியே இருப்பது போதாது. அவன் இன்னும் மேலானவனாக இருக்க முடியும். அவன் இப்போது இருப்பது வெறும் விதை தான். அவன் தனக்குள் என்ன விதமான சக்தியைச் சுமந்து கொண்டிருக்கிறான் என்பது அவனுக்குத் தெரியாது என்கின்ற அர்த்தத்துடன் தான் அதைக் கூறுகிறேன்.

மதத்தன்மை என்பதற்கு, மனிதன் வளர்வதற்கான ஒரு சவால் என்று மட்டும் தான் அர்த்தம். விதையானது அதன் இறுதி வெளிப்பாட்டின் உச்சநிலைக்கு வருவதற்கான சவால் என்று தான் அர்த்தம். ஆயிரக்கணக்கான மலர்களாக வெடித்து மலர்ந்து, அதனுள் மறைந்திருக்கின்ற நறுமணத்தை பரப்புவதற்கான சவால் என்று தான் அர்த்தம். அந்த நறுமணத்தைத் தான் நான் மதத்தன்மை என்று அழைக்கிறேன். அதற்கும், நீங்கள் இப்போது மதம் என்று அழைப்பதற்கும் எந்த சம்பந்தமும் கிடையாது. அதற்கும் கடவுளுக்கும் எந்தச் சம்பந்தமும் கிடையாது. அதற்கும் மத குருவிற்கும் எந்தச் சம்பந்தமும் கிடையாது; அதற்கும் உனக்கும், உனது வளர்ச்சியின் சாத்தியங்களுக்கும் தான் சம்பந்தம் உண்டு.

## விதி மற்றும் ஊழ்வினை என்னும் கருத்து

**வி**தியும் கிடையாது, ஊழ்வினையும் கிடையாது. இல்லாத ஒன்றின் மீது, நீங்கள் உங்களது பொறுப்பினை தூக்கிப் போட முயற்சி செய்கிறீர்கள். மேலும், அது இல்லாத ஒன்றாக இருப்பதால், அதனால்

உங்களுக்கு எதிர்ப்பும் காட்ட முடியாது; அது உங்களிடம், "உங்களது பொறுப்புக்களை என்மீது தூக்கிப் போடாதீர்கள்!" என்றும் அதனால் கூற முடியாது.

கடவுள் அமைதியாக இருக்கிறார், நீங்கள் எதை வேண்டுமானால் அவர்மீது தூக்கிப் போடலாம் - எந்த எதிர்ப்பும் இருக்காது. ஏனெனில், அங்கே எதிர்ப்புத் தெரிவிப்பதற்கு யாரும் இல்லை. அதே போன்று தான் இந்த விதி என்பதும் உள்ளது. நீங்கள் தோல்வியடைந்தது உங்களை காயப்படுத்தும். காயம்பட்ட உங்களது இதயத்திற்கு ஏதாவது ஒருவகையான களிம்பு தேவை. 'விதி' என்பது ஒரு அழகான களிம்பு; மேலும், அது இலவசமாக வேறு கிடைக்கிறது. நீங்கள், "என்னால் என்ன செய்ய முடியும்? - எல்லாமே விதியின்படி தான் முடிவாகிறது,". என்று கூற முடியும். வெற்றி அல்லது தோல்வி, செழிப்பு அல்லது வறுமை, நோய் அல்லது ஆரோக்கியம் - இவையெல்லாம் விதி என்று அழைக்கப்படுகின்ற, தெரியாததொரு சக்தியின் கைகளில் உள்ளது. "நான் நன்றாகத் தான் செய்கிறேன், என்றாலும்கூட நான் தோல்வி கண்டு கொண்டே இருக்கிறேன். எனக்கு கற்றுக் கொடுக்கப்பட்ட எல்லா ஒழுக்க விதிகளையும் நான் பின்பற்றி நடக்கிறேன், என்றாலும்கூட நான் வறுமையில் வாடுகிறேன். மேலும், எல்லாவிதமான ஒழுங்கீனங்களையும் செய்கின்ற மக்கள் செல்வந்தர்களாக ஆவதையும், முன்னேறிச் செல்வதையும், புகழ் பெறுவதையும் நான் பார்க்கிறேன்," என்று நீங்கள் கூறுவீர்கள். அது உங்களுக்கு ஆறுதலைக் கொடுக்கிறது. நீங்கள் உங்களது இலக்கினை அடையாததற்கு, அது உங்களுக்கு ஆறுதல் அளிக்கிறது.

அதே போன்று, அடுத்தவர்கள் வெற்றி பெற்றாலும் கூட, உங்களுக்கு அது ஆறுதலைக் கொடுக்கிறது. அவர்கள் வெற்றி பெறுவதில் ஒன்றுமில்லை; அது அவர்களின் விதியால் தீர்மானிக்கப்படுகிறது என்று ஆறுதல் அடைவீர்கள். எனவே, ஒரு வகையில் உங்களுக்கு தாழ்வு மனப்பான்மை ஏற்படாதவாறு நீங்கள் காப்பாற்றப்படுகிறீர்கள். மற்றொரு வகையில், வெற்றி பெற்ற மனிதன் வெற்றியாளனாக ஆனது எதனாலென்றால், அவனது விதி அவன் வெற்றி பெற வேண்டும் என்று தீர்மானிக்கிறது. "அதற்கும் அவனுக்கும் சம்பந்தம் இல்லை; அவன் என்னைவிட உயர்ந்தவன் அல்ல" என்று உங்களது பொறாமை குணம் சந்தோஷமடைகிறது.

கடவுள், விதி, ஊழ் - இவைகள் எல்லாம் ஒரே வகையைச் சேர்ந்தவை; இல்லாத ஒன்றின் மீது உங்களது பொறுப்பினை தூக்கி வீசி விடுகின்ற வகையைச் சார்ந்தது.

அப்படியே கடவுள் இருந்தால், அவர் அமைதியாக இருக்க மாட்டார். நான் இடைவிடாமல் அவர் இல்லை என்று கூறி வருகிறேன். அப்படி அவர் இருப்பாரேயானால், இது தான் சரியான நேரம். இப்போது அவர் தோன்றி, "நான் இங்கு இருக்கிறேன்! நீ ஏன் நான் இல்லை என்று கூறிக் கொண்டே இருக்கிறாய்?" என்று அறிவித்திருப்பார். ஆனால், அவர் ஒரு போதும் வர மாட்டார்.

மேலும், இங்கே கடவுள் இருப்பதை மறுக்கின்ற மக்கள் இருந்து கொண்டு தான் வந்திருக்கிறார்கள். ஆனால், இதுவரை அவர், தான் இருப்பதை நிரூபிப்பதற்கு எந்தவிதமான முயற்சியும் எடுக்கவில்லை. உதாரணமாக, மேலைநாட்டு தத்துவ மேதைகளில் புகழ்பெற்ற ஒருவரான எட்மண்ட் பர்க் என்பவர், ஒரு தேவாலயத்திற்கு போய் நின்று கொண்டு, அங்கிருந்த பாதிரியாரிடம், "இது எனது கைக்கடிகாரம். கடவுள் இருக்கிறார் என்பது உண்மையானால் - எனக்கு மிப்பெரிய நிரூபணம் தேவையில்லை, வெறுமனே ஒரு எளிய நிரூபணம் போதும் - எனது கைக்கடிகாரம் ஓடிக் கொண்டிருப்பது நிற்க வேண்டும். நீங்களும் பிரார்த்தனை செய்யுங்கள், உங்களது ஜெபக் கூட்டத்தினரும் பிரார்த்தனை செய்யட்டும். நீங்கள் என்ன வேண்டுமானாலும் செய்யுங்கள். எனது கைக்கடிகாரத்தை நிறுத்துமாறு உங்களது கடவுளிடம் தூண்டுங்கள். அது ஒன்றே நான் மதமாற்றம் அடைவதற்கு போதுமான தாகும்," என்று கூறினார்.

> **கடவுள், விதி, ஊழ் - இவைகள் எல்லாம் ஒரே வகையைச் சேர்ந்தவை; இல்லாத ஒன்றின் மீது உங்களது பொறுப்பினை தூக்கி வீசி விடுகின்ற வகையைச் சார்ந்தது.**

அவர்களும் பிரார்த்தனை செய்தார்கள் - ஒரு தனி மனிதன் கடவுளுக்கு எதிராகச் சவால் விடுவது, இந்த கிறிஸ்தவ மதத்தின் புகழைக் கேள்விக்குறியதாக ஆக்கியது. மேலும், அவர் மிகப்பெரிய அற்புதத்தைச் செய்யும்படி கேட்கவில்லை, வெறுமனே ஒரு சிறிய அற்புதத்தை, அதாவது, 'எனது கைக்கடிகாரத்தை ஓடாமல் நிறுத்துங்கள்,' என்று தான் கேட்கிறார். ஆனால், கடவுளால் அதைச் செய்ய முடியவில்லை. எனவே, கடவுள் இல்லை என்று எட்மண்ட் பர்க் நிரூபித்துவிட்டார். அவரது விவாதம் எப்படி! ஆனால், அது மிகவும் எளிமையாக, தெளிவாக, சம்பந்தமுள்ளதாக இருக்கிறது.

இந்த உலகம் முழுவதும், எவற்றையெல்லாம் விட்டொழித்துவிட வேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்களோ, அவற்றையெல்லாம்

நீங்கள் இந்த கடவுள் மீதும், விதியின் மீதும், ஊழ்வினையின் மீதும் தூக்கிப் போட்டுவிடலாம். இவையெல்லாம், இல்லாதவற்றிற்கான வெவ்வேறு பெயர்கள். உண்மையிலேயே இருக்கின்ற ஒருவர் மீது நீங்கள் உங்களது குப்பைகளை நிச்சயமாகத் தூக்கி எறிய முடியாது. பொறுமைக்கு எல்லை உண்டு. நீங்கள் உங்களது பக்கத்து வீட்டுக்காரனின் இடத்தில் குப்பைகளை வீசி எறிய முயற்சி செய்து பாருங்கள். ஒருவேளை, ஒரு நாள் அவர் ஒன்றும் சொல்லாமல் விட்டுவிடலாம்; ஒருவேளை, இரண்டு நாட்கள் அவர் காத்திருக்கலாம். ஆனால், இப்படி எத்தனைக் காலம் தான் அவர் பொறுமையாக இருப்பார்? கூடிய விரைவில் அவர் உங்களது கழுத்தைப் பிடித்து நெரித்து, "நான் இங்கு இருக்கிறேன். என்னுடைய இடத்தில் நீ உனது குப்பைகளைத் தூக்கிப் போட முடியாது," என்று நிரூபித்துவிடுவார். ஆனால், அண்டை வீட்டில் யாருமே இல்லை என்றால், நீங்கள் அந்த இடத்தில் நீங்கள் விரும்பும் காலம் வரை குப்பைகளை தூக்கி தொடர்ந்து கொட்ட முடியும். யாரும் எதிர்ப்புக் காட்ட மாட்டார்கள். யாரும் வெளியே வந்து, 'இங்கு நடப்பது என்ன? உங்களுக்குக் கொஞ்சம்கூட நாகரீகம் என்பது கிடையாதா?' என்று கேட்கமாட்டார்கள்.

உங்களால் சுதந்திரமாக இருக்க முடியும். ஆனால், அதற்கான விலை, நீங்கள் உங்களது பொறுப்புக்களை முழுமையாக ஏற்றுக் கொள்வது தான் ஆகும்.

கடவுள், விதி, ஊழ்வினை இவையெல்லாம் பொய்யான வார்த்தைகள், உயிரற்ற வார்த்தைகள். இதைத் தவிர வேறு ஒன்றும் கிடையாது. அவைகளை முற்றிலுமாக விட்டொழித்து விடுங்கள். ஏனெனில், அவைகளை விட்டொழிப்பது, உங்களை ஒரு தனித் தன்மை உள்ளவராக ஆக்கிவிடும். உங்களது செயல்களுக்கும், நீங்கள் தான் பொறுப்பானவர் என்று ஆக்கிவிடும். மேலும், இப்படி நீங்கள் உங்களது பொறுப்பினை எடுத்துக் கொள்ளாத வரையில், நீங்கள் ஒருபோதும் பலம் பொருந்தியவர் ஆக முடியாது. நீங்கள் ஒருபோதும் சுதந்திரமானவர் ஆக முடியாது. நீங்கள் ஒரு போதும் விடுதலையை சுவாசிக்க முடியாது.

உங்களால் சுதந்திரமாக இருக்க முடியும். ஆனால், அதற்கான விலை, நீங்கள் உங்களது பொறுப்புக்களை முழுமையாக ஏற்றுக் கொள்வது தான் ஆகும்.

நான் அப்படிப்பட்ட அபரிமிதமான சுதந்திரத்தை உணர்வதனால் தான், உங்களைப் பார்த்து நான் கவலை கொள்கிறேன். உங்களுக்கும்

என்னைப் போன்று ஆவதற்கான அதே சந்தர்ப்பங்கள் உள்ளன. ஒரு விடுதலை பெற்ற தனி மனிதனாக மலர்வதற்கான அதே சக்தி உங்களிடமும் உள்ளது. ஆனால், நீங்கள் இன்னமும் ஒரு அடிமையாகவே இருந்து கொண்டே போகிறீர்கள். மேலும், ஒருபோதும் பொறுப்புடன் இல்லாமல் இருப்பதன் மூலம், நீங்கள் அதை சமாளித்து வருகிறீர்கள்.

இப்படி பொறுப்பில்லாமல் இருப்பது தான், உங்களை சுதந்திரமானவராக ஆக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? உங்களுடைய செயல்களுக்கான பொறுப்பினை நீங்கள் உணராமல், உங்களது எண்ணங்கள், உங்களது இருப்புநிலை ஆகியவற்றிற்கு பொறுப்பினை நீங்கள் உணராமல் இருந்துவிட்டால், அவைகளின் விளைவுகளில் இருந்து நீங்கள் தப்பித்துவிடலாம் என்று நினைக்கிறீர்களா? முடியாது, முற்றிலும் முடியாது. அது உங்களை அடிமையாக ஆக்கிவிடும்; அது உங்களை மனித இனத்திற்குக் கீழானவர்களாக தரம் தாழ்த்திவிடும். அது உங்களின் எல்லாப் பெருமைகளையும் எடுத்துவிடும். நீங்கள் நிமிர்ந்து நடக்க முடியாது; நீங்கள் கூன் விழுந்தவர் போல் ஆக வேண்டியது தான். உங்களது புத்திசாலித்தனம் வளராது. ஏனெனில், நீங்கள் அந்தச் சவாலை ஏற்றுக் கொள்ளவில்லை. நீங்கள் உங்களது விதிக்காகவும், உங்களது ஊழ்வினைக்காகவும், கடவுளுக்காகவும் காத்துக் கொண்டிருக்கிறீர்கள். "நேரம் காலம் வரும் போது, சரியான நேரத்தில், கடவுள் விரும்பினால் - நானும் சந்தோஷமாக இருப்பேன்," என்று நீங்கள் நினைக்கிறீர்கள்.

உங்களுடைய பேரானந்தத்தைத் தீர்மானிப்பதற்கு, இங்கே கடவுள் என்று ஒருவர் இல்லை. நீங்கள் இந்த இயற்கையில் தனியாக இருக்கிறீர்கள். நீங்கள் தனியாகவே வந்தீர்கள்; நீங்கள் தனியாகவே மரணமடைவீர்கள். இந்த பிறப்பிற்கும் இறப்பிற்கும் இடையில் வேண்டுமானால் உங்களது மனைவி, உங்களது தந்தை, உங்களது தாய், உங்களது கணவர், உங்களது நண்பர், இப்படி யாராவது ஒருவர் உங்களோடு இருப்பது போன்று நீங்கள் உங்களை ஏமாற்றிக் கொள்ள முடியும். ஆனால், இது வெறுமனே உங்களால் உருவாக்கப்பட்டதொரு நம்பிக்கை தான். நீங்கள் தனியாகத் தான் வருகிறீர்கள், தனியாகத் தான் செல்கிறீர்கள். இந்த பிறப்பிற்கும், இறப்பிற்கும் இடையிலும் கூட நீங்கள் தனியானவர் தான்.

அதற்காக, நீங்கள் ஒரு ஆணையோ அல்லது பெண்ணையோ நேசிக்க முடியாது என்று நான் கூறவில்லை. உண்மையில், இரண்டு சுதந்திரமானவர்கள், விடுதலை பெற்ற மக்கள், தங்களது பொறுப்புகளை தங்களின் தோளில் சுமக்கின்ற இருவர் சந்திக்கும் போது, அதில்

அளவுகடந்த அழகு இருக்கும். அப்போது யாரும் மற்றவருக்குச் சுமையாக இருக்க மாட்டார்கள். யாரும் அடுத்தவர் மீது எதையும் தூக்கிப் போட மாட்டார்கள். மற்றவர்கள் மீது எதையும் சுமத்துகின்ற அந்த எண்ணத்தையே விட்டுவிடுவீர்கள். நீங்கள் இருவரும் ஒன்று சேர்ந்து இருக்க முடியும். ஆனால், உங்கள் இருவரின் தனிமையும் யாராலும் தொடப்படாததால், பரிசுத்தமானதாக, தெள்ளத் தெளிவானதாக, களங்கமில்லாததாக இருக்கும். நீங்கள் அடுத்துவரின் எல்லைக்குள் அனுமதியின்றி அத்துமீறி ஒருபோதும் பிரவேசிக்க மாட்டீர்கள். நீங்கள் ஒருவரை ஒருவர் அனுபவிக்க முடியும். ஏனெனில், நீங்கள் வெறுமனே தனியாக இருக்கிறீர்கள்.

நீங்கள் எந்த அளவுக்குத் தனியாக இருக்கிறீர்களோ, அந்த அளவுக்கு நீங்கள் தனியானவர்கள் என்பதை மிகவும் தெளிவாக, அதாவது நீங்களும் தனியானவர், அவரும் தனியானவள் என்பதைப் புரிந்து கொள்ள முடியும். மேலும், எந்த அளவுக்குத் தனியாக இருக்கிறீர்களோ, அந்த அளவுக்கு இரண்டு தனிமைகள், இரண்டு பரிசுத்தங்கள், இரண்டு தனி மனிதர்கள் சந்திக்கின்ற மிகப்பெரிய சந்திப்பிற்காக சாத்தியம் அங்கே இருக்கும்.

எனவே, ஊழ்வினை, விதி, கடவுள் ஆகிய வார்த்தைகளை மறந்து விடுங்கள். மேலும், இந்த ஜோதிடர்களும், கைரேகைக்காரர்களும், எதிர்காலத்தைப் பற்றி குறி சொல்பவர்களும், உங்கள் மனதில் இருப்பதை சொல்பவர்களும் உங்களை ஏமாற்றிவிடுவதற்கு அனுமதிக்காதீர்கள். நீங்களாக உருவாக்கவில்லை என்றால், எதிர்காலம் என்கிற ஒன்றே கிடையாது! மேலும், நாளை என்ன தான் நடந்தாலும், அது உங்களால் உருவாக்கப்பட்ட ஒன்றாகத் தான் இருக்கப் போகிறது. மேலும், அதை நீங்கள் இன்றே, இப்பொழுதே தான் செய்தாக வேண்டும். ஏனெனில், இன்றைய பொழுதில் இருந்துதான், இன்று என்பதன் கருவறையில் இருந்து தான் நாளை என்பது பிறக்கும்.

பொறுப்பு முழுவதையும் முழுமையாக உங்கள் மீது எடுத்துக் கொள்ளுங்கள் - அது தான் நான் உங்களுக்குக் கூறும் நற்செய்தி. அதனால் தான் நான் எப்போதும் உங்கள் மனதில் உள்ள கடவுளை அழிப்பதற்கு முயற்சி மேற்கொள்கிறேன். அவருக்கு எதிராக என்னிடம் ஒன்றும் இல்லை. அவருக்கு எதிராக என்னால் என்ன வைத்துக் கொள்ள முடியும்? அவர் தான் இல்லவே இல்லையே! இல்லாத யாரோ ஒருவரிடம் நான் எனது நேரத்தை வீணாக்கிக் கொண்டிருப்பதாக நீ எண்ணுகிறாயா? கிடையாது, நான் உங்களது கட்டுதிட்டங்களோடு தான் போராடுகிறேன். அவைகள் இருக்கின்றன, கடவுள் இல்லை. ஆனால், கடவுள் என்னும் எண்ணம் உங்களுக்குள் உள்ளது. எனவே, நான்

உங்களிடம் கூறுகிறேன்; சுத்தமாக இருக்கும்படியும், உங்களது வாழ்க்கையின் முழுப் பொறுப்பையும் எடுத்துக் கொள்ளும்படியும் உங்களிடம் நான் கூறுகிறேன்.

இது தான் எனது அனுபவம். என்று நான் என்னுடைய பொறுப்பு முழுவதையும் நானே எடுத்துக் கொண்டேனோ, அன்று, தான் எனது விடுதலைக்கான கதவுகள் திறப்பதை நான் கண்டேன். அவைகள், இரண்டும் ஒன்றாகவே நிகழ்கிறது.

எல்லோரும் விடுதலை பெற விரும்புகின்றனர். ஆனால், யாரும் பொறுப்பு ஏற்றுக் கொள்ள விரும்புவதில்லை. எனவே, நீங்கள் ஒருபோதும் விடுதலை பெறப் போவதில்லை; நீங்கள் ஒரு அடிமையாகவே இருப்பீர்கள். அப்படி நீங்கள் அடிமையாக இருப்பதும் உங்களது பொறுப்பில் தான் என்பதையும் நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் தான் அதைத் தேர்வு செய்து கொண்டுள்ளீர்கள்; அது உங்கள் மீது திணிக்கப்படவில்லை.

எனக்கு டயோஜினஸ் என்னும் கிரேக்க நாட்டு தத்துவ ஞானி, அபூர்வமான குணாதிசயங்கள் கொண்ட அந்த ஞானியைப் பற்றிய நினைவு வருகிறது. அவர், அரிஸ்டாட்டில் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்தவர். அரிஸ்டாட்டிலுக்கு எதிராக நான் எப்படி இருக்கிறேனோ, அவரும் அப்படித்தான் அவரும் எதிராக இருந்தார். எனவே, டயோஜினஸிடம் எனக்கு கொஞ்சம் நட்பு உண்டு.

அரிஸ்டாட்டில், மனிதனை இறக்கைகள் இல்லாமல் இரண்டு கால்களில் நடக்கின்ற மிருகம் என்று விவரித்தார். டயோஜினஸ் என்ன செய்தார் தெரியுமா? அவர் ஒரு மிருகத்தைப் பிடித்தார். இரண்டு கால்களால் நடந்து கொண்டு, அதே சமயம் இறகுகளும் பெற்று அவைகளால் பறக்க முடிகின்ற அநேக விலங்கினங்கள் உள்ளன அல்லவா. டயோஜினஸ் ஒரு மயிலைப் பிடித்தார். அவர் அதன் இறகுகளை எல்லாம் பிடுங்கி எறிந்தவிட்டு, அந்த மயிலை அரிஸ்டாட்டிலுக்கு, "தயவு செய்து ஒரு மனித இனத்தின் பரிசை பெற்றுக் கொள்ளுங்கள்," என்ற வாசகத்துடன் அனுப்பி வைத்தார்.

டயோஜினஸ் நிர்வாணமாக இருப்பது வழக்கம். ஏனெனில், "மனிதன் நிர்வாணமாகத் தான் பிறந்தான். மேலும், அவன் ஆடைகளால் மூடி மறைத்துக் கொள்வதனால் தான் பலம் இல்லாதவனாக ஆகிவிட்டான்," என்று கூறுவார். இங்கிலாந்து நாட்டில் சில நாய்களைத் தவிர இந்த உலகில் எந்த ஒரு மிருகமும் ஆடைகள் அணிவதில்லை. இங்கிலாந்து ஒரு அதிசயமான நாடு. நாய்களுக்கும் கூட ஆடை அணிவிப்பது வழக்கம். ஏனெனில், நிர்வாணமாக இருக்கின்ற

நாயானாது, கிறிஸ்தவன் அல்லாதவன் ஆகிவிடும். விக்டோரியா மகாராணியின் இங்கிலாந்து நாட்டில், நாற்காலிகளின் கால்களும்கூட துணியால் மூடி மறைக்கப்பட்டிருந்ததை அறிந்து நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். ஏனெனில், துணியால் மறைக்கப்படாமல், நிர்வாணமாக இருக்கின்ற நாற்காலியின் கால்களைப் பார்ப்பது நாகரீகமாகாது.

ஆனால், டயோஜினஸ் நிர்வாணமாக வாழ்ந்தார். அவர் மிகவும் பலம் வாய்ந்த மனிதனாக இருந்தார். மற்றவர்களை கடத்திக் கொண்டு போய் சந்தையில் அடிமைகளாக விற்கின்ற நான்கு பேர் அவரைப் பார்த்து, "நமக்கு ஒரு நல்ல ஆள் கிடைத்துவிட்டார். இந்த ஆளால் நமக்கு அதிகப் பணம் கிடைக்கும். நாமும் அநேக அடிமைகளை இதுவரை விற்று வந்திருக்கிறோம். ஆனால், யாரும் இவரைப் போன்று பலம் வாய்ந்தவராகவும், அழகானவராகவும், இளமையானவராகவும் இல்லை. நாம் எவ்வளவு கூடுதல் விலை பெற முடியுமோ, அவ்வளவு விலையைப் பெறலாம். மேலும், நாம் இந்த ஆளை பீடத்தின் மீது ஏலத்திற்காக வைக்கும் போது, சந்தையில் ஏகப்பட்ட போட்டி இருக்கப் போகிறது," என்று நினைத்தார்கள். மேலும், அவர்கள், "நாம் நால்வரும் கூட அவரைப் பிடிக்க முடியாது. அவர் நம் எல்லோரையும் கொன்றுவிடுவார் போலிருக்கிறது," என்றும் நினைத்தனர்.

இவர்கள் பேசுவதையெல்லாம் டயோஜினஸ் கேட்டுக் கொண்டிருந்தார். அவர், ஆற்றின் கரையில் ஒரு மரத்தின் கீழ் உட்கார்ந்து கொண்டு, அந்த மாலைப் பொழுதின் தென்றலை ஆனந்தமாக அனுபவித்துக் கொண்டிருந்தார். அப்போது, அந்த மரத்தின் பின்னால் இருந்து கொண்டு தான் அந்த நால்வரும் என்ன செய்யலாம் என்று திட்டம் தீட்டிக் கொண்டிருந்தனர். எனவே, அவர் அவர்களிடம், "கவலைப்படாதீர்கள். இங்கு வாருங்கள்! நான் உங்களைக் கொன்றுவிடுவேன் என்று நீங்கள் கவலைப்பட வேண்டாம். மாட்டேன். நான் யாரோடும் எதிர்த்துச் சண்டையிட மாட்டேன். நான் எதற்கும் எதிர்ப்புத் தெரிவிப்பதில்லை. நீங்கள் என்னை ஒரு அடிமையாக விற்பதற்கு விரும்புகிறீர்களா?" என்று கேட்டார்.

இதைக் கேட்டு தர்மசங்கடத்துடனும், பயத்துடனும் அந்த நால்வரும், "அப்படித்தான் நாங்கள் நினைத்துக் கொண்டிருந்தோம். நாங்களோ ஏழைகள். எனவே, நீங்கள் விரும்பினால் ... ...," என்றனர்.

அதற்கு டயோஜினஸ், "ஆம், எனக்கு விருப்பம் தான். ஏதாவது ஒரு வகையில் உங்களது வறுமையைப் போக்க உதவி முடியுமெனில், அது அழகானது தான்," என்று பதில் கூறினார்.

எனவே, அவர்கள் சங்கிலிகளை எடுத்துக் கொண்டு வந்தனர். அவர் அவர்களிடம், "அவைகளை ஆற்றில் வீசி எறியுங்கள். நீங்கள் என்னை சங்கிலியால் கட்டத் தேவையில்லை. நான் உங்களுக்கு முன்னால் செல்கிறேன். எதிலிருந்தும் தப்பி ஓட நான் விரும்புவதில்லை. உண்மையில், ஒரு உயர்ந்த பீடத்தில் என்னை நிற்க வைக்கப் போவதையும் என்னை அடைவதற்கு நூற்றுக்கணக்கானவர்கள் முயற்சி செய்யப் போவதையும், நான் விற்கப்படப் போகிறேன் என்பதை கேள்விப்பட்டும் நான் பூரிப்படைகிறேன். இந்த ஏலம் எனக்குப் பூரிப்பூட்டுகிறது - நான் வருகிறேன்," என்றார்.

இந்த ஆள் பலம் வாய்ந்தவராகவும், அழகானவராகவும் இருப்பதோடு மட்டுமல்ல, அவர் ஒரு பைத்தியம் போன்றும் தெரிகிறது; அவர் ஆபத்தானவராகக்கூட இருக்கலாம் என்று நினைத்து அந்த நான்கு பேரும் கொஞ்சம் பயமடைந்தார்கள். ஆனால், இப்போது அவர்கள் தப்பிச் செல்ல ஒரு வழியும் இல்லை. அவர் அவர்களிடம், "நீங்கள் தப்பி ஓட நினைத்தால், நீங்கள் உங்களது உயிரைப் பணயம் வைக்க வேண்டியதிருக்கும். நீங்கள் நால்வரும் வெறுமனே என்னைப் பின் தொடர்ந்து வாருங்கள். என்னைக் கொண்டு போய் சந்தையின் அந்த பீடத்தின் மீது நிறுத்துங்கள்," என்றார்.

விருப்பமில்லாமல் அவர்கள் நான்கு பேரும் அவரைப் பின் தொடர்ந்தார்கள். அவர்கள் அவரை அழைத்துச் செல்ல விரும்பினார்கள். ஆனால், அவரோ அவர்களுக்கு முன்பு சென்று கொண்டிருந்தார்! இதில் உள்ள முக்கிய கருத்தை நீங்கள் பார்த்தீர்களா? இப்படிப்பட்ட ஒரு சூழ்நிலையிலும் கூட, அவர் தனது பொறுப்பை முழுமையாக ஏற்றுக் கொண்டார். இப்படிப்பட்ட ஒரு சூழ்நிலையிலும் கூட, அவர் சுதந்திரமான மனிதராக இருந்தார். ஒரு வியாபாரப் பொருளைப் போன்று, ஏலத்தில் விற்கப்படுகின்ற ஒரு மனிதனுக்கு நிகழ்கின்ற அந்த அசிங்கமான விஷயத்திலும்கூட, அந்த நான்கு பேரும் சதித்திட்டம் தீட்டி சந்தையில் அவரை விற்பதற்கு அழைத்துச் செல்லும் அந்த சூழ்நிலையிலும் கூட, அவர் ஒரு சுதந்திரமான மனிதராகத் தான் இருந்தார்.

ஆனால், அவர் அந்த நால்வரிடமும், "எதற்கும் பயப்படாதீர்கள். மேலும், தப்பித்து ஓடவும் முயற்சி செய்யாதீர்கள். நீங்கள் எனக்கு ஒரு மிகப்பெரிய கருத்தைக் கொடுத்திருக்கிறீர்கள். நான் உங்களுக்கு நன்றிக் கடன் பட்டிருக்கிறேன். இது எனது பொறுப்பு. நானாகவே சந்தைக்குப் போகிறேன். நீங்கள் என்னை ஏலத்தில் விடுங்கள்," என்றார்.

"இவர் என்ன, இப்படிப்பட்ட மனிதராக இருக்கிறாரே?" என்று அவர்கள் ஆச்சரியமடைந்தனர். ஆனால், இப்போது அவர்கள்பின்

வாங்கிச் செல்வதற்கு வழி இல்லை. எனவே, அவர்கள் அவரைப் பின் தொடர்ந்து சென்றனர். அங்கே அவர் பீடத்தின் மீது எல்லோரும் பார்க்கும்படி வைக்கப்பட்ட போது, அங்கு குண்டூசி விழுந்தால்கூட சத்தம் கேட்கும் அளவுக்கு முழு அமைதி நிலவியது. இதுவரை, மக்கள் இது போன்றதொரு, எல்லாம் அளவுடனும், அழகுடனும் இருந்த ஒரு உடலைப் பார்த்ததில்லை. அது ஏதோ இரும்பால் செய்யப்பட்ட உடல் போன்று பலம் வாய்ந்ததாக இருந்தது.

அங்கிருந்த ஏலதாரர் எதுவும் சொல்வதற்கு முன்பு, டயோஜினஸ் அவர்களிடம், "மக்களே இங்கே பாருங்கள்! எந்த ஒரு அடிமைக்கும் விற்கப்படுவதற்காக இங்கே ஒரு எஜமான் நிற்கிறான்; ஏனெனில், இந்த நான்கு பேருக்கும் பணம் தேவைப்படுகிறது. எனவே, ஏலத்தை ஆரம்பியுங்கள். ஆனால், நீங்கள் வாங்கப் போவது ஒரு எஜமானைத் தானே தவிர, ஒரு அடிமையை அல்ல, என்பதை நினைவில் கொள்ளுங்கள்." என்றார்.

ஒரு ஆள் அவரை வாங்கினார். ஏனெனில், அவரால் தான் ஏலத்தில் மேலும்மேலும் பணத்தைக் கொடுக்க முடிந்தது. அநேகம் பேர் அவரை ஏலம் எடுக்க ஆர்வம் கொண்டனர். ஆனால், இறுதியில் ஒரு பெருந்தொகை, இதுவரை யாருமே கேள்விப்படாத ஒரு பெரிய தொகை அந்த நால்வருக்கும் கொடுக்கப்பட்டது. டயோஜினஸ் அவர்களிடம், "இப்போது உங்களுக்கு சந்தோஷம் தானா? நீங்கள் இப்போது போகலாம். நான் இந்த அடிமையோடு போகிறேன்," என்றார்.

அரண்மனைக்குப் போவதற்காக அவர்கள் ரதத்தில் போய்க் கொண்டிருக்கும் போது, அந்த அரசர் டயோஜனிஸிடம், "நீங்கள் என்ன பைத்தியமா அல்லது வேறு எதுவுமா? நீங்கள் உங்களை ஒரு எஜமானாக நினைக்கிறீர்கள். நானோ ஒரு அரசன். ஆனால், என்னை நீங்கள் ஒரு அடிமை என்று நினைக்கிறீர்களே?," என்று கேட்டார்.

அதற்கு டயோஜினஸ், "ஆம், நான் முட்டாள் அல்ல. ஆனால், நீ தான் பைத்தியக்காரன். அதை நான் இப்போதே நிரூபிக்கிறேன்," என்றார். அந்த ரதத்தின் பின் பகுதியில் ராணி இருந்தாள். அப்போது டயோஜினஸ், "உன்னுடைய ராணிக்கு ஏற்கனவே என்மீது விருப்பம் வந்துவிட்டது. உன்னைப் பொருத்த அளவில், அவள் உனது அனுபவம் போதும் என்று நினைத்து விட்டாள். எனவே, நீ ஒரு எஜமானை விலைக்கு வாங்கியது ஆபத்தானது," என்றார்.

அந்த அரசர் அதிர்ச்சி. அடைந்தார். உண்மையில் டயோஜினஸோடு ஒப்பிடும் போது, அவர் ஒன்றுமில்லை. அவர் தனது வாளை எடுத்தார். அவர் தனது ராணியிடம், "இவர் கூறுவது உண்மை

தானா?" என்று கேட்டார். "நீ உண்மையைச் சொன்னால் உனது உயிர் காப்பாற்றப்படும். இது எனது வாக்குறுதி. ஆனால், நீ உண்மையில்லாமல் இருந்துவிட்டு, நான் பின்னாளில் அதைக் கண்டுபிடித்தால், உனது தலை போய்விடும்," என்றார்.

பயம் தான், அச்சம் தான் என்றாலும்கூட, அந்த ராணி அரசரிடம், "அது உண்மை தான். அவருக்கு முன்னால் நீங்கள் ஒன்றுமில்லை. நான் அவரிடம் மயங்கிவிட்டேன், வசீகரிக்கப்பட்டேன். அந்த ஆளிடம் ஏதோ ஒரு மாயம் உள்ளது. அவரோடு ஒப்பிடும் போது, நீங்கள் வெறும் ஏழை தான். இது தான் உண்மை," என்றாள்.

உடனே, அரசர் ரதத்தை நிறுத்திவிட்டு, டயோஜினஸிடம், "இந்த ரதத்தைவிட்டு கீழே இறங்குங்கள். நான் உங்களை விடுதலை செய்து விடுகிறேன். இது போன்ற ஆபத்துக்களை நான் என்னுடன் அரண்மனைக்கு எடுத்துச் செல்ல விரும்பவில்லை," என்றார்.

அதற்கு டயோஜினஸ், "நன்றி. ஒரு அடிமை போன்று ஆகக்கூடிய ஆள் அல்ல நான். அதற்கான எளிமையான காரணம் என்னவென்றால், எல்லாவற்றிற்குமான பொறுப்பையும் நானே எடுத்துக் கொள்கிறேன். நான் அந்த நான்கு பேரையும் குற்றவுணர்வுடன் விட்டுவிடவில்லை. அவர்கள் என்னை அங்கு கொண்டு வரவில்லை. நானாக விருப்பப்பட்டு தான் அங்கு வந்தேன். அவர்கள் இதனால் உதவி பெற்றதாக உணர்ந்தார்கள். மேலும், இது உங்களது ரதம். நீங்கள் என்னை வெளியே இறக்க விரும்பினால், அதுவும் மிகவும் நல்லது. மேலும், ரதத்திற்கும் எனக்கும் பரிச்சயம் இல்லை. நானோ நிர்வாணமாகத் திரிகிற மனிதன். எனது கால்கள் பலம் வாய்ந்தவை. எனவே, தங்க ரதம் எனக்கு பொருந்தி வராது," என்றார்.

எனவே, பொறுப்பெடுத்துக் கொள்ளுங்கள்! அப்படி இருந்தால், அதன் பிறகு நீங்கள் முழு வறுமையில் இருந்தாலும், கஷ்டப்பட்டாலும், சிறையில் அடைக்கப்பட்டாலும், நீங்கள் முற்றிலும் உங்களுக்கு ஒரு எஜமான் போன்று தான் இருப்பீர்கள். அந்த பொறுப்பினால் வருகின்ற சுதந்திரத்தை நீங்கள் பெறுவீர்கள்.

உங்களது எல்லா மதங்களும் உங்களை, கடவுள், விதி, மற்றும் ஊழ்வினை இவற்றைச் சார்ந்து இருக்கும்படி ஆக்கிவிட்டது. அவைகள் எல்லாம், இல்லாத ஒன்றிற்கான வேறு வேறு பெயர்கள். உண்மையில் இருப்பது, உனது அடிமைத்தனம் அல்லது உனது விடுதலை தான். இதில் எது வேண்டும் என்று தேர்ந்தெடுங்கள். நீங்கள் விடுதலையைத் தேர்வு செய்தால், அதன் பிறகு, உங்களை அடிமையாக்குவதற்கு மற்றவர்கள் கையாண்ட அந்த தந்திர சூழ்ச்சிகளை நீங்கள் அழிக்க வேண்டும்.

அதைத் தான் நான் இங்கு செய்ய முயற்சி செய்கிறேன். உங்களது சங்கிலிகளை வெட்டி எறிந்துவிட்டு, உங்களை விடுதலை பெறச் செய்து, நீங்கள் நீங்களாகவே இருப்பதற்கு முயற்சி செய்கிறேன்.

மேலும், நீங்கள் நீங்களாகவே ஆகிவிடுகின்ற அந்த நொடிப் பொழுதே, நீங்கள் வளர்ச்சி அடைய ஆரம்பித்து விடுகிறீர்கள். நீங்கள் பசுமையாகிவிடுவீர்கள். மலர்கள் மலர ஆரம்பிக்கும். அதனால், உங்களைச் சுற்றி மிகுந்த நறுமணம் கமழும்.

## பறந்து செல்ல பயம்

ரவீந்திரநாத் தாகூர் தனது கீதாஞ்சலியில் கூறுகிறார் :

> "வளர்ச்சிக்கான தடைகள் எளிதில் மாற்ற முடியாதவையாக உள்ளன. ஆனால், அதை நான் உடைப்பதற்கு முயற்சிக்கும் போது, எனது இதயம் வலிக்கிறது. விடுதலை என்பது தான் நான் விரும்புவதெல்லாம். ஆனால், அதற்காக நம்பிக்கை கொள்வதற்கு நான் வெட்கப்படுகிறேன். கடவுளிடம் விலை மதிக்க முடியாத செல்வம் உள்ளது என்பதை நான் நிச்சயமாக நம்புகிறேன். மேலும், நீரே எனது நல்ல நண்பன். எனது அறையில் மின்னுகின்ற ஜிகினாத் தாளின் வெளிச்சத்தை வெளியேற்றுகின்ற இதயம் என்னிடம் இல்லை. எனது உடலைச் சுற்றியுள்ள துணியானது, தூசு மற்றும் மரணத்தினால் ஆனதாக உள்ளது. நான் அதை வெறுக்கிறேன். எனினும், நான் அதை அன்பினால் ஆரத் தழுவுகிறேன். எனது கடன்கள் அதிகமாக உள்ளன, எனது தோல்விகள் மிகப் பெரியவை, எனது கேவலங்கள் ரகசியமும் கனமுமானவை. என்றாலும் கூட, எனது நலனுக்காக கேட்க வரும் போது, என்னுடைய பிரார்த்தனையானது பலித்துவிடுமோ என்று நான் பயத்தில் அதிர்ந்து போகிறேன்."

ரவீந்திரநாத் தாகூர், மிகவும் தற்காலத்து மனிதர் என்றாலும்கூட, மிகவும் பழமையானவரும் கூட. அவரது வார்த்தைகள் தற்கால மனதிற்கும், இந்த உலகின் பழமையான ஞானிகளுக்கும் இடையேயான ஒரு பாலம் போன்றவை. குறிப்பாக, அவரது புத்தகமாகிய 'கீதாஞ்சலி'யானது, மனிதனின் பரிணாம வளர்ச்சிக்கும், மனிதனின் தன்னுணர்விற்கும் மிகப்பெரிய பங்களிப்பாகும். இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய அபூர்வமான புத்தகங்களில் அதுவும் ஒன்று.

சாதாரணமாகப் பார்த்தால், ரவீந்திரநாத் தாகூர் ஒரு சமயவாதி அல்ல. அவர், முன்னேற்றச் சிந்தனாவாதிகளில் ஒருவர் - பாரம்பரியம் இல்லாதவர், ஆச்சாரம் இல்லாதவர் - ஆனால், அவரது மகத்துவம், அவரது குழந்தைத்தனமான கள்ளம் கபடமற்ற நிலையில் உள்ளது. மேலும், அந்த வெள்ளை உள்ளத்தினால் தான் அவர் இந்தப் பிரபஞ்ச ஆன்மாவின் ஒரு வாகனமாக ஆக முடிந்தது. அவர், கவிஞர்களில் மிகவும் உயர்ந்த வகையைச் சேர்ந்தவர்; மேலும், அவர் ஒரு மறை ஞானி. இப்படிப்பட்டதொரு ஒற்றுமை இதற்கு முன்பு ஒன்று அல்லது இரண்டு முறை மட்டுமே நிகழ்ந்துள்ளது. கலீல் ஜிப்ரானிடம், பிரட்ரிக் நீட்சேயிடம், மூன்றாவதாக ரவீந்திரநாத் தாகூரிடம். இந்த மூன்று மனிதர்களோடும் அந்தப் பிரிவு முழுமையடைந்துவிட்டது. மனிதனின் இந்த நீண்ட வரலாற்றில் இது அசாதாரணமானது. இங்கே மிகப்பெரிய கவிஞர்களும், மறை ஞானிகளும் இருந்துள்ளனர். இங்கே மிகப்பெரிய கவிஞர்களாக இருந்து கொண்டு, கொஞ்சம் மட்டுமே மறை ஞானத்தைக் கொண்டவர்களும் இருந்து வந்துள்ளனர். அதே போன்று, மிகப் பெரிய மறை ஞானிகளாக இருந்து கொண்டு அவர்கள் தங்களை கவிதையில் வெளிப்படுத்தியுள்ளனர். ஆனால், அவர்களது கவிதை மிகப் பெரியது அல்ல.

ரவீந்திரநாத் தாகூர் மிகவும் வித்தியாசமானதொரு சூழ்நிலையில் இருந்துள்ளார். இரண்டு பெண்களைக் காதலித்த ஒருவரைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர் எப்போதும் சங்கடத்தில் தான் இருப்பார். ஏனெனில், ஒரு பெண்ணே சங்கடத்தை உருவாக்கப் போதும்! இரண்டு பெண்களுமே தங்களில் யாரை அவர் அதிகம் நேசிக்கிறார் என்று அறிந்து கொள்ள விரும்பினார்கள். அவர்கள் அந்த ஆளை ஒரு இயந்திரப் படகில் ஏற்றிக் கொண்டு ஏரி ஒன்றில் சென்றனர். ஏரியின் நடுவில் படகை நிறுத்திவிட்டு, அந்த மனிதரிடம், "இரண்டில் ஒன்று இப்போது தெரிந்தாக வேண்டும். ஏனெனில், எங்களது இதயம் கனக்கிறது. எனவே, நாங்கள் அதைத் தெரிந்து கொண்டால், அதன் பிறகு மெதுவாக அதை சகித்துக் கொள்வோம், அதை ஏற்றுக் கொள்வோம். ஆனால், எதுவும் தெரியாமல் இருட்டில் இருந்து கொண்டு, எப்போதும் அதைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பது எங்களுக்குக் காயத்தை உண்டாக்குகிறது," என்று கூறினார்கள்.

அந்த ஆள் அவர்களிடம், "என்ன விஷயம்? நேரடியாகக் கேளுங்கள்," என்றார். இரண்டு பெண்களுமே ஒன்று சேர்ந்து, "எங்களது கேள்வி என்னவென்றால், எங்கள் இருவரில் நீங்கள் யாரை அதிகம் நேசிக்கிறீர்கள்? என்பது தான்," என்று கூறினார்கள்.

அந்த மனிதர் ஆழ்ந்த அமைதியில் இருந்தார் - அந்த சூழ்நிலையோ கொஞ்சம் வித்தியாசமாக இருந்தது, ஏரியில் நடுவில் இருந்தனர் - ஆனால், அவர் மிகவும் நகைச்சுவை குணம் நிறைந்தவராக இருந்தார். அவர் அவர்களிடம், "நான் உங்கள் இருவரில் ஒருவரைவிடவும் மற்றவரை அதிகம் நேசிக்கிறேன்," என்றார். உடனே இரண்டு பெண்களும் திருப்தி அடைந்துவிட்டார்கள். அதைத் தான் அவர்கள் விரும்பினார்கள்.

அதே போன்று தான் ரவீந்திரநாத் தாகூரைப் பற்றியும், அவர் ஒரு மிகப்பெரிய கவிஞரா அல்லது மிகப்பெரிய மறை ஞானியா என்று கூறுவது மிகவும் கடினம். அவர் இரண்டும் சேர்ந்தவர் - ஒன்றைவிட மற்றதில் மிகப் பெரியவர் - அதுவும் இந்த இருபதாம் நூற்றாண்டில்.

ரவீந்திரநாத் இந்தியாவில் மட்டுமே சுற்றித் திரிந்தவர் அல்ல. அவர் உலகத்தைச் சுற்றி வந்தவர். மேலைநாட்டில் கல்வி கற்றவர், தொடர்ந்து உலகின் பல நாடுகளுக்குச் சென்று வந்தவர். அப்படிச் சுற்றித் திரிவதை மிகவும் விரும்பியவர். அவர் இந்த பிரபஞ்சத்தின் குடிமகனாக இருந்தார். என்றாலும் கூட, அவரது வேர்கள் இந்த இந்திய நாட்டில் ஆழமாகப் பதிந்திருந்தது. சூரியனின் குறுக்கே பறந்து செல்கின்ற ஒரு கழுகினைப் போல் அவர் பறந்து சென்றிருக்கலாம். ஆனால், அவர் திரும்பவும் தனது சிறிய கூட்டிற்கு வந்து விடுவார். மேலும், அவர் ஒருபோதும் இந்தியாவின் ஆன்மீகப் பாரம்பரியத்தின் பாதையை தொலைத்தது கிடையாது. என்னதான் அதில் தூசி படிந்திருந்தாலும் கூட, அதைப் பொருட்படுத்தவில்லை. அவர் அதைச் சுத்தம் செய்வதற்கும், அதில் தன்னைக் கண்டு கொள்வதற்கான கண்ணாடி போன்று ஆக்குவதற்கும் திறன் பெற்றிருந்தார்.

கீதாஞ்சலியில் உள்ள அவரது கவிதைகள், இந்த இயற்கைக்கு அவர் காணிக்கையாக்கிய பாடல்கள். அது தான் கீதாஞ்சலி என்கிற வார்த்தையின் அர்த்தம். பாடல்களின் அஞ்சலி. அவர், "காணிக்கையாக்குவதற்கு என்னிடம் வேறு ஒன்றும் இல்லை. நான் வெறும் ஒரு பறவை போன்று ஏழையாகவும் இருக்கலாம் அல்லது ஒரு பறவை போன்று பணக்காரனாகவும் இருக்கலாம். ஒவ்வொரு நாளும் அதிகாலையில் புதிதாகவும், புத்தணர்ச்சியுடனும், நன்றிப் பெருக்கினால் என்னால் பாட முடியும். அது தான் எனது வழிபாடு," என்று அவர் அடிக்கடி கூறுவதுண்டு.

அவர் ஒருபோதும் எந்த ஒரு கோவிலுக்கும் சென்றதில்லை; அவர் ஒரு போதும் பாரம்பரிய முறையில் பிரார்த்தனை செய்ததில்லை. அவர் இந்துவாகப் பிறந்தார், ஆனால், அவரை மனித இனத்தின் ஒரு

பிரிவிற்குள் அடக்கி விடுவது சரியாகாது; அவர் இந்தப் பிரபஞ்சத்திற்குச் சொந்தக்காரர். மற்றவர்கள் அவரிடம் அநேக வேளைகளில், "உங்களது வார்த்தைகள் சமய நெறியின் நறுமணத்தோடு இருக்கின்றன. ஆன்மீகம் அதில் ஒளி வீசுகிறது. ஜடப் பொருளைத்தவிர வேறு எதையும் நம்பாதவர்களும் கூட, அவரது வார்த்தைகளில் உள்ள ஏதோ ஒரு அறிய முடியாத உயிர்த்துடிப்பினால் பாதிக்கப்பட்டார்கள். அது அவர்களின் மனதைத் தொடுகிறது. ஆனால், நீங்களோ ஒரு போதும் கோயிலுக்குச் செல்வதில்லை. நீங்கள் ஒருபோதும் புனித நூல்களைப் படிப்பதில்லை," என்று கேட்டிருக்கிறார்கள்.

அதற்கு அவர் பதில் கூறியது உங்களுக்கு மிகவும் முக்கியமானதாகும். அவர், "நான் ஒருபோதும் புனித நூல்களைப் படிப்பதில்லை. உண்மையில், நான் அவற்றைத் தவிர்த்து விடுகிறேன். ஏனெனில், எல்லாவற்றையும் கடந்து உள்ள அந்த ஒன்றினை நான் சொந்தமாகவே அனுபவத்தில் கண்டு கொண்டுள்ளேன். எனவே, எனது அசல் அனுபவத்தோடு, உண்மையான, தனிப்பட்ட அனுபவத்தோடும் அடுத்தவர்களின் அனுபவத்தோடு ஒன்று கலப்பதை நான் விரும்பவில்லை. எனது இதயத் துடிப்பை அப்படியே நான் கடவுளுக்கு காணிக்கையாக்க விரும்புகிறேன். மற்றவர்களும் அதை அறிந்திருக்கலாம் - மற்றவர்களும் அதை நிச்சயமாக அறிந்துள்ளனர் - ஆனால், அவர்களது அறிதல், எனது அறிதலாக ஆகிவிட முடியாது. எனது சொந்த அனுபவம் மட்டுமே என்னைத் திருப்திப்படுத்த முடியும். எனது தேடுதலை நிறைவு செய்ய முடியும். இந்த இயற்கையின் மீது எனக்கு விசுவாசத்தைக் கொடுக்க முடியும். நான் வெறும் நம்பிக்கையாளனாக இருக்க விரும்பவில்லை," என்று பதில் கூறினார்.

இந்த வார்த்தைகளை நினைவில் கொள்ள வேண்டும் : "நான் ஒரு நம்பிக்கையாளனாக இருக்க விரும்பவில்லை. நான் ஒரு அறிந்து கொள்பவனாக இருக்கவே விரும்புகிறேன். அதே சமயம், நான் அறிவுமிக்கவனாகவும் இருக்க விரும்பவில்லை. இந்த இயற்கையானது, அதன் புதிர்களை எனக்கு வெளிப்படுத்தும் அளவுக்கு நான் வெள்ளை உள்ளத்துடன் இருக்கவே விரும்புகிறேன். மேலும், ஒரு ஞானியாக வழிபடப்படவும் விரும்பவில்லை," என்று கூறுவார். ஆனால், உண்மை என்னவென்றால், இந்த இருபதாம் நூற்றாண்டில் ரவீந்திரநாத் தாகூரைவிட மிகவும் புனிதமானவர்கள் வேறு யாரும் கிடையாது. ஆனால், தன்னை ஒரு புனிதர் என்று சொல்லப்படுவதை அவர் மறுத்தார்.

அவருக்கு ஒரே ஒரு ஆசை மட்டுமே இருந்தது. அதாவது, அவர் தன்னை, 'இந்த அறியாத இருப்பு நிலைக்கு, தனது ஆன்மாவின்

மலர்களையெல்லாம், தனது சக்தியையெல்லாம் காணிக்கையாக்குகின்ற ஒரு கவிஞராகவும், ஒரு நடனமாடுபவராகவும், பாடல் பாடுபவராகவும் ஞாபகத்தில் வைத்திருக்க வேண்டும்,' என்று விரும்பினார். "நான் வழிபடக் கூடியவனாக இருக்க விரும்பவில்லை; அதை நான் ஒரு சங்கடமானதாகவும், அசிங்கமானதாகவும், மனிதாபிமானமற்றதாகவும், இந்த உலகிலிருந்து முற்றிலும் விலக்கப்பட வேண்டியதாகவும் கருதுகிறேன். ஒவ்வொரு மனிதனும் தன்னுள் கடவுளை வைத்திருக்கிறான்; ஒவ்வொரு மேகமும், ஒவ்வொரு மரமும், ஒவ்வொரு கடலும் கடவுள் தன்மையால் முழுமையாக நிறைந்துள்ளது. எனவே, இங்கே யார், யாரை வழிபடுவது?" என்று கூறவார்.

ரவீந்திரநாத் ஒருபோதும் எந்த ஒரு கோவிலுக்கும் சென்றதில்லை. எந்த ஒரு கடவுளையும் வழிபட்டதில்லை. ஒருபோதும் பாரம்பரியமான வழியில் ஒரு துறவி போன்று இருந்ததில்லை. ஆனால், என்னைப் பொருத்தவரையில் இந்த உலகம் அறிந்த மிகப்பெரிய புனிதர்களில் அவரும் ஒருவர். அவரது புனிதத்தன்மை, அவரின் ஒவ்வொரு வார்த்தையிலும் வெளிப்படுத்தப்பட்டது.

வளர்ச்சிக்கான தடைகள் எளிதில் மாற்ற முடியாதவைகளாக உள்ளன. ஆனால், அதை நான் உடைப்பதற்கு முயற்சிக்கும் போது, எனது இதயம் வலிக்கிறது. விடுதலை என்பது தான் நான் விரும்புவதெல்லாம். ஆனால், அதற்காக நம்பிக்கை கொள்வதற்கு நான் வெட்கப்படுகிறேன்.

அவர், இப்படி தன்னைப் பற்றி மட்டும் கூறவில்லை. அவர் முழு மனிதத் தன்னுணர்வும் கூறுவதாகத் தான் கூறுகிறார். இவரைப் போன்ற மனிதர்கள், தங்களைப் பற்றி பேசுவதில்லை. அவர்கள் இந்த மனித இனத்தின் இதயத்தைப் பற்றித் தான் பேசுவார்கள்.

வளர்ச்சிக்கான தடைகள் மாற்ற முடியாதவை ... .... இடையூறுகள் மிகப் பெரிய அளவில் உள்ளன. எனது விடுதலையைத் தடுக்கின்ற அந்த சங்கிலிகள் ... .... அந்தச் சங்கிலிகளோடு நான் அதிகம் பற்று வைத்திருக்கிறேன். அவைகள் இப்போது எனக்கு சங்கிலிகள் போல் தெரியவில்லை; அவைகள் எனக்கு ஆபரணங்கள் ஆகிவிட்டன. அவைகள் தங்கத்தினால் ஆக்கப்பட்டுள்ளன; அவைகள் விலை மதிக்க முடியாதவை. ஆனால், எனது இதயம் வலிக்கிறது. ஏனெனில் ஒரு கரையில், நான் விடுதலை அடைய விரும்புகிறேன். ஆனால் மறுகரையில், விடுதலை அடைவதைத் தடுக்கின்ற அந்தச் சங்கிலிகளை என்னால் உடைத்தெறிய முடியவில்லை. அந்த சங்கிலிகள், அந்தப் பற்றுதல்கள், அந்த உறவுகள் எனது வாழ்க்கையாக ஆகிவிட்டன.

என்னுடைய காதலியில்லாமல், என்னுடைய நண்பர்கள் இல்லாமல், என்னால் என்னைப் பற்றி நினைத்துப் பார்க்க முடியவில்லை. என்னை எனது முழுமையான தனிமையில், ஆழ்ந்த அமைதியில் எண்ணிப் பார்க்க முடியவில்லை. எனது கீதங்களும்கூட எனக்குத் தடைகள் ஆகிவிட்டன. எனவே, நான் அவற்றை உடைக்க முயற்சிக்கும் போது, எனது இதயம் வலிக்கிறது. விடுதலை என்பது தான் நான் விரும்புவதெல்லாம்.

இது, இப்போதுள்ள ஒவ்வொரு மனிதனின் சூழ்நிலை தான். தனது இதயத்தில், வானத்தில் சிறகடித்துப் பறக்கின்ற பறவையைப் போல் இருக்க வேண்டும் என்று விரும்பாத ஒரு மனிதனைக் காண்பதும், தொலைதூரத்தில் உள்ள அந்த நட்சத்திரங்களைச் சென்றடைய வேண்டும் என்று விரும்பாத ஒருவரைக் காண்பதும் மிகவும் கடினம். ஆனால் அதே நேரத்தில், இந்த பூமியோடு அதிக பற்றுதலோடு இருக்கின்ற ஒருவனாகவும் அவன் இருக்கிறான். அவனுடைய வேர்கள் இந்த பூமியில் ஆழமாகப் பதிந்து உள்ளன. இதில் உள்ள பிரிவினை என்னவென்றால், ஒருபுறம் அவன் தனது சிறைவாசத்தோடும் பற்றுக் கொண்டிருக்கிறான். மறுபுறம் அவன் விடுதலை பெறவும் ஆழமாக ஏங்குகிறான். அவனுக்கு எதிராகவே அவனே பிளவுபட்டு இருக்கிறான்.

இது தான் மிகப்பெரிய துக்கம், கவலை. இந்த உலகோடு உங்களை கட்டிப் போட்டுள்ள அந்த சங்கிலிகளை உங்களால் விட்டுவிட முடியாது; உங்களுடைய வாழ்க்கைக்கு இடையூறாக இருக்கின்ற அவைகளை உங்களால் விட்டு விலக முடியாது. ஏனெனில், அவைகள் உங்களது சந்தோஷங்களாகவும், உங்களது பற்றுதல்களாகவும் கூட இருக்கின்றன. உங்களது பெருமைக்கு அவைகள் ஒரு வழியில் ஊட்டமளிப்பதாகவும் உள்ளன. உங்களால் அவைகளை விட்டுவிடவும் முடியாது அல்லது இந்த உலகிற்குச் சொந்தமானவர் அல்ல நீங்கள் என்பதை மறக்கவும் முடியாது. மேலும், உங்களது வீடு வேறு எங்கோ இருந்தாக வேண்டும். ஏனெனில், நீங்கள் உங்களது கனவுகளில் எப்போதும் தொலைதூர இடங்களை நோக்கிப் பறந்து கொண்டே தான் இருக்கிறீர்கள்.

விடுதலை தான் நான் விரும்புவதெல்லாம். ஆனால், அதற்காக நம்பிக்கை கொள்வதற்கு நான் வெட்கப்படுகிறேன். விடுதலை பெறுவதற்கு நம்பிக்கை கொள்ள ஒருவர் ஏன் வெட்கப்பட வேண்டும்? ஏனெனில், உங்களை யாரும் தடுக்கவில்லை. இந்த நொடிப்பொழுதே நீங்கள் விடுதலை அடைய முடியும். ஆனால், அந்தப் பற்றுதல்கள் ... ... அவை உங்களுக்கும் மிக ஆழத்தில் சென்றுவிட்டன; கிட்டத்தட்

அவைகளே உங்களது இருப்பு நிலை போன்று ஆகிவிட்டன. அவைகள் உங்களுக்கு துன்பத்தைக் கொண்டு வரலாம். ஆனால், சில தருணங்களில் அது சந்தோஷத்தையும் கூட கொண்டு வருகிறது. அவைகள் உங்களது கால்களுக்குச் சங்கிலிகளாக இருக்கலாம். ஆனால், அவைகள் கொஞ்ச நேரம் உங்களுக்கு நடனத்தையும் கொடுக்கிறது.

ஒவ்வொரு புத்திசாலி மனிதனும் எதிர்கொள்ள வேண்டியதொரு வித்தியாசமான சூழ்நிலை இது; நாம் இந்த பூமியில் வேர் ஊன்றி இருக்கிறோம். ஆனால், வானத்தில் பறப்பதற்கான சிறகுகளை விரும்புகிறோம். நம்மால் அந்த வேர்களைப் பிடுங்கி எறிய முடியாது. ஏனெனில், அந்த பூமி தான் நமது ஊட்டச் சத்து, நமது உணவு. மேலும், நம்மால் சிறகுகளைப் பற்றி கனவு காணாமலும் இருக்க முடியாது. ஏனெனில், அது தான் நமது ஆன்மா; அது தான் நம்மை மனிதர்களாக்கியுள்ளது.

எந்த ஒரு மிருகமும் துக்கம் கொள்வதில்லை; எல்லா மிருகங்களும் அவைகள் எப்படி உள்ளனவோ, அதிலேயே முழுமையான திருப்தியுடன் இருக்கின்றன. மனிதன் ஒருவன் மட்டுமே தனக்குள்ளாகவே அதிருப்தியுடன் இருக்கின்றதொரு மிருகமாக இருக்கிறான். அதனால் தான் இந்த வெட்க உணர்வு - ஏனெனில், "நான் விடுதலை பெற முடியும்," என்பதை அவன் அறிந்து கொண்டிருக்கிறான்.

நான் மிகவும் பழமை வாய்ந்த இந்தக் கதையை எப்போதும் விரும்புவேன் :

ஒரு மனிதர், ஒரு மாபெரும் மனிதர், சுதந்திரத்திற்காகப் போராடிய அந்த மனிதர் மலைப்பிரதேசத்தில் பயணம் செய்து கொண்டிருந்தார். இரவு அவர் ஒரு சத்திரத்தில் தங்கினார். அந்தச் சத்திரத்தில் ஒரு தங்கக் கூண்டில் அடைக்கப்பட்டிருந்த கிளி ஒன்று இடைவிடாமல், "விடுதலை, விடுதலை," என்று கத்திக் கொண்டிருந்ததைப் பார்த்து அவர் ஆச்சரியமடைந்தார். மேலும், அந்த இடம், அந்தக் கிளியானது விடுதலை என்று கத்தும் போது அதைச் சுற்றியுள்ள மலைகளிலும், பள்ளத்தாக்குகளிலும் எதிரொலிப்பதாக இருந்தது. அந்த 'விடுதலை' என்னும் சத்தமானது மலைகளிலும், பள்ளத்தாக்கிலும் எதிரொலித்துக் கொண்டே இருந்தது.

அதைப் பார்த்து அந்த மனிதர், "நானும் அநேக கிளிகளைப் பார்த்திருக்கிறேன். அனைத்தும் தங்களின் கூண்டுகளில் இருந்து விடுதலை பெற விரும்ப வேண்டும் என்று நான் நினைத்திருக்கிறேன். ஆனால், இந்தக் கிளியைப் போன்று நாள் முழுவதும், காலை முதல் மாலை அது தூங்கப் போகும் வரை 'விடுதலை' என்று கத்துவதிலேயே

தனது பொழுதைக் கழிப்பதை நான் ஒருபோதும் பார்த்ததில்லை," என்று நினைத்தார். அவருக்கு ஒரு யோசனை வந்தது. நடு இரவில் எழுந்து அவர் அந்த கிளிக்கூண்டின் கதவுகளைத் திறந்துவிட்டார். அந்த சத்திரத்தின் சொந்தக்காரர் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார். எனவே, அவர் அந்தக் கிளியிடம், "இப்போது வெளியே போய்விடு," என்று மெல்லிய குரலில் கூறினார்.

ஆனால், அந்தக் கிளியோ அந்தக் கூண்டின் கம்பிகளை பற்றிக் கொண்டு உள்ளேயே இருப்பதைப் பார்த்து ஆச்சரியம் அடைந்தார். அவர் அந்தக் கிளியிடம், "நீ விடுதலையைப் பற்றி மறந்துவிட்டாயா? வெறுமனே வெளியே போ! கதவு திறந்திருக்கிறது. உனது சொந்தக்காரரும் அசந்து தூங்கிக் கொண்டிருக்கிறார்; யாருக்கும் தெரியாது. நீ வெறுமனே வானத்தில் பறந்து செல்; இந்த முழு வானமும் உன்னுடையது தான்," என்று மீண்டும் மீண்டும் கூறினார்.

ஆனால், அந்தக் கிளியோ மிகவும் ஆழமாகவும், மிகவும் பயத்துடனும் அந்தக் கூண்டின் கம்பியைப் பற்றிக் கொண்டு இருந்தது. எனவே, அந்த மனிதன் அதனிடம், "என்ன விஷயம்? நீ என்ன பைத்தியமா?" என்று கேட்டான். அவன் தனது கைகளால் அந்தக் கிளியை வெளியே எடுத்துவிட முயற்சி செய்தான். ஆனால், அந்தக் கிளி அவனது கைகளைக் கொத்த ஆரம்பித்தது. ஆனால் அதே சமயம், அது, "விடுதலை, விடுதலை," என்று கத்திக் கொண்டே இருந்தது. அந்த இரவு நேரத்தில் அது, அந்தப் பள்ளத்தாக்கு முழுவதும் எதிரொலித்து மீண்டும் மீண்டும் எதிரொலித்தது. ஆனால், அந்த மனிதனும் விடவில்லை. அவர் ஒரு விடுதலைப் போராட்ட வீரர். அவர் அந்தக் கிளியை வெளியே இழுத்து, அதை இந்த வானத்தில் தூக்கி வீசினார். அவர் தனது கைகளில் காயம் ஏற்பட்டாலும் கூட, அந்தக் கிளி விடுதலை பெற்றதில் மிகவும் திருப்தியடைந்தார். அந்தக் கிளியானது, அதனால் எந்த அளவுக்கு முடியுமோ, அந்த அளவுக்கு அவரை பலத்துடன் கொத்தியது. ஆனால், அந்த மனிதரோ ஒரு ஆன்மாவை விடுதலை அடைய வைத்ததில் அபரிமிதமான திருப்தி அடைந்தார். அதன் பிறகு அவர் தூங்கச் சென்றுவிட்டார்.

அடுத்த நாள் காலையில் அந்த மனித்ர் விழித்து எழுந்தவுடன், அவர் அந்தக் கிளியானது மீண்டும், "விடுதலை, விடுதலை," என்று கத்துவதைக் கேட்டார். ஒருவேளை, அந்தக் கிளியானது ஒரு மரத்தின் மீதிருந்தோ அல்லது ஒரு பாறையின் மேல் இருந்தோ கத்திக் கொண்டிருக்கும் என்று நினைத்தார். ஆனால், அவர் வெளியே வந்து பார்த்த போது, அந்தக் கிளியானது மீண்டும் அந்தக் கூண்டிற்குள் உட்கார்ந்து கொண்டிருந்தது. கூண்டின் கதவுகள் திறந்தே இருந்தன.

இது தான் இப்போதைய உண்மை நிலை என்பதால், நான் இந்தக் கதையை மிகவும் விரும்பினேன். நீங்கள் விடுதலை அடைய விரும்பலாம். ஆனால், இந்தக் கூண்டு சில நிச்சயமான பாதுகாப்புகளைக் கொண்டுள்ளது. இந்தக் கூண்டிற்குள் இருக்கும்வரை அதற்கு உணவைப் பற்றிய கவலை கிடையாது. எதிரிகளைப் பற்றிய கவலை கிடையாது. இந்த உலகில் எந்த ஒரு விஷயத்தைப் பற்றியும் அது கவலைப்பட வேண்டியதில்லை. அது மிகவும் சௌகரியமாக இருக்கிறது. அது தங்கத்தினால் ஆனது. வேறு எந்தக் கிளிக்கும் இது போன்ற மதிப்புமிக்க கூண்டு கிடையாது.

உங்களது அதிகாரம், உங்களது செல்வம், உங்களது புகழ் - இவைகள் எல்லாம் உங்களது கூண்டுகள். உங்களது ஆன்மா விடுதலை பெற விரும்புகிறது. ஆனால், அந்த விடுதலை ஆபத்து நிறைந்தது. அந்த விடுதலைக்கு காப்பீடு கிடையாது. விடுதலைக்குப் பாதுகாப்பும், அரணும் கிடையாது.

விடுதலை என்றால், கத்தியின் விளிம்பில் நடப்பது போன்றது. ஒவ்வொரு நொடியும் ஆபத்துடன் நீங்கள் போராட்டப் பாதையில் செல்ல வேண்டும். ஒவ்வொரு நொடிப் பொழுதும், நீங்கள் அறியாத ஒன்றிலிருந்து வருகின்ற சவால்களை எதிர்கொள்ள வேண்டும். சில நேரம் மிகவும் வெப்பமாக இருக்கும், மேலும் சில சமயம் அதிக குளிராக இருக்கும். அங்கே உங்களைப் பாதுகாப்பாகப் பார்த்துக் கொள்ள யாரும் இருக்க மாட்டார்கள். ஆனால், அந்தக் கூண்டில் இருக்கும் போது, அதன் சொந்தக்காரர் முழு பொறுப்புடன் இருப்பார். மிகவும் குளிராக இருந்தால், அவர் ஒரு போர்வையைக் கொண்டு அந்தக் கூண்டினை மூடி மறைப்பது வழக்கம். மேலும், வெயில் காலங்களில் அந்தக் கூண்டின் அருகில் ஒரு மின் விசிறியை வைப்பதும் வழக்கம்.

விடுதலை என்றால், அளவுக்கு அதிகமான பொறுப்பு என்று தான் அர்த்தம். நீங்கள் உங்களது சுயத்திலும், தனிமையிலும் இருந்தாக வேண்டும்.

ரவீந்திரநாத் கூறுவது சரிதான். "சுதந்திரம் என்பது தான் நான் விரும்புவதெல்லாம். ஆனால், அதற்காக நம்பிக்கை கொள்வதற்கு நான் வெட்கப்படுகிறேன்," என்கிறார். ஏனெனில், அதில் நம்பிக்கை என்கின்ற கேள்வி இல்லை. அது உயிரைப் பணயம் வைக்கின்றதொரு கேள்வியாகும்.

"இறைவனே, உன்னிடம் விலை மதிப்பற்ற செல்வம் உள்ளது என்பதை நான் நிச்சயம் அறிவேன். ஆனால், எனது அறையை வெளிச்சத்தால் நிரப்புகின்ற அந்த ஜிகினாத்தாளை வெளியே தூக்கி எறிகின்ற இதயம் என்னிடம் இல்லை," என்கிறார்.

விடுதலை என்னும் உலகில், விடுதலை என்னும் அனுபவத்தில் நிச்சயம் உங்களுக்கு அங்கே பெருஞ்செல்வம் உண்டு. ஆனால், இந்த நிச்சயம் என்பதும் கூட உங்களுடைய ஒரு ஏக்கமாகவும், உங்களது ஆசையின் திரையிடலாகவும் தான் இருக்கும். நீங்கள் எப்படி நிச்சயத்துடன் இருக்க முடியும்? நிச்சயம் அங்கு செல்வம் இருக்க வேண்டும் என்று நீங்கள் விரும்ப மட்டுமே செய்யலாம். அங்கே விடுதலைக்கான ஒரு ஏக்கம் இருப்பதை உங்களால் அறிந்து கொள்ள முடியும். அது வெறும், ஒன்றுமற்ற விடுதலைக்காக மட்டும் இருக்காது. அது ஏதோ ஒரு செல்வத்தை, விலை மதிப்பற்ற ஏதோ ஒன்றினைப் பெறுவதற்கானதாகத் தான் இருக்க முடியும். நீங்கள் உங்களுக்குள் தைரியத்தை வரவழைப்பதற்காக, உங்களுக்கு விடுதலைக்குப் பின் நிச்சயமாக ஏதோ ஒன்று கிடைக்கும் என்பதை உருவாக்குகிறீர்கள். அப்போது தான் நீங்கள் இதுவரை அறியாத ஒன்றினுள் குதிக்க முடியும்

... ... மேலும், 'நீ தான் எனது உற்ற நண்பன்,' என்கிறார். ஆனால், இவைகள் எல்லாம் அழகான கனவுகள், இவைகள் எல்லாம் நம்பிக்கைகள் தான்; இந்த நிச்சயமான நிலை தான் உங்களது சொந்தக் கூண்டு. இது தான் அதன் பாதுகாப்பு. ஆனால், எனது அறையை நிரப்புகின்ற வெளிச்சத்திற்கு காரணமான அந்த ஜிகினாத்தாளினை வெளியே தூக்கி எறிகின்ற இதயம் என்னிடம் இல்லை என்கிறார். இவைகள் எல்லாம் மனதில் உள்ள அழகான எண்ணங்கள் தான்.

எனது உடலைச் சுற்றியுள்ள துணியானது, தூசு மற்றும் மரணத்தினால் ஆனது. நான் இதை வெறுக்கிறேன். எனினும், நான் அதை அன்பினால் ஆரத் தழுவுகிறேன் என்கிறார்.

உங்களது உடல் இறக்கப் போகிறது என்பதை நீங்கள் அறிவீர்கள். உண்மையில், உங்களது உடல் உயிரற்ற பொருட்களினால் தான் ஆக்கப்பட்டுள்ளது. அது, ஏற்கனவே உயிரற்று விட்டது. அது உயிரோடு இருப்பது போல் தெரிகிறது. ஏனெனில், உயிர்த் துடிப்புள்ள ஏதோ ஒன்று அதனுள் இருக்கிறது. அது தான் கதகதப்பையும், உயிரோட்டத்தையும் பரப்புகிறது; உங்களுக்குள் உள்ள ஒரு விருந்தாளியால் தான் அது நடக்கிறது. அந்த விருந்தாளி பறந்து செல்கின்ற அந்த நொடிப் பொழுதே, இந்த உடலின் உண்மை நிலையானது உங்களுக்கு வெளிப்படுத்தப்பட்டு விடும்.

நமது உடலானது தூசு மற்றும் மரணத்தால் ஆனது என்று ரவீந்திரநாத் கூறுகிறார். நான் அதை வெறுக்கிறேன் என்றும், நான் அதை அன்பினால் ஆரத் தழுவுகிறேன் என்றும் கூறுகிறார். நீங்கள் ஒரு பெண்ணிடம் காதல் வயப்படும் போது, அங்கே இரண்டு எலும்புக் கூடுகள் தான் ஆரத் தழுவுகின்றன; அந்த எலும்புக் கூட்டினை இந்தத்

தோல் மூடியுள்ளது என்பதை அவர்கள் இருவரும் அறிவார்கள். எனவே, நீங்கள் ஒருவரையொருவர் உண்மையான நிர்வாணத்துடன், அதாவது உடைகள் மட்டுமல்லாமல், இந்த தோலும் கூட இல்லாமல் பார்த்தால், அதன் பிறகு நீங்கள் அதிர்ச்சி அடைவீர்கள். அதன் பின்னர் நீங்கள் யாரிடம் காலாகாலத்திற்கும் உன்னோடு தான் வாழ்வேன் என்று வாக்குறுதி அளித்தீர்களோ, அந்தக் காதலியிடமிருந்து எவ்வளவு விரைவாக தப்பித்து ஓட முடியுமோ, அவ்வளவு விரைவாக ஓடுவீர்கள். ஏனெனில், தோல் தான் உங்களது உண்மையான ஆடை. நீங்கள் திரும்பிக்கூட பார்க்க மாட்டீர்கள்; அந்த விஷயத்தைப் பற்றி நினைக்கவே நீங்கள் விரும்பவே மாட்டீர்கள்.

இந்தியாவில், ஷாஜஹான் என்கிற பேரரசரின் அரச சபையில் நடந்தது இது. அவர் ஒரு பெண்ணை விரும்பினார். ஆனால், அந்தப் பெண்ணோ அவரைத் திருமணம் செய்து கொள்ள விரும்பவில்லை.

அவர் ஒரு பெருந்தன்மைக்காரர்; இல்லையென்றால், அவர் அவளை நிர்பந்தித்திருப்பார். அவர் அவளைச் சம்மதிக்க வைக்க முயன்றார். ஆனால், அவளோ அவரது மெய்க்காவலர் ஒருவரோடு காதல் வசப்பட்டு இருந்தாள். இதைக் கண்டு கொண்டபின் அவர் உண்மையிலேயே கோபமடைந்தார். அவர்கள் இருவரும் உடனடியாக பிடிக்கப்பட்டு, அரச சபைக்கு கொண்டு வரப்பட்டனர்.

ஷாஜஹான் அங்கேயே, அப்போதே அவர்களின்தலையைத் துண்டிக்கப் போனார். ஆனால், அவரது பிரதான மந்திரி, அவர் மிகவும் வயதானவர், மேலும், அவர் தான் அவரது தந்தைக்கும் பிரதான மந்திரியாக இருந்தார். எனவே, ஷாஜஹான் அவரைத் தனது தந்தையைப் போன்று மதித்தார். அந்தப் பிரதான மந்திரி, பேரரசரிடம், "அப்படிச் செய்யாதீர்கள். கொஞ்சம் புத்திசாலித்தனத்துடன் செயல்படுங்கள். அது அவர்களுக்கு சரியான தண்டனையாக அமையாது. நான் அவர்களுக்குச் சரியான தண்டனை கொடுக்கிறேன்," என்றார். அவர்கள் இருவரையும் நிர்வாணமாக்கி, அவர்கள் இருவரும் கட்டிப் பிடித்துக் கொண்டிருக்கும்படி அவர்களை ஒன்றாகச் சேர்த்துக் கட்டி, அதன பின்னர் அந்த அரச சபையில் உள்ள ஒரு தூணில் கட்டும்படி அவர் ஆணையிட்டார். அங்கிருந்த மற்றவர்களால் இதை நம்ப முடியவில்லை. "இது என்ன தண்டனை?" என்றனர். 'இது அவர்களுக்கு ஒரு பரிசு போல் அல்லவா தெரிகிறது. இதைத் தானே அவர்கள் எப்போதும் விரும்பினார்கள், ஒருவரையொருவர் கட்டித் தழுவ வேண்டும் என்று தானே அவர்கள் விரும்பினார்கள்,' என்று மற்றவர்கள் நினைத்தார்கள். ஆனால், அவர்கள் நினைத்தது தவறாகிவிட்டது.

அந்த வயதான பிரதம மந்திரிக்கு, உண்மையிலேயே மிகப்பெரிய மனோதத்துவ உண்மை தெரிந்திருந்தது. அந்த இரண்டு காதலர்களும்கூட, "இது என்ன தண்டனை? இது ஒரு வெகுமதி அல்லவா!" என்று நினைத்தார்கள். அவர்கள் மிகுந்த அன்புடன் ஒருவரையொருவர் கட்டிப் பிடித்தனர்.

அவர்கள் ஒருவரை விட்டு மற்றொருவர் தப்பி விடாதபடி ஒரு கயிற்றினால் கட்டப்பட்டார்கள். அதன் பிறகு, ஒரு தூணில் கட்டப்பட்டனர். நீங்கள் எவ்வளவு நேரம் தான் ஒருவரைக் கட்டிப் பிடிக்க முடியும்? ஐந்து நிமிடம், ஏழு நிமிடம், அரைமணி நேரம்...? எனவே, இருபத்தி நான்கு மணி நேரத்திற்குப் பிறகு அவர்கள் ஒருவரையொருவர் வெறுத்தனர். அவர்கள் வெறுப்படைந்து தான் தீர வேண்டும், வேறு வழி இல்லை. அவர்களுக்கு வியர்த்தது. அவர்களின் உடல் நாற்றம் அந்த அரண்மனையை நிரப்பியது. அவர்களது கழிவுகள் ... ... மேலும், அவர்கள் தப்பிச் செல்லவும் வழி இல்லை. இருபத்தி நான்கு மணி நேரத்திற்குப் பிறகு அந்த வயதான பிரதம மந்திரி, "இப்போது அவர்களுக்கு அவர்களது ஆடைகளைக் கொடுத்து, அவர்களை விடுதலை செய்யுங்கள்," என்றார்.

அவர்கள் இருவரும் தங்களின் ஆடைகளைப் பெற்றவுடன், எதிர் எதிர் திசையில் ஓடிச் சென்றனர். அதன் பிறகு ஒருபோதும் அவர்கள் சந்திக்கவில்லை. அவர்கள் போதுமான அளவு சந்தித்து விட்டனர்!

உனது உடலைச் சுற்றியுள்ள துணியானது தூசியினாலும், மரணத்தினாலும் ஆனது. நான் அதை வெறுக்கிறேன். ஆனாலும் கூட, அதை நான் அன்புடன் ஆரத் தழுவுகிறேன் என்கிறார்.

இது தான் மனிதனின் மனச் சிதைவு; மனிதனின் பிளவுபட்ட மனப் பண்பு. அவனுடைய வீடு அதற்கு எதிராகவே பிரிக்கப்பட்டு உள்ளது. எனவே, அவனால் அமைதி காண முடியாது.

"எனது கடன்கள் அதிகமாக உள்ளன, எனது தோல்விகள் மிகப் பெரியவை; எனது கேவலங்கள் ரகசியமும், கனமுமானவை, என்றாலும்கூட, எனது நலனுக்காக கேட்க வரும் போது, எனது பிரார்த்தனையானது பலித்துவிடுமோ என்கிற பயத்தில் நான் அதிர்ந்து போகிறேன்," என்கிறார்.

இந்த வரிகளை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டுமென்றால், ரவீந்திரநாத்தின் இந்த கீதாஞ்சலியில் உள்ள மற்றொரு கவிதையை நான் உங்களுக்கு நினைவுபடுத்த வேண்டும்.

அந்தக் கவிதையில் அவர், "எனக்கு நினைவு தெரிந்ததிலிருந்து நான் கடவுளைக் தேடிக் கொண்டே இருக்கிறேன். அநேக அநேக

பிறவிகளாக, இந்தப் பிரபஞ்சத்தின் ஆரம்பத்திலிருந்தே தேடிக் கொண்டிருக்கிறேன். எப்போதாவது ஒருமுறை, தொலைதூரத்தில் தெரிகின்ற அந்த நட்சத்திரத்தின் அருகில் அவரைப் பார்த்திருக்கிறேன். ஆனால், அந்த தூரம் நம்மால் அடைய முடியாதபடி மிகப் பெரியதாக இருந்தாலும் கூட, நான் சந்தோஷத்துடன் நடனமாடி இருக்கிறேன். மேலும், நான் பயணம் செய்து அந்த நட்சத்திரத்தை அடைந்திருக்கிறேன். ஆனால், நான் அந்த நட்சத்திரத்தை அடைவதற்குள், கடவுள் வேறு ஒரு நட்சத்திரத்திற்கு நகர்ந்து சென்றுவிடுகிறார். பல நூற்றாண்டுகளாக இப்படி நடந்து கொண்டே போகிறது.

"இந்த சவாலானது மிகவும் பெரியதாக இருப்பதால், நானும் நம்பிக்கையில்லாமல் நம்பிக் கெண்டே போகிறேன் ... .... நான் அவரை கண்டுபிடித்தாக வேண்டும். நான் எனது தேடுதலில் முழுவதும் மூழ்கிவிட்டேன். இந்த தேடுதலானது, மிகவும் புதிரானதாகவும், மிகவும் களிப்பூட்டுவதாகவும், மிகவும் ரகசியமானதொரு சதி போன்றும் உள்ளதால், கடவுள் என்பவர் கிட்டத்தட்ட ஒரு சாக்கு போக்கு போல் ஆகிவிட்டார். இந்த தேடுதல் என்பது மட்டுமே அதனளவில் ஒரு லட்சியமாக ஆகிவிட்டது.

மேலும், நான் ஆச்சரியப்படும் படி, ஒருநாள் நான் தொலைதூரத்தில் உள்ள நட்சத்திரத்தில் உள்ள ஒரு வீட்டினைச் சென்றடைந்தேன். அந்த வீட்டின் முன்னால், "இது தான் கடவுளின் வீடு," என்ற வாசகத்துடன் கூடிய ஒரு சிறிய அறிவிப்புப் பலகை இருந்தது. எனது சந்தோஷத்திற்கு அளவே இல்லை. எனவே, இறுதியாக நான் வந்து சேர்ந்துவிட்டேன்! நான் அந்த வீட்டில் உள்ள அநேக படிகளில் தாவிக் குதித்துச் சென்றேன். ஆனால், அந்த வீட்டின் கதவுகளை நெருங்கி வர, வர எனது இதயத்திற்குள் ஒருவித பயம் திடீரென்று தோன்றியது. நான் அந்தக் கதவைத் தட்டச் செல்லும் போது, பயத்தினால் நான் செயலிழந்தேன். நான் இதுவரை அறிந்திராத, இதுவரை எண்ணிப் பார்க்காத, கனவிலும்கூட காணாத பயத்தினால் செயலிழந்தேன். அந்த பயம் என்னவென்றால், இந்த வீடு நிச்சயமாக கடவுளின் வீடாக இருந்துவிட்டால், அதன் பின்னர் நான் கடவுளைக் கண்டு கொண்ட பின்னர், நான் என்ன செய்வேன்? என்பது தான்.

இப்போதோ, கடவுளைத் தேடிச் செல்வது தான் எனது வாழ்க்கையாக உள்ளது. எனவே, அவரை நான் கண்டு கொள்வது என்பது தற்கொலை செய்து கொள்வதற்கு சமமாகும். மேலும், அவரை வைத்துக் கொண்டு நான் என்ன செய்யப் போகிறேன்? இந்த விஷயங்களை எல்லாம் நான் ஒருபோதும் முன்பு நினைத்ததில்லையே.

எனது விடுதலையை ஆரம்பிப்பதற்கு முன்பு, "கடவுளை வைத்துக் கொண்டு நான் என்ன செய்யப் போகிறேன்?" என்று சிந்தித்திருக்க வேண்டுமல்லவா.

நான் எனது காலணிகளைக் கையில் எடுத்துக் கொண்டேன். அதன் பின்னர் மெதுவாகவும், அமைதியாகவும், பயத்துடன் பின்னோக்கி வந்தேன். ஏனெனில், கடவுள் எனது சத்தத்தைக் கேட்டு கதவுகளைத் திறந்து கொண்டு வெளியே வந்து, "நீ எங்கே போகிறாய்? நான் இங்கு தான் இருக்கிறேன். உள்ளே வா!" என்று கூறலாம். மேலும், நான் படிகளைத் தாண்டி வந்தவுடன், இதற்கு முன்பு அதுபோன்று ஓடாத அளவுக்கு, எவ்வளவு வேகமாக ஓட முடியுமோ அவ்வளவு வேகமாக ஓடிவந்து விட்டேன். மேலும், அன்றிலிருந்து நான் மீண்டும் கடவுளைத் தேடிக் கொண்டிருக்கிறேன். ஒவ்வொரு திசையிலும் அவருக்காகப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஆனால், அவர் வசிக்கின்ற அந்த வீட்டை மட்டும் தவிர்த்துவிடுகிறேன். அந்த வீடு தவிர்த்துவிட வேண்டியது என்று இப்போது நான் தெரிந்து கொண்டேன். மேலும், நான் என்னுடைய தேடுதலை தொடர்கிறேன். அந்த பயணத்தை, அந்த தீர்த்த யாத்திரையை நான் சந்தோஷமாக அனுபவிக்கிறேன்," என்று ரவீந்திரநாத் கூறுகிறார்.

இந்தக் கதையில் உள்ள உண்மை மிகவும் அபரிமிதமானது. உண்மை என்பதைக் கண்டு கொண்டால், அதை வைத்துக் கொண்டு நான் என்ன செய்வேன் என்று ஒருபோதும் நினைத்துப் பார்க்காத தேடுதலாளர்கள் இங்கே இருக்கின்றனர். நீங்கள் அதை சாப்பிட முடியாது. நீங்கள் அதை விற்க முடியாது. நீங்கள் உண்மையைப் பெற்றுவிட்டால், நீங்கள் ஒரு குடியரசுத் தலைவராக ஆகிவிட முடியாது. மிஞ்சி மிஞ்சிப் போனால், உங்களிடம் உண்மையிருந்தால் மக்கள் உங்களை சிலுவையில் அறைவார்கள்.

எனது கடன்கள் அதிகமாக உள்ளன. எனது தோல்விகள் மிகப் பெரியவை. எனது கேவலங்கள் ரகசியமானதும், கனமுமானவை. என்றாலும் கூட, எனது நலனுக்காக கேட்க வரும் போது, எனது பிரார்த்தனையானது பலித்துவிடுமோ என்கிற பயத்தில் அதிர்ந்து போகிறேன் - என்கிறார். ஏனெனில் கடவுள், உண்மை, நல்லது, அழகு ஆகிய இந்த விஷயங்களைப் பற்றி பேசுவதற்கு நன்றாக இருக்கும். அவைகளைப் பற்றி ஆய்வுக் கட்டுரை எழுதுவதற்கும், அதைக் குறித்து முனைவர் பட்டம் வழங்குவதற்கு பல்கலைக் கழகங்கள் முன் வருவதற்கும், நோபல் குழு உங்களுக்குப் பரிசு அளிப்பது என்பதும் கேட்பதற்கு நன்றாக இருக்கும். இந்த விஷயங்களைப் பற்றி எழுதுவதும், பேசுவதும் நல்லது. ஆனால், நீங்கள் உண்மையில்

அவைகளை அனுபவித்துப் பார்க்க ஆரம்பித்தால், அதன் பின்னர் நீங்கள் சங்கடத்தில் மாட்டிக் கொள்வீர்கள். அதைத் தான் ரவீந்திரநாத், "எங்கே எனது பிரார்த்தனைகள் பலித்துவிடுமோ என்று பயப்படுகிறேன்," என்கிறார்.

கடவுள் செவிடராய் இருப்பது நல்லது தான். அவர், பிரார்த்தனைகளை கேட்பதில்லை. இல்லையென்றால், நீங்கள் சங்கடத்தில் மாட்டிக் கொள்வீர்கள். உங்களது பிரார்த்தனையே உங்களுக்குச் சங்கடத்தை உருவாக்கிவிடும். ஏனெனில், பிரார்த்தனையில் நீங்கள் மிகவும் காதல் ரசம் மிக்கவராகவும், உங்களால் வாழ்ந்து பார்க்க முடியாத மிகப்பெரிய விஷயங்களைக் கேட்டுக் கொண்டும் இருப்பீர்கள். மேலும், அதனால் நீங்கள் அதிக கனம் மிக்கவர்களாக ஆகிவிடுவதால், இப்போது துன்பத்தில் கூட அமைதியாக ஓடிக் கொண்டிருக்கிற இந்த வாழ்க்கையில் நீங்கள் குறுக்கிட ஆரம்பித்துவிடுவீர்கள்.

உண்மை ஒரு சிலுவை ஆகிவிடும். வாழ்க்கை சுமையானதாக ஆகிவிடும். உண்மையானது, சாக்ரட்டீஸுக்கு விஷமாக ஆனது. உண்மையானது அல்-ஹிலாஜ் மன்சூருக்கு மரணமாக ஆகியது. இயேசு கிறிஸ்துவிற்கு உண்மையானது சிலுவையில் அறையும் படியாகியது. ஆனால், நீங்களோ, "கடவுளே, எனக்கு சத்யத்தைக் கொடுங்கள். எனக்கு தெய்வீகமானதும், இறைமயமானதுமான குணங்களைக் கொடுங்கள்," என்று பிரார்த்தனை செய்கிறீர்கள். ஆனால், கடவுளோ ஏதோ ஒரு காரணத்திற்காகத் தான் அப்படி செவிடாக இருக்கிறார். அப்போது தான் உங்களது பிரார்த்த்னையும் கேட்கப்படாது. மேலும், நீங்கள் உங்களது துன்பமயமான வாழ்க்கை, உங்களது அழகான பிரார்த்தனை ஆகிய இரண்டையும் அனுபவிக்க முடியும்.. உங்களது பிரார்த்தனைகள் கேட்கப்படாது. எனவே, நீங்கள் பொறாமை, கோபம், முழு வெறுப்பு, முழு ஆணவம் இவற்றோடு இருந்து கொண்டு, அதே சமயத்தில் கடவுளிடம், "என்னை பணிவானவனாக ஆக்கு. மேலும், பணிவாக இருப்பவர்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர். எனவே, என்னைப் பணிவானவனாக ஆக்கு," என்று ஏதோ ஒரு காரணத்திற்காகப் பிரார்த்தனை செய்து கொண்டே போக முடியும்.

புனித நூல்களில் இது எழுதப்படவில்லை. ஆனால், நான் எனது தனிப்பட்ட உறுதியில் இப்படிக் கூறுகிறேன். அதாவது, கடவுள் ஆறு நாட்களில் இந்த உலகத்தைப் படைத்துவிட்டு, அவர் கடைசியாகச் செய்த விஷயம், அவர் தனது காதுகளை அழித்துக் கொண்டது தான். அதிலிருந்து அவருக்கும் எதுவும் கேட்கவில்லை. மேலும், அதிலிருந்து நாமும் கூட அவரைப் பற்றி எதுவும் கேள்விப்படவில்லை.

எனவே, நீங்கள் காலை வேளையில் கோவிலுக்கோ, தேவாலயத்திற்கோ, மசூதிக்கோ போய், ஒரு அழகான பிரார்த்தனையாக, மிகப் பெரிய விஷயங்களை கேட்டுக் கொண்டு, அதே சமயம் நீங்கள் அசிங்கமான ஆன்மாவாக, துன்பப்படுகின்ற ஆன்மாவாக இருந்து கொண்டே போவது முற்றிலும் நல்லது. அதன் பிறகு, நாளைய தினமும் காலையிலும் மீண்டும் ஒரு நல்ல பிரார்த்தனை செய்து கொள்ளுங்கள். இது மிகவும் நல்ல ஏற்பாடு.

ரவீந்திரநாத் தனது கவிதைகளில் மிக ஆழமான உண்மைகளைக் குறிப்பிட்டுக் காட்டுகிறார். உண்மையிலேயே நீங்கள் கடவுளை விரும்புகிறீர்களா? உண்மையிலேயே நீங்கள் சத்யத்தை விரும்பு கிறீர்களா? உண்மையிலேயே நீங்கள் அமைதியை விரும்புகிறீர்களா? அப்படிக் கேட்கும் போது, நீங்கள் நேர்மையானவராக இருந்தால், நீங்கள் வெட்கப்படுவீர்கள். உண்மையிலேயே, இப்படிப்பட்ட விஷயங்களை நீங்கள் விரும்பவில்லை என்பதை ஏற்றுக் கொள்வீர்கள். நீங்கள் தியானம் செய்வது போல் பாசாங்கு மட்டுமே செய்கிறீர்கள். ஏனெனில், அநேக ஆண்டுகளாக நீங்கள் தியானம் செய்தும் எதுவும் நடக்கவில்லை என்பதை நீங்கள் அறிந்து கொண்டிருக்கிறீர்கள். உங்களிடம் பயம் இல்லை; நீங்கள் தியானம் செய்யலாம், எதுவும் நடக்காது.

எப்போதாவது ஏதாவது நடந்துவிட்டால், அதன்பிறகு அங்கே சங்கடம் வந்துவிடும். உங்களது வாழ்க்கையில் மட்டும் ஏதோ ஒன்று வளர்ந்து, உங்களைச் சுற்றி இருப்பவர்களின் இதயத்தில் அது வளராமல் இருக்குமானால், நீங்கள் ஒரு அந்நியன் ஆகிவிடுவீர்கள். நீங்கள் ஒரு வெளி ஆள் ஆகிவிடுவீர்கள். மேலும், அந்தக் கூட்டம் ஒருபோதும் அந்நியர்களை மன்னிக்காது. அந்தக் கூட்டம் ஒரு போதும் வெளி ஆட்களை மன்னிக்காது; அது அவர்களை அழித்துவிடும். தனது சொந்த மன அமைதிக்காக அந்தக் கூட்டம் அவர்களை அழித்துத்தான் தீர வேண்டும்.

இயேசு கிறிஸ்துவைப் போன்ற மனிதர்கள் உங்களுக்கு ஒரு தொடர் தொந்தரவாகத் தான் இருப்பார். ஏனெனில், நீங்களும் அந்த அழகுடனும், அதே கருணையுடனும், அதே சத்யத்துடனும் இருக்க முடியும் என்பதை உங்களுக்கு அவர் ஞாபகப்படுத்துவார். அது உங்களைக் காயப்படுத்தும். அது உங்களை தாழ்வானவராக உணர வைத்துவிடும். மேலும், ஒருவரும் தாம் தாழ்வானவராக உணர விரும்புவதில்லை.

மேலும், தாழ்வு மனப்பான்மை இல்லாமல் இருப்பதற்கு இரண்டே இரண்டு வழிகள் தான் உள்ளன. ஒன்று, நீங்களும் உயர்ந்தவர் ஆகிவிடுவது; அது மிகவும் கடினமான பாதை, ஒரு நெடிய பாதை, ஆபத்தானது. ஏனெனில், நீங்கள் அதில் தனியாகத் தான் நடந்து செல்ல வேண்டும். எனவே, அடுத்ததாக எளிய வழி என்னவென்றால், உங்களைவிட உயர்ந்தவராக இருக்கின்ற அந்த மனிதரை அழித்துவிடுவது. அதன் பிறகு, இந்தக் கூட்டத்தில் அனைவரும் சரிசமமான மக்களாகத் தான் இருப்பார்கள். யாரும் உயர்ந்தவர் இல்லை, யாரும் தாழ்ந்தவர் இல்லை. எல்லோருமே சூழ்ச்சிக்காரர்கள், எல்லோருமே ஏமாற்றுபவர்கள், எல்லோருமே அவரவருக்குச் சொந்தமான வழியில் குற்றவாளிகளாக இருப்பார்கள். அவர்கள் அனைவரும் ஒரே படகில் இருப்பார்கள். மேலும், அவர்கள் ஒவ்வொருவரும் மற்றவர்களின் மொழியைப் புரிந்து கொள்வார்கள். யாரும் சத்தியத்தைப் பற்றியும், கடவுளைப் பற்றியும், தியானத்தைப் பற்றியும் எந்தவிதமான பிரச்சனையையும் உருவாக்க மாட்டார்கள்.

ஒரு கௌதம புத்தர் இல்லாமலேயே, ஒரு சாக்ரடீஸ் இல்லாமலேயே, ஒரு ஜாதுஷ்ட்ரர் இல்லாமலேயே மக்கள் சந்தோஷமாகத் தான் இருக்கிறார்கள். ஏனெனில், இப்படிப்பட்ட மக்கள் மலைகளில் உள்ள சிகரம் போன்றவர்கள். மேலும், அவர்களோடு ஒப்பிடும் போது நீங்கள் சிறியவராக, ஒரு குள்ளரைப் போன்று தெரிவதால், அது உங்களைக் காயப்படுத்தும்.

எனவே, சுலபமானதொரு வழி என்னவென்றால், இந்த மலையின் சிகரங்களையெல்லாம் மறந்துவிட்டு, "இந்த மலைகள் எல்லாம் புராணக் கதைகள், கற்பனையானவை; உண்மை என்பது ஒரு பாலைவனம்," என்று கூறிவிடலாம். எனவே, நீங்கள் உங்களது பாலைவனத்தை, உங்களது ஆணவத்தை சந்தோஷமாக அனுபவிக்கலாம். மேலும் நீங்கள், "கடவுளே, தயவுசெய்து இந்த ஆணவத்திலிருந்து என்னை விடுதலை செய். என்னைப் பணிவானவனாக ஆக்கு," என்று பிரார்த்தனையும் செய்யலாம். நீங்கள் கூறுவதை அவர் கேட்க மாட்டார் என்பது தெரிந்தே, உங்களது பிரார்த்தனை பலிக்காது என்று தெரிந்தே நீங்கள் பிரார்த்தனை செய்யலாம். அப்போது நீங்கள் எதற்காக வேண்டுமானாலும் பயம் இல்லாமல் பிரார்த்திக்கலாம். ஏனெனில், நீங்கள் எப்போதும் இப்போது போல் அப்படியே இருப்பீர்கள். மேலும், உங்களுக்கும் மிகப்பெரிய விஷயங்களுக்காக பிரார்த்தனை செய்த் திருப்தியும் இருக்கும்.

அதனால் தான், சமயநெறிகள் இல்லாமலேயே மக்கள் கிறிஸ்தவர்களாக ஆகிவிடுகின்றனர், இந்துக்களாக ஆகிவிடுகின்றனர், முகமதியர்களாக ஆகிவிடுகின்றனர். அவர்கள் சமயநெறி மிக்க மக்கள் அல்ல. இவைகள் எல்லாம் சமய நெறியுடன் இருப்பதைத் தவிர்க்கின்ற தந்தரமான வழிகள். ஒரு சமய நெறியாளன், வெறுமனே சமய நெறியோடு இருப்பார். அவர் ஒரு இந்துவாகவோ அல்லது முகமதியனாகவோ அல்லது கிறிஸ்தவனாகவோ அல்லது ஒரு பௌத்தனாகவோ இருக்க மாட்டார் - அதற்கான அவசியமும் கிடையாது. அவர் உண்மையானவராக இருப்பார், அவர் நேர்மையானவராக இருப்பார், அவர் கருணையோடு இருப்பார், அவர் அன்பானவராக இருப்பார், அவர் மனிதனாக இருப்பார். இந்த உலகில் தெய்வத்தினை பிரதிநிதிததுவம் செய்பவராக, அதிக மனிதத் தன்மையுடன் இருப்பார்.

# விடுதலைக்கான வழிகள்

எவனொருவன் இந்த சமுதயாத்திற்கு எதிராகச் செயல்படாமலும், எவனொருவன் இந்த சமுதாயத்தின் முழு விளையாட்டையும் புரிந்து கொண்டு அதிலிருந்து வெறுமனே வெளியேறி விடுகிறானோ, அவன் எழுச்சியாளன். சமுதாயம் அவனுக்கு சம்பந்தமில்லாததாக ஆகிவிடும். அவன் அதற்கு எதிராக இருக்க மாட்டான். மேலும், அதுதான் எழுச்சியாளனின் அழகாகும்; அதுதான் விடுதலை. புரட்சி செய்பவன் சுதந்திரமாக இருப்பதில்லை. அவன் தொடர்ந்து ஏதாவது ஒன்றுடன் போராடிக் கொண்டே இருப்பான் - அப்படி இருக்கும் போது, அவனால் எப்படி சுதந்திரமாக இருக்க முடியும்? அவன் ஏதாவது ஒன்றுக்கு எதிராக எதிர்ச் செயலாற்றிக் கொண்டே இருப்பான். அப்படி இருக்கும் போது, அந்த எதிர் செயலில் எப்படி சுதந்திரம் இருக்க முடியும்?

> பரிணாம வளர்ச்சி என்பது மனிதனின் இயற்கையினுள் உள்ளுறைந்து இருப்பது. பரிணாம வளர்ச்சி அவனது ஆன்மாவே. மேலும், யாரெல்லாம் தாங்கள் இப்போது இருப்பதே போதுமானது என்று எண்ணுகிறார்களோ, அவர்கள் எல்லாம் முழுமை பெறாமலே அப்படியே இருக்கின்றனர்; யாரெல்லாம் தாங்கள் முழுமையாகப் பிறந்து இருக்கிறோம் என்று நினைக்கிறார்களோ, அவர்கள் பரிணாம வளர்ச்சி இல்லாமல் இருக்கின்றனர்.

விடுதலை என்பதற்கு புரிந்து கொள்ளுதல் என்று அர்த்தம். ஒருவன் இந்த விளையாட்டைப் புரிந்து கொள்ள வேண்டும். மேலும், தனது ஆன்மா இப்படிப்பட்டதொரு வழியில் தான் வளர்ச்சியடையாமல் தடுக்கப்படுகிறது என்பதையும், அவன் அவனாகவே இருப்பதற்கு அனுமதிக்காமல் இருப்பதையும், கண்டு கொண்ட பின்னர் அவன் வெறுமனே இதிலிருந்து தனது ஆன்மாவில் எந்த ஒரு வடுவும் இல்லாமல் வெளியேறிவிடுகிறான். ஒருவன், மறப்போம் மன்னிப்போம் என்று எண்ணிக் கொண்டு அன்பின் பெயராலும், வெறுப்பின் பெயராலும் இந்த சமுதாயத்தோடும் பற்றில்லாமல் இருக்கிறான். ஒரு கிளர்ச்சியாளனுக்கு, சமுதாயம் என்பது

வெறுமனே மறைந்து போய்விடுகிறது. அவன் இந்த உலகில் வாழலாம் அல்லது இந்த உலகை விட்டு வெளியேறிவிடலாம். ஆனால், அவன் இனிமேல் இதற்கு சொந்தமானவனாக இருக்க மாட்டான்; அவன் ஒரு வெளி ஆளாகத்தான் இருப்பான்.

## ஒட்டகம், சிங்கம், குழந்தை

மனிதன் முழுமையானவனாகப் பிறக்கவில்லை. அவன் முழுமை அடையாமல் பிறந்திருக்கிறான். அவன் ஒரு செயல்முறை போன்று பிறந்துவிட்டான். ஒரு தீர்த்த யாத்திரை செய்பவனைப் போல், வழியிலேயே பிறந்திருக்கிறான். அது தான் அவனது துக்கமாகவும், அவனது சந்தோஷமாகவும் கூட இருக்கிறது. தூக்கமானதாக இருக்கிறது. ஏனெனில், அவனால் ஓய்வெடுக்க முடியாது. அவன் முன்னேறிப் போய்க் கொண்டே இருக்க வேண்டும். அவன் எப்போதும் முன்னோக்கிப் போய்க் கொண்டே இருக்க வேண்டும். அவன் தேடிக் கண்டுபிடித்துச் செல்ல வேண்டும்; அவன் வேறு ஒன்றாக ஆக வேண்டும். ஏனெனில், அவன் வேறு ஒன்றாக ஆகும் போது தான், அவனது ஆன்மா எழுச்சி பெறும். வேறு ஒன்றாக ஆவது தான் அவனது இழப்பாகும். அவன் நகர்ந்து கொண்டேயிருந்தால் மட்டுமே, அவனால் இருக்க முடியும்.

பரிணாம வளர்ச்சி என்பது மனிதனின் இயற்கையினுள் உள்ளுறைந்து இருப்பது, பரிணாம வளர்ச்சி அவனது முக்கிய ஆன்மா. மேலும், யாரெல்லாம் தாங்கள் இப்போது இருப்பதே போதுமானது என்று எண்ணுகிறார்களோ, அவர்கள் எல்லாம் முழுமை பெறாமலே அப்படியே இருக்கின்றனர்; யாரெல்லாம் தாங்கள் முழுமையாகப் பிறந்து இருக்கிறோம் என்று நினைக்கிறார்களோ, அவர்கள் பரிணாம வளர்ச்சி இல்லாமல் இருக்கின்றனர். அதன்பிறகு விதை, விதையாகவே இருக்கும். அது ஒருபோதும் ஒரு மரமாக ஆகாது. மேலும், அது வசந்தத்தின் சந்தோஷத்தையும், சூரிய ஒளியையும், மழையையும் ஒருபோதும் அறியாது. மேலும், லட்சக்கணக்கான மலர்களாக வெடித்து மலரும் பேரானந்தத்தை அது ஒருபோதும் அறியாது.

அந்த வெடித்துச் சிதறல் தான் நிறைவானது. அந்த வெடித்துச் சிதறல் தான் கடவுள் என்பது - இப்படி பல லட்சம் மலர்களாக வெடித்துச் சிதறுவது தான் கடவுள் நிலையை அடைவதாகும். மனிதனின் உள்ளே உறைந்திருக்கின்ற சக்தியானது, எப்போது வெளியில் செயலாகிறதோ,

அதன் பிறகு மட்டுமே மனிதன் நிறைவடைகிறான். மனிதன், நிகழும் தன்மையுடன் பிறந்திருக்கிறான். அதுதான் மனிதனின் தனித்துவம். மற்ற எல்லா மிருகங்களும் நிறைவுடன் தான் பிறக்கின்றன. ஏதோ செத்துப் போவதற்காகவே பிறந்தது போல் அவைகள் பிறக்கின்றன. அவைகளின் பிறப்பிற்கும், இறப்பிற்கும் இடையில் எந்த ஒரு பரிணாம வளர்ச்சியும் இல்லை. அவைகள் ஒரே மட்டத்தில் தான் நகர்ந்து செல்கின்றன; அவைகள் ஒருபோதும் எந்த ஒரு உருமாற்றமும் அடைவதில்லை. அவைகளின் வாழ்க்கையில் எந்த ஒரு தலைகீழ் மாற்றமும் ஏற்படுவதில்லை. அவைகள் படுக்கைகோட்டு வசத்தில் தான் நகர்ந்து செல்கின்றன; செங்குத்து நிலை ஒருபோதும் அவைகளை ஊடுருவிச் செல்வதில்லை.

அதே போன்று, மனிதனும் படுக்கைக்கோட்டு வசத்திலேயே நகர்ந்து செல்வானாகில், அவன் தனது மனிதன் தன்மையை இழந்துவிடுவான்; அவன் ஒரு ஆன்மாவாக ஆக மாட்டான். எல்லா மக்களுக்கும் ஆன்மா என்பது இருப்பது கிடையாது என்று குர்ப்ஜியப் கூறியதற்கு இதுதான் அர்த்தம். ஒரு மனிதன் ஆன்மாவுடன் இருப்பது என்பது மிகவும் அபூர்வமானது. இது ஒரு வேறுபட்ட வாக்குமூலம் ஆகிவிடும். ஏனெனில், காலங்காலமாக, நீங்கள் பிறக்கும் போதே ஆன்மாவுடன் தான் பிறந்திருக்கிறீர்கள் என்று உங்களிடம் கூறுப்பட்டுள்ளது. குர்ப்ஜியப் கூறுவது என்னவென்றால், நீங்கள் ஆன்மாவாக ஆகின்ற சாத்தியத் தன்மையுடன் மட்டுமே பிறந்திருக்கிறீர்கள். நீங்கள் உண்மையான ஆன்மாவுடன் பிறக்கவில்லை என்பது தான். நீங்கள் ஆன்மாவிற்கான வரைபடத்துடன் பிறந்திருக்கிறீர்கள். ஆனால், அந்த வரைபடத்தைச் செயல்படுத்த வேண்டியது நீங்கள் தான். உங்களிடம் விதை உள்ளது. ஆனால், அதற்கான பூமியை, அதற்கான பருவகாலத்தை, சரியான தட்பவெப்பநிலையை, வெடித்து வெளிவருவதற்கும், வளர்வதற்குமான சரியான தருணத்தை நீங்கள் தான் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும்.

எனவே, படுக்கைகோட்டு வசத்தில் நீங்கள் நகர்ந்து செல்லும் போது, நீங்கள் ஒரு ஆன்மா இல்லாதவர் போலத்தான் செல்வீர்கள். ஆனால், செங்குத்துக் கோடு உங்களுக்குள் ஊடுருவும் போது, நீங்கள் ஒரு ஆன்மாவாக ஆகிவிடுவீர்கள். 'ஆன்மா' என்றால் படுக்கைக்கோட்டினை செங்குத்துக்கோடு ஊடுருவி உள்ளது என்று தான் அர்த்தம். அல்லது ஒரு உதாரணமாக, கூட்டுப்புழு, கம்பளிப்புழு, வண்ணத்துப்பூச்சி ஆகியவற்றையும் சிந்திக்கலாம்.

மனிதன் கூட்டுப்புழுவாக பிறக்கிறான். துரதிருஷ்டவசமாக, அநேகர் கூட்டுப்புழுவாகவே இறந்துவிடுகின்றனர். மிகச் சிலர் தான்

கம்பளிப்புழு ஆகின்றனர். கூட்டுப்புழு என்பது அசையாமல் இருப்பது; ஒரே நிலையில் இருப்பது. அதற்கு நகர்ந்து செல்லத் தெரியாது. அது ஒரே இடத்தில் இருந்து கொண்டே இருக்கும். மிகச் சிலர் தான் கம்பளிப்புழுவாக வளர்கின்றனர். கம்பளிப்புழு நகர ஆரம்பிக்கிறது. அதற்குள் வேகம் நுழைந்துவிடுகிறது. கூட்டுப்புழு நிலையானது. கம்பளிப்புழு நகரக்கூடியது. நகர்ந்து செல்வதன் மூலம், வாழ்க்கையானது அசைக்கப்படுகிறது. மேலும், அநேக கம்பளிப்புழுக்கள் படுக்கைக்கோட்டு வசத்தில், அதே மட்டத்தில், ஒரே பரிமாணத்தில் தான் நகர்ந்து செல்கின்றன. அபூர்வமாக, புத்தரைப் போன்ற ஒருவரோ அல்லது ஜலாலுதீன் ரூமி அல்லது இயேசு அல்லது கபீர் போன்றவர்களோ தான் இறுதிக் கட்டத்துக்கு தாவிச் சென்று, ஒரு வண்ணத்துப்பூச்சியாக ஆகின்றனர். அப்போது அங்கே செங்குத்துக்கோடு நுழைந்துவிடுகிறது.

கூட்டப்புழு அசைவற்றது; கம்பளிப்புழு அசைந்து செல்லக் கூடியது. அதற்கு நகர்ந்து செல்லத் தெரியும். ஆனால், வண்ணத்துப்பூச்சி பறக்கிறது. அதற்கு உயரத்தில் பறந்து செல்லத் தெரியும். மேலே பறந்து செல்ல ஆரம்பிக்கிறது. வண்ணத்துப்புச்சிக்கு சிறகுகள் முளைக்கின்றன; அந்த சிறகுகள் தான் அதன் லட்சியம். அதே போன்று, நீங்களும் சிறகுகளை வளர்த்துக் கொள்ளாவிடில், நீங்களும் சிறகுகளுடன் கூடிய ஒன்றாக ஆகாதவரையில், நீங்கள் ஒரு ஆன்மாவைப் பெற முடியாது.

சத்தியம் என்பது மூன்று நிலைகளின் மூலம் அறியப்படுகிறது: ஜீரணித்தல், சுதந்திரமாதல், படைத்தல் இந்த மூன்று வார்த்தைகளையும் நினைவில் கொள்ளுங்கள். இவை மிகவும் எதிர்கால வளர்ச்சிக்கு வாய்ப்புள்ளவை. ஜீரணித்தல் - இது தான் கூட்டுப்புழுவின் வேலை. இது, வெறுமனே உணவை செமிக்கச் செய்கிறது. அது ஒரு கம்பளிப்புழுவாக ஆவதற்குத் தயாராகிறது. அது, அதற்காக ஏற்பாடு செய்கிறது. அது சக்தியை தேக்கி வைக்கும் அணை போல் ஆகிறது. அந்த சக்தியானது நகர்ந்து செல்வதற்கு தயாராக ஆகிவிடும் போது, அது ஒரு கம்பளிப்புழு ஆகிவிடும். நகர்ந்து செல்வதற்கு முன்பு, உங்களுக்கு அதிக சக்தி தேவைப்படுமல்லவா, அதே போன்று தான். எனவே, கூட்டுப்புழு என்பது ஜீரணம் முடிந்த ஒன்றாகும்; வேலை முடிந்த ஒன்று.

அதன் பிறகு, இரண்டாம் நிலை ஆரம்பிக்கிறது. அதாவது, சுதந்திரமாதல். கூட்டுப்புழு பருவம் விட்டுவிடப் படுகிறது. இப்போது, ஒரே இடத்தில் இருக்க வேண்டிய அவசியம் இல்லை. எதையும் தேடி ஆராய்கின்ற நேரம் வந்துவிடுகிறது. தீரச் செயல் செய்கின்ற நேரம் வந்துவிடுகிறது. உண்மையான வாழ்க்கை என்பது, நகர்ந்து செல்வதில், சுதந்திரமாதலில் தான் ஆரம்பிக்கிறது. கூட்டுப்புழு பருவம், ஏதோ

ஒன்றைச் சார்ந்து இருப்பது. சிறைக் கைதி போன்றது. கைவிலங்கோடு இருப்பது போன்றது. கம்பளிப்புழு என்பது, அந்த கைவிலங்குகளை உடைத்தெறிகிறது, நகர்ந்து செல்ல ஆரம்பிக்கிறது. பனிக்கட்டி உருகிவிடுகிறது. இதற்கு மேல் அது உறைந்து இருப்பதில்லை. கூட்டுப்புழு பருவம் என்பது, உறைந்து கிடக்கின்ற நிலை. கம்பளிப்புழு பருவம் என்பது நகர்ந்து செல்வது, நதியைப் போல நகர்ந்து செல்வது.

அதன்பின்னர், மூன்றாவது நிலை வருகிறது. அது தான் படைத்தல் அல்லது படைப்பாற்றல். சுதந்திரம் பெற்றுவிட்டாலே, அதுவே அதிகம் என்று அர்த்தமாகாது. வெறுமனே சுதந்திரமாவதால் நீங்கள் நிறைவடைவதில்லை. நீங்கள் சிறைச்சாலையை விட்டு வெளியே வருவது நல்லது தான். ஆனால், வந்தபின் என்ன செய்வீர்கள்? எதற்காக விடுதலை? சுதந்திரம் எதற்காக?

விடுதலைக்கு இரண்டு நோக்கங்கள் உள்ளன. முதலாவது, ஏதோ ஒன்றிலிருந்து விடுதலை. இரண்டாவது, ஏதோ ஒன்றிற்கான விடுதலை. அநேகம் பேர் முதலாவது விடுதலையாகிய, ஏதோ ஒன்றிலிருந்து விடுதலை என்பதை மட்டுமே அடைகின்றனர் - அதாவது, பெற்றோர்களிடமிருந்து விடுதலை, திருச்சபையிலிருந்து விடுதலை, நிறுவனத்திலிருந்து விடுதலை, இதிலிருந்து விடுதலை, அதிலிருந்து விடுதலை, இப்படி எல்லா வகையான சிறைகளிலும் இருந்து விடுதலை பெறுவது. ஆனால், இந்த விடுதலை எதற்காக? இது ஒரு எதிர்மறையான விடுதலை தான். நீங்கள், விடுதலையின் எதிர்மறை நோக்கத்தை மட்டுமே அறிந்து கொள்ள முடியும். எதையும் படைப்பதற்கான விடுதலை, இருப்பதற்கான விடுதலை, வெளிப்படுத்துவதற்கான விடுதலை. உங்களது பாடலைப் பாடுவதற்கும், உங்களது நடனத்தை ஆடுவதற்குமான விடுதலை. தான், மூன்றாவது நிலையான படைப்பாற்றல் நிலை.

அப்போது தான் அந்த கம்பளிப்பூச்சியானது சிறகுகள் பெறுகின்ற ஒன்றாக, தேனை ருசிக்கின்ற ஒன்றாக, தேடியும், கண்டுபிடித்தும், புதியதை நாடியும், படைக்கின்ற ஒன்றாகவும் ஆகிறது. அதன்பிறகு தான், வண்ணத்துப்பூச்சியின் அந்த அழகு வருகிறது. படைப்பாற்றல் மிக்க மக்கள் மட்டுமே அழகானவர்கள். ஏனெனில், படைக்கின்ற மக்கள் மட்டுமே வாழ்க்கையின் குறிப்பிடத்தக்க சிறப்புகளை அறிவார்கள். அவர்கள், பார்ப்பதற்கு கண்களைப் பெற்றிருப்பார்கள், கேட்பதற்கு காதுகளைப் பெற்றிருப்பார்கள், உணர்வதற்கு இதயத்தைப் பெற்றிருப்பார்கள். அவர்கள், முழு உயிர்த்துடிப்புடன் இருப்பார்கள்; அவர்கள் உச்சபட்ச வாழ்க்கை வாழ்வார்கள். அவர்கள், தங்களின்

ஒளிவிளக்கை இரு முனைகளிலும் எரிய வைப்பார்கள். அவர்கள் அதிதீவிரமாகவும், முழுமையாகவும் வாழ்வார்கள்.

மேற்கூறிய உதாரணம் இல்லை என்றால், நாம் பிரட்ரிக் நீட்சே பயன்படுத்திய உருவகங்களை உபயோகிக்கலாம். மனிதனின் வாழ்க்கையை மூன்று தொடர் உருவகங்களாகப் பிரிக்கலாம் என்று அவர் கூறுகிறார். முதலாவது உருவகத்தை அவர் 'ஒட்டகம்' என்று அழைக்கிறார். இரண்டாவதை அவர் 'சிங்கம்' என்று அழைக்கிறார். மேலும், மூன்றாவதை அவர் 'குழந்தை' என்று அழைக்கிறார். ஒட்டகம், சிங்கம், குழந்தை - இவை மூன்றும் சூல் கொண்ட உருவகங்கள்.

ஒவ்வொரு மனிதனும் அவனது பண்பாடு, அவனது மதம், அவனது மக்கள், இப்படி அவனது சமூகத்தின் கலாச்சார பாரம்பரியத்தை உள்வாங்கிக் கொண்டு ஜீரணிக்க வேண்டும். அவனது கடந்த காலம் எதையெல்லாம் அவனுக்குக் கிடைக்கும்படி செய்கிறதோ, அதையெல்லாம் அவன் ஜீரணித்தாக வேண்டும். அவன் தனது கடந்தகாலத்தை ஜீரணித்தாக வேண்டும். இதைத் தான் நீட்சே ஒட்டக நிலை என்று அழைக்கிறார். ஒட்டகமானது, பாலைவனத்தில் தனது கடினமான பயணத்திற்குத் தேவையான அதிக அளவிலான உணவையும், தண்ணீரையும் தனது உடலில் தேக்கி வைத்துக் கொள்கின்ற சக்தியைப் பெற்றுள்ளது. மேலும், தனிப்பட்ட மனிதனுக்கும் இதே நிலை பொருந்தும். நீங்களும் பாலைவனத்தின் குறுக்கே சென்றாக வேண்டும். நீங்களும் உங்களது கடந்த காலத்தை ஜீரணித்தாக வேண்டும். மேலும், கடந்த காலத்தை வெறுமனே உங்களது ஞாபகத்தில் வைத்திருப்பது உங்களுக்கு உதவாது என்பதையும் நினைவில் கொள்ளுங்கள். ஜீரணித்தல் தான் உதவும். மேலும், ஒருவன் தனது கடந்த கால நினைவுகளை தன்னால் ஜீரணிக்க முடியாததால் தான், அவன் அவற்றை ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருக்கிறான் என்பதையும் நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் கடந்த கால நினைவுகளை ஜீரணித்துவிட்டால், நீங்கள் கடந்த காலத்திலிருந்து விடுதலை பெற்றுவிடுவீர்கள். நீங்கள் அதைப் பயன்படுத்த முடியும். ஆனால், அது உங்களைப் பயன்படுத்த முடியாது. நீங்கள் அதை உங்களுடையதாக வைத்திருக்கலாம். ஆனால், அது உங்களைத் தன்னுடையதாக ஆக்கிக் கொள்ள முடியாது.

நீங்கள் உண்ட உணவை ஜீரணித்துவிட்ட பின்னர், நீங்கள் அதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. அது உங்களில் இருந்து தனியாக வேறுபட்ட இருப்பதில்லை. அந்த உணவு உங்களது ரத்தமாக, உங்களது எலும்பாக, உங்களது மஜ்ஜையாக ஆகிவிடும்; அது நீங்களாகவே ஆகிவிடும்.

கடந்த காலங்கள் ஜீரணிக்கப்பட வேண்டும். கடந்த காலங்களால் ஒன்றும் தவறில்லை. அது உங்களது கடந்த காலம் தான். நீங்கள் மீண்டும் அ, ஆ,விலிருந்து ஆரம்பிக்க வேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில், ஒவ்வொருவரும் திரும்பவும் அ, ஆ,வில் இருந்து ஆரம்பிக்க வேண்டும் என்றால், இங்கே பரிணாம வளர்ச்சி அதிகம் இருக்காது. அதனால் தான், மிருகங்கள் பரிணாம வளர்ச்சி அடையவில்லை. பல லட்சம் ஆண்டுகளுக்கு முன்பு நாய் எப்படி இருந்ததோ, அதே போன்று தான் அப்படியே இன்றும் இருக்கிறது. மனிதன் ஒருவன் மட்டும் தான் பரிணாம வளர்ச்சி அடைகின்ற மிருகமாக இருக்கிறான். இந்த பரிணாம வளர்ச்சி எங்கிருந்து வந்தது? பரிணாம வளர்ச்சி வந்துள்ளது. எப்படியென்றால், மனிதன் மட்டுமே தனது கடந்த காலத்தை ஜீரணிக்கக் கூடியதொரு மிருகமாக இருக்கிறான். உங்களது கடந்த காலம் ஒருமுறை ஜீரணிக்கப்பட்டுவிட்டால், நீங்கள்அதிலிருந்து விடுதலை அடைந்து விடுகிறீர்கள். நீங்கள் சுதந்திரமாக சென்று கொண்டு, உங்களது கடந்த காலத்தையும் பயன்படுத்திக் கொள்ள முடியும். அப்படி இல்லையென்றால், நீங்கள் மீண்டும் மீண்டும் அநேக அனுபவங்களைக் கடந்து செல்ல வேண்டும். அப்படியிருந்தால், உங்களது வாழ்க்கையானது வீணாகிவிடும்.

இப்போது நீங்கள், உங்களது தந்தை மற்றும் அவரது தந்தை என்று மூதாதையர்களின் தோள்களின் மீது ஏறி நிற்க முடிகிறது. மனிதன் இப்படி ஒவ்வொரு மனிதனின் தோள்களின் மீதும் ஏறி நிற்பதனால் தான், இத்தகைய உயரத்தை எட்ட முடிந்துள்ளது. நாய்கள் இந்த உயரத்தை அடைய முடியாது. நரிகள் இந்த உயரத்தை அடைய முடியாது. அவைகள் எல்லாம், அவைகளின் உயரத்தைச் சார்ந்து மட்டுமே இருக்கின்றன. அவைகளின் உயரம், அவைகளின் உயரம் மட்டும் தான். ஆனால், உங்களது உயரத்தில், புத்தரின் உயரம் ஜீரணிக்கப்பட்டுள்ளது, பதஞ்சலி ஜீரணிக்கப்பட்டுள்ளார், மோசஸ் ஜீரணிக்கப்பட்டிருக்கிறார், லாவோத் ஸு ஜீரணிக்கப்பட்டிருக்கிறார். எந்த அளவுக்கு பெரிய அளவில் ஜீரணம் நடைபெறுகிறதோ, அந்த அளவுக்கு நீங்கள் உயர்ந்து நிற்பீர்கள். நீங்கள் ஒரு மலையின் உச்சியிலிருந்து பார்ப்பதால், உங்களது பார்வை மிகவும் பெரியதாக இருக்கும்.

எனவே, அதிகமானவற்றை ஜீரணியுங்கள். உங்களுக்குச் சொந்தமான மக்களோடு மட்டுமே நீங்கள் அடைபட்டு வாழ வேண்டிய அவசியம் கிடையாது. இந்த பூமியில் உள்ள எல்லா மக்களின், எல்லாக் கடந்த காலங்களையும் நீங்கள் ஜீரணியுங்கள்; இந்த பூமிக் கிரகத்தின் ஒரு குடிமகனாக இருங்கள். நீங்கள் ஒரு கிறிஸ்தவராகவோ, ஒரு

இந்துவாகவோ, அல்லது ஒரு முகமதியராகவோ குறுக்கிக் கொண்டு வாழ வேண்டிய அவசியம் கிடையாது. எல்லாவற்றையும் ஜீரணியுங்கள்! குர் ஆனும் உங்களுடையதுதான், பைபிளும் உங்களுடையது தான், தால்மத்தும் உங்களுடையதுதான். அதே போல், வேதங்களும் உங்களுடையது தான், தாவே-தி-சிங்கும் உங்களுடையது தான். எல்லாமே உங்களுடையது தான். எல்லாவற்றையும் ஜீரணியுங்கள். மேலும், எந்த அளவுக்கு நீங்கள் அதிகமாக ஜீரணிக்கிறீர்களோ, அந்த அளவுக்கு நீங்கள் நிற்கக்கூடிய சிகரம் உயரமானதாக இருக்கும். மேலும், உங்களால் வெகுதூரத்தையும், தொலைதூரத்தில் உள்ள இடங்களையும் பார்க்க முடியும், தொலைதூரக் காட்சிகள் எல்லாம் உங்களுடையவை ஆகிவிடும்.

இதைத் தான், நீட்ஷே ஒட்டக நிலை என்கிறார். ஆனால், இங்கே தேங்கி நின்றுவிடாதீர்கள். ஒருவர், மேலும் நகர்ந்து செல்ல வேண்டும். ஒட்டகம் என்பது கூட்டுப்புழு பருவத்தைப் போன்றது. ஒட்டகம், எல்லாவற்றையும் பதுக்கி வைக்கும். ஆனால், நீங்கள் இந்த நிலையிலேயே தேங்கி நின்று கொண்டு, எப்போதும் ஒட்டகமாகவே இருந்துவிட்டால், அதன் பின்னர் இந்த வாழ்க்கையின் அழகையும், வரங்களையும் உங்களால் அறிந்து கொள்ள முடியாது. அதன் பிறகு நீங்கள் ஒருபோதும் கடவுளை அறிந்து கொள்ள முடியாது. நீங்கள் கடந்த காலத்திலேயே தேங்கி நின்றுவிடுவீர்கள். ஒட்டகமானது, தனது கடந்த காலத்தை ஜீரணித்துவிடும். ஆனால், அதனால் அதைப் பயன்படுத்த முடியாது.

தனி மனித வளர்ச்சியிலும், காலம் வரும் போது இந்த ஒட்டகம் சிங்கமாக மாறும். இந்த சிங்கமானது, "உன்னால் முடியாது," என்கின்ற அந்த ராட்சத மிருகத்தை கிழித்துக் கூறு போட புறப்பட்டுவிடும். எல்லா ஆதிக்க சக்திகளுக்கும் எதிராக மனிதனுக்குள் உள்ள இந்த சிங்கம் கர்ஜிக்கும்.

சிங்கம் என்பது எதிர்ச்செயலாற்றுதல், ஒட்டகத்திற்கு எதிரான எழுச்சி. இப்போது, தனி மனிதனொருவன் தனக்குள் உள்ள சுயஒளியினை, உண்மையான மதிப்புகளுக்குமான இறுதியான ஆரம்ப இடம் என்பதைக் கண்டு கொள்கிறான். அவன், தனது சுய படைப்பாற்றலுக்கும், தனக்குள் மறைந்து கிடக்கின்ற சக்திக்கும் உதவுவது தான் தனது முதல்வேலை என்பதை அறிந்து கொள்கிறான். ஒரு சிலர், இந்த சிங்கத்தின் நிலையில் தேங்கி நின்று விடுகிறார்கள். அவர்கள் வெறுமனே கர்ஜனை செய்து கொண்டே போகிறார்கள். மேலும், அப்படி கர்ஜனை செய்தே அவர்கள் களைப் படைத்துவிடுகிறார்கள்.

ஒருவர், இப்படி சிங்கமாக ஆவது நல்லதுதான். ஆனால், ஒருவர் இன்னும் அடுத்த நிலைக்கு தாவிக் குதித்தாக வேண்டும். அப்படித் தாவிக் குதிக்கிற அந்த நிலையானது, மீண்டும் ஒரு குழந்தை போன்று ஆவது தான்.

ஆனால், நீங்கள் ஒவ்வொருவரும் ஒரு குழந்தையாக இருந்திருக்கிறீர்கள். ஆனால், விபரம் தெரிந்தவர்கள் கூறுவது என்னவென்றால், உங்களது அந்த முதல் குழந்தைப் பருவம், ஒரு பொய்யான குழந்தைப் பருவம் என்கின்றனர். அது, முதல் பல் போன்றது. அது, பல் போன்று தோற்றமளிக்கும். ஆனால், அவைகளால் எந்தப் பயனும் இருக்காது. அந்தப் பற்கள் விழுந்தாக வேண்டும். அதன் பிறகு தான் உண்மையான பற்கள் முளைக்கும். முதல் குழந்தை பருவம், பொய்யான குழந்தைப் பருவம்; இந்த இரண்டாவது குழந்தைப் பருவம் தான் உண்மையான குழந்தைப் பருவம். இந்த இரண்டாவது குழந்தைப் பருவம் தான், ஒரு குழந்தை நிலை அல்லது ஞானியின் நிலை என்று அழைக்கப்படுகிறது. இரண்டும் ஒரே அர்த்தமுள்ளது. மனிதன் முற்றிலும் கள்ளம் கபடமற்றவனாக ஆகாதவரையில், தனது கடந்த காலத்திலிருந்து விடுதலை பெறாத வரையில், தனது கடந்த காலத்திற்கு ஒரு எதிரியாக இல்லாத அளவிற்கு சுதந்திரமானவனாக ஆகாத வரையில், அவன் உண்மையான விடுதலை பெற முடியாது. ஒரு மனிதன், தனது கடந்த காலத்திற்கு இன்னமும் ஒரு எதிரியாக இருந்தால், அவன் உண்மையிலேயே விடுதலை பெற முடியாது என்பதை நினைவில் கொள்ளுங்கள். அவனுக்கு இன்னமும் சில மனக்குறைகளும், சில குறைபாடுகளும், சில காயங்களும் இருக்கும். அந்த ஒட்டகம், இன்னமும் அவனை பயமுறுத்தும். அந்த ஒட்டகத்தின் நிழல் இன்னமும் பின்தொடரும். சிங்கம், அவனிடம் இப்போது இருக்கும் என்றாலும் கூட, எப்படியோ அது அந்த ஒட்டகத்தைக் கண்டு பயப்படும். அது திரும்பவும் வந்துவிடுமோ என்று பயப்படும்.

மேலும், அந்த ஒட்டகத்தைப் பற்றிய பயம் முற்றிலும் போய்விடும் போது, அந்த சிங்கத்தின் கர்ஜனையும் நின்றுவிடும். அதன் பிறகு, அங்கே ஒரு குழந்தையின் பாட்டு பிறந்துவிடும்.

நீங்கள் எல்லோரும் இந்த மூன்று நிலைகளிலும் மிகவும் ஆழமாகவும், மிகவும் ஊடுருவியும் செல்ல வேண்டும் என்று நான் விரும்புகிறேன். ஏனெனில், இவைகள் மிகவும் மதிப்பு மிக்கவை.

அந்த ஒட்டக நிலை, ஜீரணிக்கின்ற நிலை போன்று, ஒரு குழந்தை கருப்பையில் இருப்பதைப் போன்றது. அது, ஜீரணிப்பதைத் தவிர வேறு எதையும் செய்வதில்லை; அது வெறுமனே தாயைத் தின்கிறது. மேலும்

மேலும் பெரிதாகிக் கொண்டே வருகிறது; இந்த உலகில் இறுதியாகக் குதிப்பதற்கு அது தயார் ஆகிறது. இதுவரை அந்தக் குழந்தைக்கு வேறு எந்த வேலையும் கிடையாது; தாயின் கருப்பையில் ஒன்பது மாதங்களுக்கு அந்தக் குழந்தை சாப்பிடுகிறது, தூங்குகிறது, தூங்குகிறது, சாப்பிடுகிறது. அது, சாப்பிட்டுக் கொண்டும் தூங்கிக் கொண்டுமே இருக்கிறது. இந்த இரண்டும் மட்டும் தான் அதன் வேலை. அந்தக் குழந்தை பிறந்த பிறகும் கூட, பல மாதங்கள் வெறுமனே அது அதைத் தான், அதாவது தூங்குவது, சாப்பிடுவது இதைத் தான் செய்கிறது. போகப் போக தூக்கமும் கொஞ்சம் கொஞ்சமாகக் குறையும். சாப்பிடுவதும் கொஞ்சம் கொஞ்சமாகக் குறையும். அப்போது அவன் தயாராக இருக்கிறான்; அவன் ஒரு தனி மனிதனாக இருப்பதற்குத் தயாராக இருக்கிறான்; கீழ்ப்படியாமை அவனுள் நுழைகிறது. அந்தக் குழந்தை 'முடியாது' என்று சொல்ல ஆரம்பிக்கிறது; 'சரி' என்று சொல்வது மெல்ல மெல்ல மறைகிறது. கீழ்ப்படிதல் இறக்கிறது; கீழ்ப்படியாமை பிறக்கிறது.

ஒட்டகத்தின் நிலையானது, ஜீரணிக்கின்ற நிலை. அந்த ஒட்டகத்திற்கு 'முடியாது' என்று எப்படிச் சொல்வது என்பது தெரியாது. முடியாது என்பது ஒட்டகத்திற்குப் பழக்கமில்லாத ஒன்று. அது, அந்த வார்த்தையைக் கேள்விப்பட்டதுமில்லை. அது 'முடியாது' என்று சொல்வதில் உள்ள சந்தோஷத்தை ருசித்ததும் கிடையாது. அதற்கு தெரிந்தது எல்லாம் 'சரி' என்பது தான். அது 'சரி' என்று சொல்வது மிகவும் ஆழமானதாக இருக்க முடியாது. ஏனெனில், 'முடியாது' என்பதை அறிந்து கொள்ளாத வரையில், நீங்கள் 'சரி' என்று சொல்வது மிகுந்த ஆழமானதாக இருக்க முடியாது; அது மேலோட்டமாகத் தான் இருக்க முடியும். 'முடியாது' என்று சொல்லத் தெரியாத ஒரு மனிதன் எப்படி 'சரி' என்று சொல்வதை அறிய முடியும்? அவனது 'சரி' என்பது சக்தியற்றதாக இருக்கும். அதே போன்று தான், அந்த ஒட்டகத்தின் 'சரி' என்பதும் சக்தியற்றதாக இருக்கும். அந்த ஒட்டகத்திற்கு என்ன நடக்கிறது என்பது தெரியாது; அது 'சரி' என்று சொல்லிக் கொண்டே போகிறது. ஏனெனில், அதற்கு கற்றுக் கொடுக்கப்பட்ட ஒரே வார்த்தை அது தான். கீழ்ப்படிதல், நம்புதல் - இவைகள் தான் 'ஒட்டகம்' என்று அழைக்கப்படுகின்ற அந்த நிலையின் குணாதிசயங்கள். அறிவு மரத்தின் பழங்களை சாப்பிடுவதற்கு முன்பு வரையில், ஆதாமும் இந்த நிலையில் தான் இருந்தான். மேலும், ஒவ்வொரு மனிதனும் இந்த நிலையைக் கடந்து தான் வரவேண்டும்.

இந்த நிலையானது மனம் உருவாகுவதற்கு முன்பு, ஆன்மா உருவாகுவதற்கு உள்ள நிலை. அங்கே இன்னமும் மனம் என்பது

இல்லை. மனம் என்பது வளர்ச்சி அடைகிறது. ஆனால், அது ஒரு முழுமையான விஷயமாக இல்லை; அது மிகவும் தெளிவற்றதாகவும், இரண்டும் கெட்டதாகவும், இருள் நிறைந்ததாகவும் உள்ளது. ஆன்மா என்பது, வந்து கொண்டிருக்கும். ஆனால், அது இன்னமும் பாதையில் வந்து கொண்டுதானிருக்கும். அங்கே அதற்கான தெளிவான விவரணைகள் இருக்காது. அந்தக் குழந்தை இன்னமும் தன்னை ஒரு தனிநபராக அறியாது. அந்தக் கனியை சாப்பிடுவதற்கு முன்பு, ஆதாம் கடவுளின் ஒரு அங்கமாகத் தான் இருந்தான். அவன் கருப்பையில் இருந்தான். அவன் கீழ்ப்படிதலுடன் இருந்தான். எப்போதும் 'சரி' என்று சொல்பவனாக இருந்தான். ஆனால், அவன் சுதந்திரமானவனாக இல்லை. சுதந்திரம் என்பது 'முடியாது' என்கிற கதவின் வழியாகத் தான் நுழைய முடியும். 'சரி' என்பதன் மூலம் எதையும் சார்ந்து இருக்கின்ற நிலை தான் இருக்கும். ஆகவே, ஒட்டகம் என்பதன் நிலையில் அங்கே எதையும் சார்ந்து இருப்பதும், பிறர் ஆதரவு இல்லாமல் இருக்க முடியாததுமானதாக இருக்கும். அடுத்தவர் தான் உங்களது சுயமான இருப்பு நிலையை விடவும் முக்கியமானவராக இருப்பார். தாய் முக்கியமானவராக இருப்பார், சமுதாயம் முக்கியமானதாக இருக்கும், மதகுரு முக்கியமானவராக இருப்பார், அரசியல்வாதி முக்கியமானவராக இருப்பார். உங்களைத் தவிர எல்லோரும் முக்கியமானவராக இருப்பார்கள். அடுத்தவர் தான் முக்கியமானவராக இருப்பார், நீங்கள் இன்னமும் அங்கே முக்கியமானவராக இருக்க மாட்டீர்கள். அது மிகவும்தன்னுணர்வில்லாமல் இருக்கும் நிலை. பெரும்பான்மையான மக்கள், அங்கேயே தேங்கி நின்றுவிடுகின்றனர். அவர்கள் ஒட்டகங்களாகவே இருந்துவிடுகின்றனர். கிட்டத்தட்ட 90 சதவீதம் மக்கள் ஒட்டகங்களாகத் தான் இருந்து வருகின்றனர்.

இது மிகவும் விநோதமான நிலை - அதாவது, 90 சதவீதம் மனிதர்கள் கூட்டுப்புழுக்களாக இருப்பது என்பது விநோதமானது. அதனால் தான் இங்கே அதிக துன்பம் உள்ளது, சந்தோஷம் இல்லை. ஆனால், நீங்கள் சந்தோஷத்தைத் தேடிக் கொண்டே போகலாம். உங்களால் அதைக் கண்டு கொள்ள முடியாது. ஏனெனில், சந்தோஷம் இருந்து வெளியில் கொடுக்கப்படுவதில்லை. நீங்கள் ஒரு குழந்தையாக ஆகாத வரையில், அதாவது அந்த மூன்றாவது நிலையை அடையாத வரையில், நீங்கள் ஒரு வண்ணத்துப்பூச்சியாக மாறாத வரையில், உங்களால் சந்தோஷம் என்பதை அறிந்து கொள்ள முடியாது. மகிழ்ச்சி என்பது, ஏதோ வெளியில் இருந்து கொடுக்கப்படுகின்ற ஒன்று அல்ல; அது, உங்களுக்குள் வளர்ச்சி அடைகின்ற ஒரு பார்வை. அது, இந்த மூன்றாவது நிலையில் மட்டுமே சாத்தியப்படும்.

முதல் நிலை, துன்பத்தின் நிலை. அந்த மூன்றாம் நிலை, பேரானந்தத்தின் நிலை. மேலும், இரண்டிற்கும் இடையில் இருப்பது தான் சிங்கம். அது, சில வேளைகளில் துன்பத்துடனும், மேலும் சில வேளைகளில் இன்பத்துடனும் இருக்கும். சில வேளைகளில் வேதனையுடனும், மேலும் சில வேளைகளில் ஆனந்தத்துடனும் இருக்கும்.

ஒட்டகத்தின் நிலையில் நீங்கள் இருக்கும் போது, நீங்கள் வெறும் கிளிப்பிள்ளை போன்று தான் இருக்கிறீர்கள். நீங்கள் அப்போது வெறும் நினைவுகளால் ஆனவராக இருக்கிறீர்கள்; வேறு ஒன்றும் இல்லை. உங்களது வாழ்க்கை முழுவதும் மற்றவர்களால் உங்களுக்கு அளிக்கப்பட்ட நம்பிக்கைகளோடு தான் இருக்கும். இங்கு தான் நீங்கள் இந்த கிறிஸ்தவர்களையும், முகமதியர்களையும், இந்துக்களையும், சமணர்களையும், பௌத்தர்களையும் காணலாம். தேவாலயங் களுக்குள்ளும், கோவில்களுக்குள்ளும், மசூதிகளுக்குள்ளும் சென்று பாருங்கள். அங்கே நீங்கள் இந்த ஒட்டகங்களின் மாபெரும் கூட்டத்தைக் காணமுடியும். உங்களால் ஒரு மனிதனைக்கூடக் காண முடியாது. அவர்கள் கிளிப்பிள்ளை போல் சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருப்பார்கள்.

நான் கேள்விப்பட்ட கதை இது :

இந்தக் கதையானது மத்திய காலத்தைச் சேர்ந்த, ஒரு பள்ளியில் நடந்த, தீ கக்கும் விலங்குகளை வதம் செய்கின்ற பயிற்சி வகுப்பு ஒன்றில் சேர்ந்து பயிற்சி பெற்ற ஒரு வீரனைப் பற்றியது. மெர்லின் என்கிற மந்திரவாதி நடத்திய அந்த பயிற்சி வகுப்பில், மேலும் அநேக இளம் வீரர்களும் சேர்ந்து பயிற்சி பெற்றனர்.

நமது அந்த கதாநாயகன், மெர்லினிடம் முதல்நாள் சென்று அந்தப் பயிற்சி முகாமில் அவனால் ஒருவேளை நன்றாகச் செய்ய முடியாமல் போகலாம் என்று நினைப்பதை அவர் அறிந்து கொள்ள வேண்டும் என்றான். ஏனெனில், அவன் ஒரு கோழையாக இருந்தான். மேலும், அவன் அந்த புராண காலத்து விலங்கினை கொல்வதற்கு மிகவும் பயமும், நடுக்கமும் கொண்டவனாகவும் இருந்தான். அதற்கு மெர்லின் அவனிடம், அதற்காக கவலைப்படத் தேவையில்லை என்றார். ஏனெனில், தன்னிடம் அந்த விலங்கினை வதம் செய்கின்ற ஒரு மந்திர வாள் இருப்பதாகவும், அதை அவர் அந்த இளம் கோழை வீரனிடம் கொடுப்பதாகவும் கூறினார். அதுபோன்றதொரு வாள் கையில் இருந்துவிட்டால் போதும், யாராக இருந்தாலும் சரி, அந்த விலங்கினை கொல்லாமல் விட்டுவிட வழியே இல்லை. இப்படிப்பட்டதொரு அதிகாரப்பூர்வ மந்திர வாள் ஒன்று இருக்கும் போது, எவ்வளவு தான்

ஒருவன் உதவாக்கரையாக இருந்தாலும்கூட பரவாயில்லை, அவனால் அந்த விலங்கினைக் கொன்றுவிட முடியும் என்று அறிந்து மிகவும் சந்தோஷமடைந்தான். தனது முதல் பயணத்தில் இருந்தே அந்த கோழைத்தனமான வீரன், தனது கையில் அந்த மந்திர வாள் இருந்ததால் விலங்குகளுக்கு மேல் விலங்குகளைக் கொன்று குவித்துவிட்டு, ஒவ்வொரு பெண்களாக விடுவித்து வந்தான்.

ஒருநாள், அந்த பயிற்சி வகுப்பு முடியும் தருவாயில், மெர்லின் அந்த இளம் வீரன் கலந்து கொண்ட அந்த வகுப்பில் ஒரு புதிய விளையாட்டைப் பற்றி கூறினார். அதன்படி மாணவர்கள் அனைவரும் வெளியே போய், அன்றைய தினமே ஒரு விலங்கினைக் கொன்றுவர வேண்டும் என்றார். தங்களது வீரத்தை நிரூபிப்பதற்காக எல்லா வீரர்களும் உற்சாகத்துடன் முட்டி மோதிக்கொண்டு ஓடினார்கள். அந்தக் கூட்டத்தில் நமது கதாநாயகன், அந்த வாள் வைக்கும் இடத்தில் இருந்து ஒரு தவறான வாளை எடுத்துச் சென்று விட்டான். கொஞ்ச நேரத்தில் அவன் ஒரு குகையின் முன்பு நின்றான். அவன் அந்த குகைக்குள் மாட்டிக் கொண்ட ஒரு பெண்ணை விடுவிக்க வேண்டும். ஆனால், அந்த தீ கக்கும் விலங்கிடமிருந்து பெரும் தீப்பிழம்பு வெளியே வந்தது. தான் ஒரு தவறான வாளை எடுத்து வந்துவிட்டதை அறியாமலேயே அந்த இளம் வீரன் தனது வாளை உருவி, அந்த விலங்கினை வதம் செய்வதற்கு ஆயத்தமானான். அவன் அதை வெட்டப் போகும் போது தான், தான் தவறான ஒரு வாளை எடுத்து வந்துவிட்டதை அறிந்தான். இது அந்த மந்திர வாள் அல்ல. அது மிகவும் நல்ல வீரர்கள் உபயோகிக்கின்ற சாதாரண வாள் தான்.

ஆனால், அவன் வாளை ஓங்கிய வேகத்தில் அவனால் நிறுத்த முடியவில்லை. எனவே அவன், அவனுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டது போல் அந்த சாதாரண வாளினால் வெட்டினான். ஆனால், அவனுக்கு ஆச்சரியமும் சந்தோஷமும் உண்டாகும்படி அந்த தீ கக்கும் விலங்கின் தலை கீழே விழுந்தது.

அந்த வீரன் தனது இடுப்புப் பட்டையில் அந்த விலங்கின் தலையைக் கட்டிக் கொண்டு, கையில் வாளோடு, அந்தப் பெண்ணையும் கட்டி இழுத்துக் கொண்டு தனது வகுப்பிற்கு வந்த அந்த வீரன், தான் செய்த தவறையும், விவரிக்க முடியாத அளவுக்கு தப்பிப் பிழைத்ததையும் மெர்லினிடம் கூறுவதற்கு ஓடோடி வந்தான்.

அந்த இளம் வீரனின் கதையைக் கேட்ட மெர்லின் சிரித்தான். அந்த இளம் வீரனுக்கு மெர்லின் கூறிய பதில், "இப்போது நீ யூகித்திருப்பாய் என்று நினைக்கிறேன். இங்குள்ள வாள்களில் எதுவும்

மந்திர வாள் கிடையாது. எதுவும் ஒருபோதும் அப்படி இருந்ததும் இல்லை. நீ நம்பிக்கை வைத்ததில் மட்டுமே அந்த மந்திரம் உள்ளது," என்பதாக இருந்தது.

எனவே, ஒட்டகம் இப்படிப்பட்ட அந்த மந்திர நம்பிக்கையில் தான் வாழ்கிறது. அது வேலை செய்யும். அது அற்புதங்களைச் செய்யும். ஆனால், அந்த ஒட்டகம், ஒட்டகமாகத் தான் இருக்கும்; வளர்ச்சி அங்கே இருக்காது.

இதைப் போன்று தான் கோவில்களிலும், தேவாலயங்களிலும் பிரார்த்திக்கின்ற மக்கள், நம்பிக்கையின் பாதிப்பில் உள்ளனர். கடவுள் என்றால் என்ன என்று அவர்களுக்குத் தெரியாது. அவர்கள் ஒருபோதும் அது போன்ற ஒன்றை உணர்ந்தது கிடையாது. அவர்கள் வெறுமனே அதைப் பற்றி நம்ப மட்டுமே செய்கின்றனர். அவர்களின் அந்த நம்பிக்கை என்னும் மந்திரம், ஏதோ சில காரியங்களை அவர்களுக்குச் செய்து கொண்டிருக்கிறது. ஆனால், அவைகள் எல்லாம் நம்பிக்கையினால் உருவாக்கப்பட்டவை. அது ஒருவகையான கனவு உலகம். அவர்கள் தங்களது தன்னுணர்வற்ற நிலையில் இருந்து, தங்களின் தூக்கத்தில் இருந்து இன்னமும் எழுந்து வரவில்லை. மேலும், இந்த நிலை தேவையில்லை என்று நான் கூறவில்லை என்பதையும் நினைவில் கொள்ளுங்கள். இதுவும் தேவையானது தான். ஆனால், அது முழுமை பெற்றுவிட்டவுடன், ஒருவர் அதிலிருந்து வெளியே குதித்து வரவேண்டும். ஒருவர் எப்போதும் ஒட்டகமாகவே இருப்பதற்காகவே இந்த உலகத்திற்கு வரவில்லை.

மேலும், உங்களது பெற்றோர்கள் அல்லது ஆசிரியர்கள் அல்லது மத குருக்கள் அல்லது சமுதாயம் இவற்றின் மீது கோபம் கொள்ளாதீர்கள். ஏனெனில், அவர்கள் ஒருவிதமான கீழ்ப்படிதலை உங்களிடம் உருவாக்கித் தான் தீர வேண்டும். ஏனெனில், அப்படிப்பட்ட கீழ்ப்படிதலின் மூலமாகத் தான் ஒருவர் ஜீரணிக்கும் திறனைப் பெற முடியும். தந்தை கற்றுக் கொடுக்க வேண்டும், தாயார் கற்றுக் கொடுக்க வேண்டும். ஆனால், அந்தக் குழந்தை வெறுமனே அதை கிரகித்துக் கொள்ள வேண்டும். பக்குவம் அடைவதற்கு முன்பாகவே கேள்விகள் எழுந்தால், அதன் பிறகு ஜீரணம் என்பது நின்று போய்விடும்.

தனது தாயின் கருப்பையில் இருக்கும் போதே சந்தேகம் கொள்கின்ற ஒரு குழந்தையைப் பற்றி சிந்தித்துப் பாருங்கள் - அவன் இறந்து போவான் - இந்த பெண்ணிடம் இருந்து நாம் உணவை உட்கொள்ளலாமா அல்லது வேண்டாமா, · இந்த உணவு உண்மையிலேயே நமக்கு ஊட்டமளிக்குமா அல்லது அளிக்காதா என்று அந்தக் குழந்தை சந்தேகம் கொண்டால், யாருக்குத் தெரியும், ஒருவேளை

அது விஷமானதாக இருந்துவிட்டால்? என்றும் சந்தேகம் வந்துவிட்டால், மேலும் 24 மணிநேரமும் தூங்குவதா அல்லது வேண்டாமா, ஏனெனில் இந்த 24 மணி நேரம் தூங்குவது என்பது மிகவும் அதிகமாகத் தெரிகிறதே, அதுவும் ஒன்பது மாதங்களுக்கு என்று சந்தேகம் அடைந்தால் என்ன ஆகும்? இப்படி அந்தக் குழந்தை கொஞ்சம் சந்தேகம் கொண்டாலும் போதும், அந்த சந்தேகமே அந்தக் குழந்தையைக் கொன்றுவிடும். என்றாலும்கூட, இப்படி சந்தேகப்படுவதற்கு கற்றுக் கொள்கிற நாளும் வருகிறது. ஒவ்வொரு விஷயத்திற்கென்றும் அதற்கான பருவகாலம் உள்ளது.

ஒவ்வொரு தந்தைக்கும் தனது மகனிடம் என்ன சொல்வது? என்கிற பிரச்சனை வருகிறது. ஒவ்வொரு தாயும், தனது மகளுக்கு என்ன கற்றுக் கொடுக்க வேண்டும்? என்கிற பிரச்சனையை எதிர் கொள்கிறாள். இந்த புதிய தலைமுறைக்கு எதைக் கற்றுக் கொடுப்பது என்று ஒவ்வொரு ஆசிரியரும் கவலைப்படுகிறார். கடந்த காலத்தில் உள்ளவை அதிகம் உள்ளன; அநேக நற்செயல்கள், அநேக புரிதலின் சிகரங்கள், அநேக முடிவுகள் உள்ளன. இவற்றில் எதை அந்தக் குழந்தைக்கு கற்றுக் கொடுப்பது என்கிற பிரச்சனை உள்ளது.

முதல் நிலையில், ஒவ்வொருவரும் ஒட்டகமாக இருந்து தான் ஆக வேண்டும். எல்லாவற்றிற்கும் சரி என்று சொல்லிக் கொண்டும், எதைச் சொன்னாலும் அதை நம்பிக் கொண்டும், அதை கிரகித்துக் கொண்டும், ஜீரணித்துக் கொண்டும் இருக்க வேண்டும். ஆனால், இது ஒரு பயணத்தின் ஆரம்பம் மட்டுமே. இதுவே முடிவாகிவிடாது.

இரண்டாவது நிலை, கடினமானது. இந்த முதல் நிலையை இந்த சமுதாயம் உங்களுக்குக் கொடுக்கிறது. அதனால் தான் இங்கே லட்சக்கணக்கான ஒட்டகங்களும், ஒரு சில சிங்கங்களும் உள்ளன. நீங்கள் ஒரு முழுமை பெற்ற ஒட்டகமாக மாறிய பின்னர் தான் உங்களை விடுவிக்கும். அதற்கு அப்பால் இந்த சமுதாயத்தால் எதுவும் செய்ய முடியாது. அங்கே தான் இந்த சமுதாயத்தின் வேலை நிறைவடைகிறது. இந்த பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள் இவற்றின் வேலை முடிவடைகிறது. அது உங்களை, நீங்கள் ஒரு முழுமையான ஒட்டகம் என்கிற சான்றிதழோடு வெளியே அனுப்புகிறது.

ஆனால், ஒரு சிங்கமாக நீங்கள், உங்களது சொந்தக் காலில் நிற்க வேண்டும். இதை நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் ஒரு சிங்கமாக ஆக.வேண்டும் என்று நினைக்கவில்லையென்றால், நீங்கள் ஒருபோதும் ஒரு சிங்கமாக ஆக மாட்டீர்கள். அந்த ஆபத்தை ஒவ்வொரு தனி மனிதனும் எடுத்தாக வேண்டும். அது ஒரு சூதாட்டம் தான். அது

ஆபத்தானதும் கூட. ஏனெனில், ஒரு சிங்கமாக நீங்கள் மாறிவிடும் போது, நீங்கள் உங்களைச் சுற்றியுள்ள எல்லா ஒட்டகங்களுக்கும் தொல்லை கொடுக்க ஆரம்பித்து விடுவீர்கள். மேலும், ஒட்டகங்கள் எப்போதுமே சமாதானத்தை நேசிக்கின்ற விலங்குகள். அவை எப்போதும் சமாதானமாகப் போவதற்குத் தயாராக இருப்பவை. அவைகள் தொந்தரவை விரும்புவதில்லை. இந்த உலகில் எந்த ஒரு புதிய விஷயமும் நிகழ்வதற்கு அவை விரும்புவதில்லை. ஏனெனில், எல்லா புதிய விஷயங்களும் தொந்தரவை உருவாக்கும். அவைகள் இந்த புரட்சியாளர்களுக்கும், கிளர்ச்சியாளர்களுக்கும் எதிரானவைகள். ஆனால், மிகப்பெரிய விஷயங்களுக்கு எதிராக அல்ல என்பதை உனக்கு சொல்கிறேன். அதாவது, சாக்ரட்டிஸ் மற்றும் கிறிஸ்துவைப் பற்றி அல்ல; அவர் மிகப்பெரிய புரட்சியைக் கொண்டு வந்தார்கள் - ஆனால், இந்த ஒட்டகங்கள் நீயே ஆச்சரியப்படும்படிக்கு சிறிய விஷயங்களைக் கண்டு தான் பயப்படுவார்கள்.

நான் கேள்விப்பட்டது :

1842 டிசம்பரில், ஐக்கிய நாடுகளில் சின்சினாட்டியில் உள்ள ஆடம்தாம்ஸன் என்பவர் முதல் முதலாக தனது குளியல் தொட்டியை செய்து தண்ணீரால் நிரப்பினார். தாம்ஸனின் இந்த குளியல் தொட்டி செய்தி விரைவாகப் பரவியது. குடிமக்களின் ஜனநாயக எளிமையை புதிதாகப் புகுந்துள்ள இந்த கருத்துக்கள் அழித்துவிடும் என்று செய்தித் தாள்கள் கூறின.

சரி, கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள்... ஒரு குளியல் தொட்டி, இந்த ஜனநாயக குடிமக்களின் ஒற்றுமையை அழித்துவிடுமா?

மருத்துவர்களோ, அவர்கள் பங்கிற்கு முடக்குவாதம், நுரையீரல் வீக்கம் போன்ற நோய்கள் வரலாம் என்று கணிப்புச் செய்தி வெளியிட்டனர். குளிர் காலத்தில் இது போன்ற குளியல் தொட்டியில் குளித்தால், பெருகிவரும் ஜனத்தொகை குறையும் என்று அறிவாளிகள் ஒத்துக் கொண்டனர். சுதந்திரத்தின் தொட்டில் என்று அழைக்கப்படுகின்ற பிலடெல்பியாவில், நவம்பர் ஒன்றிலிருந்த மார்ச் ஒன்றாம் தேதி வரை குளிப்பதற்கு தடை விதிக்க முயற்சி செய்தது. 1845ல் பாஸ்டனில், மருத்துவர் அறிவுறுத்தாமல் குளிப்பது என்பது சட்டவிரோதம் ஆக்கப்பட்டது. மேலும், ஹார்ட்போர்டு, புராவிடன்ஸ், வில்மிங்க்டன் மற்றும் பிற நகரங்கள் தண்ணீருக்கு அதிக வரி வசூலிப்பதன் மூலம், குளிக்கும் பழக்கத்திற்கு முட்டுக்கட்டை.போட முயன்றன. வர்ஜீனியா மாகாணம், அந்த மாகாணத்திற்குள் கொண்டு வரப்படும் ஒவ்வொரு குளியல் தொட்டிக்கும் ஒவ்வொரு வருடமும் 30 டாலர் வரி விதித்ததன்

மூலம், இந்த குளியலின் கன்னத்தில் அறைந்தது. ஆனால், 1922 வாக்கில் ஓர் ஆண்டிற்கு 8,89,000 குளியல் தொட்டிகள் தயாரிக்கப்பட்டன.

எனவே, ஒட்டகம் போன்றவர்கள் வெறுமனே புதிதாக எது வந்தாலும் அதை எதிர்ப்பார்கள். அது, எதுவாக இருந்தாலும் கவலையில்லை. அது வெறும் குளியல் தொட்டியாக இருந்தாலும் கூட, அவர்கள் தங்களின் எதிர்ப்பிற்கு பகுத்தறிவு வாதம் செய்வார்கள்.

பழங்கால கிரேக்க நாட்டின் ஒரு பகுதியில், இது ஒரு நீண்ட கால வழக்கமாக இருந்தது. அதாவது, அங்குள்ள பாப்புலர் அசெம்பிளியில் ஒரு மனிதன் ஒரு புதிய சட்டத்தைக் கொண்டு வந்தால், அதை அவன் ஒரு மேடையில் நின்று கொண்டு, கழுத்தைச் சுற்றி ஒரு கயிற்றைக் கட்டிக்கொண்டு, அந்தச் சட்டத்தை வாக்கெடுப்பிற்கு விடவேண்டும். அந்தச் சட்டம் நிறைவேற்றப்பட்டால், அவன் கழுத்தில் இருக்கும் கயிறு நீக்கப்படும். அந்தச் சட்டம் தோல்வியடைந்தால், அவர்கள் அவன் காலடியில் உள்ள மேடையை நீக்கிவிடுவார்கள்.

எனவே, சிங்கங்கள் வரவேற்கப்படுவதில்லை. இந்த சமுதாயம், சிங்கங்களுக்கு எல்லாவிதமான கஷ்டத்தையும் உருவாக்கும். இந்த ஒட்டகங்கள், இந்த சிங்கங்களைப் பார்த்து பயப்படும் அவைகள், ஒட்டகங்களின் சௌகரியத்தை குலைத்துவிடும். அவற்றின் தூக்கத்தை கலைத்து விடும். அவைகள் கவலையை உருவாக்கிவிடும். ஒட்டகங்களின் மனதில் தாங்களும் சிங்கங்கள் ஆக வேண்டும் என்கிற ஆசையை உருவாக்கிவிடும். அது தான் உண்மையான பிரச்சனை.

இயேசு ஏன் சிலுவையில் அறையப்பட்டார்? அவர் வெறுமனே இருந்தாலே போதும் ... ... அதுவே, அநேக ஒட்டகங்கள் தாங்களும் சிங்கங்களாக ஆக வேண்டும் என்று கனவு காண செய்துவிடும். மேலும், அது அவர்களின் தூக்கத்தை கலைத்துவிடும். மேலும் அது, அவர்களின் அன்றாட சாதாரண வாழ்க்கையை குலைத்துவிடும்.

புத்தர் மீது ஏன் கல் எறிந்தார்கள்? மகாவீரரரை ஏன் எந்த ஒரு நகரத்திற்குள்ளும் அனுமதிக்க மறுத்தார்கள்? மன்சூரின் தலை ஏன் துண்டிக்கப்பட்டது? இத்தகைய மக்கள் தொந்தரவு கொடுப்பவர்கள். இவர்கள், மக்களின் தூக்கத்தை கெடுத்துவிடுவார்கள். இவர்கள் எப்போதும் கர்ஜனை செய்து கொண்டே இருப்பார்கள். புத்தர் தனது பிரசங்கத்தை 'சிங்கத்தின் கர்ஜனை' என்று தான் அழைத்தார்.

முதலாவது, அந்த ஒட்டகத்தின் நிலை, இந்த சமுதாயத்தால் கொடுக்கப்படுகிறது. அடுத்து இரண்டாவது நிலை, ஒவ்வொரு தனி

மனிதனாலும் அடையப்பட வேண்டியது. அதை அடைவதன் மூலம் நீங்கள் ஒரு தனி மனிதனாக, தனித்தன்மை வாய்ந்தவராக ஆக முடியும். நீங்கள் இனிமேல் எதையும் ஒத்துக் கொள்பவராக இருப்பதில்லை. அதன் பிறகு, நீங்கள் இந்த பாரம்பரியத்தின் ஒரு அங்கமாக இருப்பதில்லை. நீங்கள் கூட்டினை விட்டுவிட்டு, ஒரு கம்பளிப்புழு போல் ஆகிவிடுவீர்கள். நீங்கள் நகர்ந்த செல்ல ஆரம்பித்து விடுவீர்கள்.

சிங்கம் போன்ற நிலைக்கு கீழ்க்கண்ட குணாதிசயங்கள் இருக்கும். சுதந்திரமாக இருத்தல், முடியாது என்று சொல்லுதல், கீழ்ப்படியாமை, மற்றவர்களுக்கு எதிராக கிளர்ச்சி செய்தல், ஆதிக்க சக்திக்கு எதிராக, கொள்கைக்கு எதிராக, புனித நூல்களுக்கு எதிராக, திருச்சபைக்கு எதிராக, அரசியல் அதிகாரத்திற்கு எதிராக, ஆட்சிக்கு எதிராக கிளர்ச்சி செய்தல் ஆகியவை. சிங்கம் போன்றன எல்லாவற்றிற்கும் எதிராக இருப்பான்! அவன் எல்லாவற்றையும் கலைத்துவிட்டு ஒரு புதிய உலகினை, உள்ளத்து ஆசைக்கு நெருக்கமாக உள்ள ஒன்றினை உருவாக்க விரும்புவான். அவனிடம் மிகப்பெரிய கனவுகளும், அவனது மனதில் கனவு உலகங்களும் இருக்கும். ஒட்டகங்களுக்கு, அவன் பைத்தியம் போல் தெரியும். ஏனெனில், ஒட்டகங்கள் கடந்த காலத்தில் வாழ்பவை. ஆனால், இந்த சிங்கங்கள் எதிர்காலத்தில் வாழ்பவை. ஒரு மிகப்பெரிய இடைவெளி உருவாகிவிடும். சிங்கம் எதிர்காலத்தை நிலைநாட்டும். ஆனால், கடந்த காலத்தை அழித்தால் தான் எதிர்காலத்தைக் கொண்டுவர முடியும். பழையது இல்லாமல் போய், அங்கு வெற்றிடத்தை உருவாக்கினால் மட்டுமே, புதியது அங்கே நுழைய முடியும். புதியது இருப்பதற்கு பழையது மரணமடைய வேண்டும். எனவே, இங்கே இந்த ஒட்டகங்களுக்கும், சிங்கங்களுக்கும் இடையே, இடைவிடாது சண்டை நடந்து கொண்டு தான் இருக்கும். ஏனெனில், இங்கே ஒட்டகங்கள் தான் பெரும்பான்மையாக உள்ளன. சிங்கங்கள் எப்போதாவது நிகழ்கின்றன. சிங்கங்கள் விதிவிலக்கானவை. ஆனால், இந்த விதிவிலக்கு மட்டும் தான் ஆள்வதை நிரூபிக்கிறது.

நம்பிக்கையில்லாமை தான் அவனது குணாதிசயம். சந்தேகம் தான் அவனது குணாதிசயம். ஆதாம், அறிவு மரத்தின் கனிகளை சாப்பிட்டான். மனம் என்பது பிறந்தது. ஆன்மா என்பது ஒரு விவரிப்புக்கு உட்பட்ட விஷயமாக ஆகிவிட்டது. ஒட்டகம் 'நான்' என்னும் ஆணவம் இல்லாதது. சிங்கம் மிகவும் ஆணவம் மிக்கது. சிங்கத்திற்கு ஆணவம் . மட்டுமே தெரியும். அதனால் தான், புரட்சியாளர்கள், கிளர்ச்சி செய்கின்ற மக்கள் - கவிஞர்கள், ஓவியர்கள், சங்கீத கலைஞர்கள் - இவர்கள் அனைவரும் ஆணவம் மிக்கவர்களாக

இருப்பதை நீங்கள் எப்போதும் காணலாம். அவர்கள், மரபு ஒழுக்கத்திற்கு கட்டுப்படாதவர்கள். அவர்கள் வாழ்க்கையை, அவர்கள் வாழ்வார்கள். அவர்கள் வேலையை, அவர்கள் செய்வார்கள். மற்றவர்களைப் பற்றி அவர்கள் கொஞ்சம்கூட கவலைப்பட மாட்டார்கள். மற்றவர்கள் நரகத்திற்குப் போகட்டுமே! அவர்கள், எப்போதும் ஒரு அமைப்பின் ஒரு அங்கமாக இருக்க மாட்டார்கள். அவர்கள், அமைப்புகளில் இருந்து விடுதலை பெற்றுவிடுவார்கள். அவர்களின் செயல், சிங்கத்தின் கர்ஜனை, கண்டிப்பாக ஆணவம் மிக்கதாகத் தான் இருக்கும். அவர்களுக்கு இதில் செல்வதற்கு ஒரு மிகப்பெரிய ஆணவம் தேவைப்படும்.

கீழைநாடுகளில் நீங்கள் அதிக ஒட்டகங்களைக் காண முடியும்; மேலை நாடுகளில் அதிக சிங்கங்களை நீங்கள் காண முடியும். அதனால் தான், கீழை நாட்டவர்களிடம் சரணாகதி என்பது மிகவும் கடினமாகத் தெரிகிறது. ஆனால், ஒரு விஷயத்தை நினைவில் கொள்ள வேண்டும். கீழைநாட்டினரின் மனமானது வெகுசுலபமாக சரணாகதி அடைகிறது. அதனால், அவரது சரணாகதிக்கு அதிக மதிப்பு இருப்பதில்லை. அவர் ஏற்கனவே சரணாகதி அடைந்துள்ளார். முடியாது என்று எப்படிச் சொல்வது என்பது அவருக்குத் தெரியாது. அதனால் தான், அவர் சரி என்று கூறுகிறார். ஆனால், மேலை நாட்டினரின் மனமானது சரணாகதி அடையும் போது, அது கடினமாகிறது. சரணாகதி அடைவதற்கு மேலைநாட்டு மனம் போராடுகிறது. ஆனால், ஒரு மேலைநாட்டு மனம் சரணாகதி அடையும்போது, ஒரு மிகப்பெரிய மாற்றம் இருக்கிறது. ஏனெனில், அந்த சரணாகதி மிகவும் கடினமானதாக, மலை மேல் ஏறுகின்ற செயல் போன்றது. கீழை நாடுகளில் சரணாகதி என்பது மலிவானது. மேலைநாட்டில் அது விலை அதிகமுள்ளது. ஒரு சில தைரியமானவர்களால் மட்டுமே அது முடியும்.

கீழை நாடுகள் சரணாகதி அடைகின்றன. ஏனெனில், அவைகள் சிங்கங்களாக ஆகின்ற சாத்தியங்கள் இல்லை. அது சரணடைவதை மக்கள் கூட்டத்தின் ஒரு பகுதியாக ஆவதை சுலபமானதாகவும், செளகரியமானதாகவும் அது உணர்கிறது. மேலை நாடானது, ஆணவத்தை உருவாக்கிவிட்டது. மேலைநாடுகள் சிங்கம் போன்று இருப்பதில் அதிக கவனம் செலுத்திவிட்டது - சந்தேகம், நம்பிக்கையின்மை, ஆணவம் இவற்றில் கவனம் செலுத்திவிட்டது. அதனால், ஒரு மேலைநாட்டு மனம் சரணாகதி அடையும் போது, அங்கே உண்மையில் மிகப்பெரிய உருமாற்றம் இருக்கும்.

ஆனால், கீழைநாட்டு மனம் சரணாகதி அடைந்தாலும், ஒட்டகமாகவே இருக்கிறது. மேலைநாட்டு மனம் சரணாகதி

அடைந்தால், அங்கே ஒரு 'குழந்தை' பிறப்பதற்கான சாத்தியங்கள் உள்ளன. சிங்கம் சரணாகதி அடையும்போது, அது ஒரு குழந்தையாக ஆகிவிடுகிறது. ஒட்டகம் சரணாகதி அடையும் போது, அது ஒரு ஒட்டகமாகவே இருக்கிறது.

எனவே, நான் கூறுவது உங்களுக்கு முரண்பாடானதாகத் தெரியலாம். ஆனால், நான் கூறுவதை நீங்கள் புரிந்து கொண்டால், உங்களுக்கு அது கடினமானதாக இருக்காது. மேலும் முரண்பாடும், முரண்பாடாகத் தெரியாது. ஒவ்வொரு தனி மனிதனுக்கும், அவன் தனது ஆணவத்தை கைவிடுவதற்கு முன்பு, முதலில் அவன் ஆணவத்துடன் இருப்பதற்கு கற்றுக் கொடுக்கப்பட வேண்டும். ஒவ்வொரு தனி மனிதனும் மிகவும் கெட்டியான ஆணவத்திற்கு வரவேண்டும். அப்போது மட்டுமே, அதை விட்டுவிடுவதால் ஏதாவது உதவி கிடைக்கும்; இல்லையேல் கிடைக்காது.

ஒவ்வொரு தனி மனிதனுக்கும், அவன் தனது ஆணவத்தை கைவிடுவதற்கு முன்பு, முதலில் அவன் ஆணவத்துடன் இருப்பதற்கு கற்றுக் கொடுக்கப்பட வேண்டும். ஒவ்வொரு தனி மனிதனும் மிகவும் கெட்டியான ஆணவத்திற்கு வரவேண்டும். அப்போது மட்டுமே, அதை விட்டுவிடுவதால் ஏதாவது உதவி கிடைக்கும்; இல்லையேல் கிடைக்காது.

முதல் நிலையாகிய ஒட்டகம் போன்ற நிலை, தன்னுணர்வற்ற நிலை. இரண்டாவது நிலையாகிய சிங்கம் போன்ற நிலை, தன்னுணர்வு நிலைக்கு கீழ் உள்ள நிலை. ஆனால், தன்னுணர்வற்ற நிலைக்கு கொஞ்சம் உயர்ந்த நிலை. தன்னுணர்வின் ஒரு சில கண்ணோட்டம் வர ஆரம்பித்திருக்கும். சூரியன் உதித்தவுடன், அதன் சில ஒளிக்கதிர்கள் நீங்கள் தூங்கிக் கொண்டிருக்கும் ஒரு இருட்டு அறையில் நுழைவதைப் போன்றது அது. தன்னுணர்வற்றது அதன்பிறகு, தன்னுணர்வற்றதாக இருக்காது. தன்னுணர்வற்ற நிலையில் ஏதோ ஒன்று புகுந்து கலக்கிவிடும். அது, தன்னுணர்வின் உபநிலை ஆகிவிடும். ஆனால், இந்த மாற்றம் மிகப்பெரியது அல்ல என்பதையும் நினைவில் கொள்ளுங்கள் - இப்படி ஒட்டகத்திலிருந்து சிங்கமாக மாறுவது - அதாவது, நீங்கள் சிங்கத்திலிருந்து ஒரு குழந்தையாக மாறும் போது ஏற்படுகின்ற மாற்றத்தைவிட, இந்த மாற்றம் மிகப்பெரியது கிடையாது. இந்த மாற்றம், ஒருவித பின்னடைவு தான். ஒட்டகம், தனது தலைகீழ் நின்று

கொண்டு சிங்கமாக ஆகிறது. ஒட்டகம் 'முடியாது' என்கிறது; சிங்கம் 'சரி' என்கிறது. ஒட்டகம் கீழ்ப்படிகிறது; சிங்கம் கீழ்ப்படியாது. ஒட்டகம் நேர்மறையானது; சிங்கம் எதிர்மறையானது. மேலும், ஒட்டகமானது 'முடியாது' என்று சொல்ல மறுத்து, 'ஆம்' என்பதை அளவுக்கு அதிகமாக சொல்லிவிடுவதால், அந்த 'முடியாது' என்பது அதனுள் அதிகமாக சேர்ந்துவிடுவதால், ஒரு கட்டத்தில் இந்த 'முடியாது' என்பது, அந்த 'ஆம்' என்பதன் மீது பழிவாங்க விரும்பும் என்பதையும் நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். அதன்பிறகு, சக்கரம் முழுமையாகத் திரும்பிவிடும். அதாவது, அந்த ஒட்டகம் தலைகீழாக மாறி, அது ஒரு சிங்கமாக மாறிவிடும்.

ஒட்டகத்திற்கும், சிங்கத்திற்கும் இடையிலான வித்தியாசம் மிகப் பெரியது. ஆனால், இரண்டும் ஒரே தளத்தில் தான் இருக்கின்றன. புழுக்கூடு ஒரே இடத்தில் தான் நிலையாக இருக்கும்; கம்பளிப்பூச்சி நகர்ந்து செல்ல ஆரம்பிக்கும். ஆனால், இரண்டும் ஒரே பூமியில் தான் இருக்கும். நகர்ந்து செல்வது பிறந்திருக்கும், ஆனால் தளம் அதே தளம் தான். முதல் விஷயம், உங்களுக்கு இந்த சமூகத்தினால் கொடுக்கப்படுகிறது; நீங்கள் ஒட்டகமாக இருப்பது இந்த சமூகத்தின் பரிசு. ஆனால், நீங்கள் சிங்கமாக ஆவது, நீங்களே உங்களுக்கு கொடுக்கின்ற பரிசாக இருக்கும். நீங்கள் உங்களை நேசிக்காதவரையில், உங்களால் அதை செய்ய முடியாது. நீங்கள் ஒரு தனிமனிதராக ஆவதற்கு விரும்பாத வரையில், உங்களது சுய உரிமையுடன் தனித்துவம் வாய்ந்தவராக ஆகாத வரையில், ஒட்டகத்திற்கு எதிராக நீந்திச் செல்கின்ற அந்த ஆபத்தை நீங்கள் எடுக்காத வரையில், நீங்கள் ஒரு சிங்கமாக ஆக முடியாது.

ஆனால், நீங்கள் இந்த இயந்திர நுட்பத்தைப் புரிந்து கொண்டால் ... .... ஒட்டகத்தின் உள்ளத்திலேயே சிங்கம் என்பது உருவாகிறது. மீண்டும் மீண்டும் 'சரி' என்று சொல்லிக் கொண்டு, 'முடியாது' என்று சொல்லி மறுப்பதன் மூலம், அந்த 'முடியாது' என்பது உங்களுக்குள் சேர்ந்து கொண்டே போகிறது. மேலும், இப்படி எப்போதும் 'சரி' என்றே சொல்லிக் கொண்டிருப்பது அலுத்துப் போய், ஒருவர் என்றாவது ஒருநாள் வெறுமனே ஒரு மாற்றத்திற்காக 'முடியாது' என்று கூற விரும்புவார். ஒருவர் நேர்மறையாக இருந்தே அலுத்துப் போய்விடுவார்; அந்த ருசியானது ஒரே மாதிரியானதாக இருக்கும். எனவே, ஒருவர் வெறுமனே மாற்றத்தை விரும்பி 'முடியாது' என்பதை ருசி பார்க்க விரும்புவார்.

அப்படித்தான், முதல் முதலாக ஒட்டகமானது ஒரு சிங்கம் ஆவதற்காக கனவு காண ஆரம்பிக்கிறது. மேலும், நீங்கள் ஒருமுறை

இந்த 'முடியாது' என்பதை, சந்தேகத்தை, நம்பிக்கையில்லாமையை ருசித்துப் பார்த்துவிட்டால், அதன் பிறகு நீங்கள் மீண்டும் ஒரு ஒட்டகமாக ஆக முடியாது. ஏனெனில், அது உங்களுக்கு அந்த அளவுக்கு விடுதலையையும், சுதந்திரத்தையும் கொண்டு வந்துவிடும்.

பெரும்பாலானவர்கள், இந்த ஒட்டகம் போன்ற நிலையிலேயே தேங்கி நின்றுவிடுகிறார்கள். சிறுபான்மையானவர்கள் தான் சிங்கம் போன்ற நிலையில் தேங்கி நிற்கிறார்கள். பெரும்பான்மை என்றால், இந்த மக்கள் கூட்டம் என்று அர்த்தம். சிறுபான்மை என்றால், அறிவு ஜீவிகள் என்று அர்த்தம். கலைஞர்கள், கவிஞர்கள், ஓவியர், சங்கீதமேதை, சிந்தனாவாதி, தத்துவமேதை, புரட்சியாளர்கள் - ஆகிய இவர்கள் தான் இரண்டாவது நிலையில் தேக்கமடைந்து நிற்கிறார்கள். அவர்கள் இன்னமும் தங்களது வீட்டதனை சென்றடையவில்லை. மூன்றாவது நிலை 'ஒரு குழந்தை' போன்ற நிலை.

இதை கவனமாகக் கேளுங்கள் : முதல் நிலை, உங்களுக்கு இந்த சமுதாயத்தால் கொடுக்கப்படுகிறது. இரண்டாவது நிலை, தனி மனிதர்களால் அவர்களாலேயே அவர்களுக்கு கொடுக்கப்படுவது. மூன்றாவது நிலையானது, அந்த கம்பளிப்புழுவானது வண்ணத்துப்பூச்சி நிலைக்கு நெருங்கி வந்தால் மட்டுமே சாத்தியப்படும். இல்லையென்றால், அது சாத்தியப்படாது. ஒரு கம்பளிப்புழு, தானே சுயமாக பறப்பது என்றும், அதுவும் ஒரு இறக்கை முளைத்த ஒன்றாக ஆக முடியும் என்றும் எப்படி நினைக்க முடியும்? அது சாத்தியப்படாது! அப்படி சிந்திப்பது சாத்தியப்படாது! அது முட்டாள்தனமானது, தர்க்கவாதமற்றது. கம்பளிப்புழுவுக்கு நகர்ந்து செல்லத் தான் தெரியும். ஆனால், அது வெறுமனே பறக்க முடியும் என்பது முட்டாள் தனமானதாகத் தெரியும்.

வண்ணத்துப்பூச்சிகள், கம்பளிப் பூச்சிகளிடம் அவைகளால் பறக்க முடியும் என்று கற்றுக் கொடுப்பதையும், அதற்கு மறுப்பு தெரிவித்து, அவைகள், "முடியாது, அது உனக்கு வேண்டுமானால் சாத்தியப்படலாம். ஆனால், எங்களுக்கு அது சாத்தியமாகாது. நீ ஒரு வண்ணத்துப் பூச்சி. நாங்களோ ஒரு கம்பளிப்புழு! எங்களுக்கு ஊர்ந்து செல்ல மட்டுமே தெரியும்," என்று கம்பளிப்புழுக்கள் கூறுவதையும் நான் கேள்விப் பட்டிருக்கிறேன். ஊர்ந்து செல்கின்ற ஒருவர் எப்படி பறந்து செல்பவராக கற்பனை செய்ய முடியும்? பறப்பது என்பத ஒரு வேறுபட்ட பரிமாணம், முற்றிலும் வேறுபட்ட பரிமாணம் - அது செங்குத்துவசத்தில் செல்வது.

ஒட்டகத்திலிருந்து சிங்கமாக ஆவது, அது பரிணாம வளர்ச்சி. ஆனால், சிங்கத்திலிருந்து குழந்தையாக மாறுவது, அது ஒரு புரட்சி. இந்த நிலைக்கு ஒரு குரு தேவை. இந்த சமுதாயம், உங்களை ஒரு

ஒட்டகமாக ஆக்கும். நீங்களே, உங்களை ஒரு சிங்கமாக ஆக்கிவிடலாம். ஆனால், நீங்கள் வண்ணத்துப்பூச்சிகளாக பறப்பதற்கு ஒரு புத்தர், ஒரு கிறிஸ்து, ஒரு ரூமி போன்ற ஒரு குரு, அதாவது சிறகுகள் உடைய ஒரு வண்ணத்துப்பூச்சி தேவை. சிறகு முளைத்த ஒன்றுடன் நீங்கள் சேர்ந்தால் மட்டுமே, உங்களால் சிறகுகளைப் பற்றி கனவு காண முடியும். உங்களுக்குத் தெரியாத ஒன்றினைப் பற்றி நீங்கள் எப்படி கனவு காண முடியும்? இமய மலையில் வாழ்கின்ற பழங்குடி மக்கள் ஒரு மோட்டர் வாகனத்தைப் பற்றி கனவு காண முடியும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அவர்கள் ஒரு மோட்டர் வாகனத்தைப் பார்த்ததில்லை. எனவே, அவர்களால் அதைப் பற்றி கனவு காண முடியாது. நீங்கள் ஏதாவது ஒன்றினைப் பார்த்தால் மட்டுமே, அதைப் பற்றிய கனவு உங்களுக்கு சாத்தியப்படும். நீங்கள் ஒரு கிறிஸ்துவையோ, அல்லது ஒரு புத்தரையோ அல்லது ஒரு போதி தர்ரையோ பார்க்கும் போது தான், உங்களால் இப்படியும் நிகழ முடியும் என்பதை அறிந்து கொள்ள முடியும். மேலும், இந்த மக்கள் வெறுமனே உங்களைப் போன்றே இருப்பார்கள். அவர்களுக்கு அதே உடல், அதே அமைப்பு தான் இருக்கும், என்றாலும்கூட, நாம் அறியாத ஒன்றிலிருந்து ஏதோ ஒன்று அவர்களின் ஆன்மாவை ஊடுருவி இருக்கும். எல்லாவற்றையும் கடந்து உள்ள ஒன்று அவர்களுக்குள் வந்திருக்கும். அங்கே, அந்த கடந்து உள்ள ஒன்றினை மிக மிக அருகில் காணலாம். நீங்கள், அவர்களை இரக்கத்துடனும், அன்புடனும் அணுகினால், அவர்களின் உள் வானத்தின் ஒரு சில கண்ணோட்டங்களை நீங்கள் காணலாம். மேலும், அப்படி நீங்கள் அந்த உள் வானத்தைப் பார்த்துவிட்டால், அதன் பிறகு அதைப்பற்றி கனவு காண ஆரம்பித்துவிடுவீர்கள். உங்களுக்குள் ஒரு மிகப்பெரிய ஏக்கம் எழுந்துவிடும். ........ எப்படி சிறகுகள் பெற்றவர்களாக ஆக முடியும்? என்று ஏக்கம் வந்துவிடும்.

அது தான், குருவிடம் இருந்து சீடனுக்கு வருகின்ற நோய்த் தொற்று. எனவே, இந்த மூன்றாவது விஷயம் குருவின் மூலமாகத் தான் நடக்கிறது. 'குழந்தை' என்றால் படைப்பாற்றல், சுதந்திரம் என்று அர்த்தம்.

முதல் நிலையாக, ஒட்டகத்தில் பிறரைச் சார்ந்து இருப்பது இருந்தது. இரண்டாவது நிலை, சுதந்திரம். ஆனால், கள்ளம் கபடமற்ற நிலையில் அதனை அங்கே எதையும் சார்ந்து இருப்பதும் இல்லை. அதே சமயம், அங்கே சுதந்திரமும் இல்லை என்பதை ஒருவர் அறிந்து கொள்வார். இயற்கை என்பது ஒன்றை ஒன்று சார்ந்து இருப்பது - எல்லாமே, அடுத்துள்ள ஒன்றுடன் சார்புடையது. அது, எல்லாம் ஒன்றானது.

முழுமை என்னும் உணர்வு அங்கே பிறக்கும். அங்கே 'நான்' என்பதும் இருக்காது. 'அது' என்பதும் இருக்காது. 'ஆம்' அல்லது 'இல்லை' என்பதோடு, நிலையாக இருக்கின்ற ஒரு நிலை இருக்காது. 'ஆம்' என்று சொல்வதற்கான அதீத ஆசையோ அல்லது எப்போதுமே 'முடியாது' என்று சொல்வதற்கான ஆசையோ இருக்காது. அங்கே ஒரு வழிந்தோடும் தன்மை, சூழ்நிலைக்கு தக்கவாறு தானாக நடந்து கொள்கின்ற தன்மை உண்டாகிவிடும். அங்கே, கீழ்படிதலோ அல்லது கீழ்ப்படியாமையோ இருக்காது. ஆனால், அங்கே எல்லாமே தானாகவே நிகழ்வதாக இருக்கும். அங்கே பொறுப்பு பிறந்துவிடும். ஒருவர், அப்போதுள்ள இயல்பான இயற்கை நிலைக்கு, பதில் செயல் ஆற்றுவார். அவர், தனது கடந்த கால அனுபவங்களில் இருந்தோ அல்லது தனது எதிர்கால கனவுகளின் மூலமோ எதிர்ச்செயல் புரிய மாட்டார்.

ஒரு ஒட்டகம், கடந்த காலத்தில் வாழ்கிறது. ஒரு சிங்கம், எதிர்காலத்தில் வாழ்கிறது. ஒரு குழந்தை நிகழ்காலத்தில், இங்கேயே இந்த நொடிப்பொழுதில் வாழ்கிறது. ஒட்டகம் என்பது, மனம் உருவாகுவதற்கு முன்புள்ள நிலை. சிங்கம் என்பது, மனம் என்பதுடன் இருக்கும் நிலை. குழந்தை என்பது, மனதைத் தாண்டி இருக்கும் நிலை. ஒட்டகம் என்பது, ஆன்மாவிற்கு முந்தைய நிலை. சிங்கம் என்பது ஆன்மநிலை. குழந்தை என்பது ஆன்மாவிற்கு பிறகு உள்ள நிலை. அதற்குத் தான், மனம் என்பது இல்லாமல் இருக்கும் நிலை என்று அர்த்தமாகும். சூபிக்கள் அதை 'ஃபானா,' அதாவது, ஆணவம் போய்விட்ட நிலை, அடுத்தவர் என்பதும்கூட போய்விட்ட நிலை என்கின்றனர். அவைகள் இரண்டும் ஒன்றானவை. நீங்கள், ஒன்றில்லாமல் மற்றொன்றை வைத்திருக்க முடியாது. நான் - அது என்பது ஒரே சக்தியின் பாகங்கள். அவை இரண்டும் மறைந்துவிடும்.

ஒரு குழந்தை வெறுமனே இருக்கிறது. விவரிக்க முடியாததொரு புதிராக, ஒரு அற்புதமாக அது இருக்கிறது. ஒட்டகத்திற்கு நினைவாற்றல் உள்ளது. சிங்கத்திற்கு அறிவாற்றல் உள்ளது. மேலும், குழந்தைக்கு ஞானம் உள்ளது. ஒட்டகம் என்பது, ஒன்று கிறிஸ்தவனாகவோ அல்லது இந்துவாகவோ அல்லது முகமதியராகவோ, ஒரு ஆத்திகராக உள்ளது. ஆனால், சிங்கம் நாத்திகராக இருக்கும். ஆனால், ஒரு குழந்தை சமய நெறியுள்ளதாக, ஆனால் ஆத்திகனும் அல்லாமல், நாத்திகனும் அல்லாமல், இந்துவாக்வும் இல்லாமல், முகமதியராகவும் இல்லாமல், கம்யூனிஸ்டாகவும் இல்லாமல், கிறிஸ்தவனாகவும் இல்லாமல், வெறுமனே எளிமையான சமய நெறியுடன், அன்பு மற்றும் வெள்ளை உள்ளம் ஆகிய குணங்களுடன் இருக்கும்.

ஆதாம், பழத்தைத் தின்றவுடன் சிங்கம் ஆகிவிட்டார். அறிவு மரத்தின் பழத்தைச் சாப்பிடுவதற்கு முன்பு, ஆதாம் ஒட்டகமாக இருந்தார். மேலும், ஆதாம் அந்தப் பழத்தை மீண்டும் வாந்தி எடுத்துவிட்ட பின்னர், தனது அறிவை விட்டுவிட்ட பின்னர், அவன் குழந்தையாக இருக்கிறான். அந்தக் குழந்தைக்குத் தான் கிறிஸ்து என்று அர்த்தம். கிறிஸ்து மீண்டும் மீண்டும் தனது சீடர்களிடம், "மனம் திரும்புங்கள்!" என்று கூறுகிறார். 'REPENT' என்கிற அந்த ஹீப்ரு வார்த்தைக்கு திரும்பி வருதல், மீண்டும் திரும்பிப் போதல் என்று அர்த்தம். ஏதேன் தோட்டம் உங்களுக்காக இன்னமும் காத்துக் கொண்டிருக்கிறது. அறிவு என்னும் இந்த ஆப்பிளை நீங்கள் வாந்தி எடுத்துவிட்டால், அதன் பிறகு அந்த தோட்டத்தின் கதவுகள் உங்களுக்காக திறக்கும்.

ஒட்டகம் என்பது ஆதாம், பழத்தை சாப்பிடுவதற்கு முன்பு இருந்த நிலை. சிங்கம் என்பது ஆதாம், பழத்தை சாப்பிட்ட பிறகு உள்ள நிலை. மேலும், குழந்தை என்பது ஆதாம், கிறிஸ்துவாக ஆகின்ற நிலை. தனது வீட்டிற்கு திரும்பவும் வருகின்ற நிலை. புத்தர் இதை 'நிர்வாணம்' என்று அழைக்கிறார்; இயேசு இதை தேவனுடைய ராஜ்ஜியம் என்று அழைக்கிறார். நீங்கள் விரும்புகின்ற எதுவாகவும் அதை அழைத்துக் கொள்ளலாம். தாவோ, தம்மா, மோட்சம் இப்படி எதுவாக வேண்டமானாலும் அழைத்துக் கொள்ளலாம். அங்கே வார்த்தைகளுக்கு அதிக அர்த்தம் கிடையாது; அங்கிருப்பது ஒரு வார்த்தைகளற்ற மௌனம், எண்ணங்களற்றதொரு வெள்ளை உள்ளம்.

## அன்பிலிருந்து அன்புடைமைக்கு

அன்பு என்னும் வார்த்தைக்கு, இரண்டு முற்றிலும் வேறுபட்ட அர்த்தங்கள். வேறுபட்டு மட்டும் இல்லாமல், எதிர் எதிரான அர்த்தங்கள் கொள்ள முடியும். ஒரு அர்த்தமானது, அன்பு என்பதை ஒரு உறவாக எடுத்துக் கொள்வது. மற்றொரு அர்த்தம், அன்பு என்பதை ஒரு இருப்பு நிலையாக எடுத்துக் கொள்வது. அன்பு என்பது ஒரு உறவாக ஆகிவிடுகின்ற அந்த நொடிப் பொழுதிலேயே, அது ஒரு அடிமைத் தளையாக ஆகிவிடுகிறது. ஏனெனில், அங்கே எதிர்பார்ப்புகள் வந்துவிடுகின்றன. மேலும், அங்கே கேட்புகளும், விரக்திகளும், இரண்டு பக்கங்களிலும் ஒருவரை ஒருவர் ஆதிக்கம் செலுத்துவதற்கான முயற்சியும் வந்து விடுகிறது. அங்கே, அதிகாரத்திற்கான போராட்டம் வந்துவிடுகிறது.உறவு என்பது, சரியான விஷயமாக இருக்காது. ஆனால் அன்பு என்பது, நாம் இருக்கின்ற நிலையாக ஆகிவிடும் போது,

அது முற்றிலும் வேறுபட்டதாக இருக்கிறது. அதற்கு, நீங்கள் வெறுமனே அன்பு செலுத்துகிறீர்கள் என்று அர்த்தம். அதன் மூலம், நீங்கள் ஒரு உறவை உருவாக்கவில்லை என்று அர்த்தம். உங்களது அன்பானது, வெறுமனே ஒரு மலரின் நறுமணம் போன்று இருக்கும். அது, எந்த ஒரு உறவையும் உருவாக்குவதில்லை. அது, உங்களை ஒரு குறிப்பிட்ட விதத்தில் இருக்கும்படி கேட்பதில்லை. ஒரு குறிப்பிட்ட விதத்தில் நடந்து கொள்ளும்படி, ஒரு குறிப்பிட்ட வழியில் செயலாற்றும்படி கேட்பதில்லை. அது, எதையுமே கேட்பதில்லை. அது, வெறுமனே பகிர்ந்து கொள்ள மட்டுமே செய்கிறது. மேலும், அப்படிப் பகிர்ந்து கொள்வதிலும்கூட, அங்கே எந்த ஒரு வெகுமதிக்கான ஆசையும் இருக்காது. அப்படிப் பகிர்ந்து கொள்வதே அதனளவில் வெகுமதியாக ஆகிவிடும்.

அன்பு என்பது, உங்களுக்கு ஒரு நறுமணமாக ஆகிவிடும் போது, அதற்கு அபரிமிதமான அழகு வந்துவிடும். அப்போது அது, இந்த மனிதகுணம் என்று அழைக்கப்படுவதற்கு மேலாக, தெய்வீகமான ஏதோ ஒன்றினை கொண்டிருக்கும்.

அன்பு என்பது, ஒரு இருப்பு நிலையாக இருக்கும்போது, நீங்கள் எதுவும் செய்ய முடியாது. அது, கதிர்வீச்சு போன்று வெளிப்படும். ஆனால், அது யாருக்கும் சிறைவாசம் போன்றும் இருப்பதும் இல்லை அல்லது வேறு யாராவது உங்களை சிறைப்படுத்துவதற்கும் அது அனுமதிப்பதில்லை.

ஆனால் நீங்களோ, உங்களது குழந்தைப் பருவத்திலிருந்து அன்பு என்பதன் மூலம் உறவுகளை உருவாக்குவதில் தான் பழக்கப்பட்டு இருக்கிறீர்கள். அந்நியர் ஒருவர் இருக்கலாம், அவரோடு நீங்கள் உங்களது தந்தை போன்றதொரு உறவை நீங்கள் உருவாக்க வேண்டியதிருக்கும். அவர் உண்மையிலேயே உங்களது தந்தை தான் என்று நீங்கள் ஒரு போதும் நிச்சயத்துடன் இருக்க முடியாது.

மக்களின் கைரேகைகளைப் பார்த்துச் சொல்வதை வழக்கமாக கொண்ட ஒரு கைரேகை நிபுணரைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஒரு நாத்திகன், கடவுளை நம்பாதவன், மேலும் இந்த கைரேகை, ஜோதிடம் இப்படிப்பட்ட அசிங்கங்களை நம்பாத ஒருவன், அந்த கைரேகை நிபுணரிடம் போய், அவரிடம், "உங்களது கைரேகை விஞ்ஞானம் உண்மையெனில், எனது கைகளைப் பார்த்துவிட்டு, இப்போது எனது தந்தை எங்கு இருக்கிறார் என்று கூறமுடியுமா?" என்று கேட்டான்.

அந்த கைரேகை நிபுணர், அவனது கைகளைப் பார்த்துவிட்டு, "உனது தந்தை மீன் பிடிக்கச் சென்றுள்ளார்," என்றார். அந்த நாத்திகன் சிரித்தான். உடனே அவன், "இதற்காகத் தான் நான்.கூறுகிறேன், இந்த கைரேகை என்பது எல்லாம் முட்டாள்தனமானது. எனது தந்தை இறந்து போய் மூன்று வருடமாகிறது; அவர் எப்படி இன்று மீன் பிடிக்கச் செல்ல முடியும்?" என்றான்.

ஆனால், அதற்கு அந்த கைரேகை நிபுணர், "அது எனது வேலை அல்ல. ஆனால், உண்மை என்னவென்றால், இறந்து போன அந்த ஆள் உனது தந்தை கிடையாது. உன்னுடைய உண்மையான தந்தை, மீன் பிடித்துக் கொண்டுதான் இருக்கிறார். நீ, உனது தாயாரிடம் போய்க் கேள். அவள் ஒழுக்கமானவளாகவும், நேர்மையானவளாகவும் இருந்தால், இறந்து போன அந்த மனிதன் உன்னுடைய அப்பா அல்ல என்று கூறுவாள். அவர் தான் உனது தந்தை என்று கூறப்பட்டதால், நீ அந்த உறவை உருவாக்கிக் கொண்டிருந்தாலும்கூட, அவர் உனது தந்தை அல்ல என்று கூறுவார்," என்று கூறினார்.

உங்களது வாழ்க்கை முழுவதும், அநேகவிதமான உ றவுகளால் சூழப்பட்டுள்ளது. மேலும், அந்த உறவுகள் அதனளவில் அது உண்மையானதோ அல்லது கற்பனையானதோ, அவைகள் கண்களுக்குப் புலப்படாத வகையில், மனதளவில் அடிமைத்தனத்தை உருவாக்கி விடுகிறது. ஒன்று, நீங்கள் அடுத்தவரை அடிமைப் படுத்துகிறீர்கள் அல்லது நீங்கள் அவருக்கு அடிமையாகிவிடுகிறீர்கள்.

இன்னொரு விஷயம் என்னவென்றால், நீங்கள் ஒருவருக்கு அடிமையாகாமல், யாரையும் நீங்கள் உங்களுக்கு அடிமையாக்க முடியாது. அடிமைத்தனம் என்பது இரண்டு பக்கமும் கூர்தீட்டப்பட்ட வாள். ஒருவர் பலம் மிக்கவராக இருக்கலாம், அடுத்தவர் பலம் குன்றியவராக இருக்கலாம். ஆனால், ஒவ்வொரு உறவிலும் நீங்கள் சிறை அதிகாரியாகவும், அடுத்துவர் சிறைக் கைதியாகவும் ஆகிவிடுகிறீர்கள். அதே போன்று, அவரது பக்கத்தில் இருந்து பார்த்தால், அவர் சிறை அதிகாரியாகவும், நீங்கள் சிறைக் கைதியாகவும் ஆகிவிடுகிறீர்கள். மேலும், இந்த மனித இனம் இது போன்ற துன்பத்திலும், இது போன்ற துக்ககரமான நிலையிலும் வாழ்வதற்கான அடிப்படை காரணங்கில் இதுவும் ஒன்று.

மேலும், ஒருவர் மீது வெறுப்பு கொள்வது, நீங்கள் அவர் மீது அன்பு செலுத்துவதைவிட இன்னும் பலமானதொரு உறவாக ஆகிவிடுகிறது. ஏனெனில், நீங்கள் செலுத்தும் அன்பு மேலோட்டமானது தான். உங்களது வெறுப்பு மிகவும் ஆழமானது.

உங்களது வெறுப்பு என்பது, உங்களது முழு மிருக பாரம்பரியமும் நிறைந்தது. உங்களது அன்பானது, எதிர்காலத்தில் சாத்தியப்படுகின்ற ஒரு தன்மையாக மட்டுமே இருக்கிறது. அது உண்மையில் அங்கு இல்லை. ஆனால், அது ஒரு விதை போன்று மட்டுமே உள்ளது. ஆனால், உங்களது வெறுப்போ, முழுமையானது, முழுமையாக வளர்ச்சி பெற்றது. ஆயிரமாயிரம் கடந்த காலங்களில் நீங்கள் வெவ்வேறு உயிரின் வடிவங்களில் சுற்றித் திரிந்ததால் முழுமையாக வளர்ச்சி பெற்றுள்ளது. உங்களது வெறுப்பு வளர்வதற்கான காலமும், இடமும் உள்ளது. மனிதனிடம் மட்டுமே அந்த மாற்றம் நிகழ ஆரம்பிக்கிறது.

ஆனால், வேறு யாராவது என்னை வெறுப்பதை நான் தடுத்து நிறுத்த முடியாது. எனவே, யாரும் என்னை நேசிப்பதையும் நான் எப்படி தடுத்து நிறுத்த முடியும்? உங்களுக்கு விளக்குவதற்கு என்னனல் செய்ய முடிவதெல்லாம், அது அன்பாக இருந்தாலும் அல்லது வெறுப்பு அல்லது எதுவாக இருந்தாலும் சரி, அது ஒரு உறவாக ஆகிவிட்ட அந்த நொடிப் பொழுதிலேயே அது தனது தூய்மையை இழந்துவிடுகிறது என்பது தான்.

உங்களது அன்பானது, நீங்கள் இருக்கின்றதொரு நிலையாக இருக்கட்டும். நீங்கள் காதலில் விழ வேண்டும் என்பதல்ல, ஆனால் நீங்கள் வெறுமனே அன்புடையவர்களாக இருக்கலாம். அது வெறுமனே உங்களது இயல்பாகும்.

உங்களது அன்பு, நீங்கள் இருக்கின்றதொரு நிலையாக இருக்கட்டும். நீங்கள் காதலில் விழ வேண்டும் என்பதல்ல, ஆனால் நீங்கள் வெறுமனே அன்புடையவர்களாக இருக்கலாம். அது வெறுமனே உங்களது இயல்பாகும். அன்பு என்பது, உங்களுக்கு உங்களின் இருப்பு நிலையில் வீசுகின்றதொரு நறுமணமாகத் தான் இருக்கும். நீங்கள் தனிமையில் இருந்தாலும் கூட, நீங்கள் அன்பெ்பனும் சக்தியால் சூழப்பட்டு இருப்பீர்கள். நீங்கள் ஒரு உயிரற்ற பொருளைத் தொட்டாலும்கூட, ஒரு நாற்காலியைப் போன்ற பொருளைத் தொட்டாலும்கூட, உங்களது கைகள் அன்பு மழை பொழியும். நீங்கள் அன்பு செலுத்துவது யார் அல்லது எது அல்லது என்ன என்பது ஒரு பொருட்டல்ல. அந்த அன்புடைமை என்னும் நிலை யாருக்கும் விலாசமிடப்படாதது.

அதற்காக நீங்கள் அன்பு செலுத்தும் நிலையில் இருக்கக் கூடாது என்று நான் அறிவுறுத்தவில்லை. ஆனால், நீங்கள் உங்களது

உறவுமுறைகளை உருவாக்கிக் கொள்கின்ற அந்த பழைய மன அமைப்பினை விட்டுவிட்டால் மட்டுமே உங்களால் அன்புடைமை என்னும் நிலையில் இருக்க முடியும் என்கிறேன். அன்புடைமை என்பது ஒரு உறவல்ல.

இரண்டு மனிதர்கள் மிகவும் அன்புடன் சேர்ந்து இருக்கலாம். ஆனால், எந்த அளவுக்கு அவர்கள் அதிக அன்புட.ன் இருக்கிறார்களோ, அந்த அளவுக்கு அவர்களிடம் உறவு குறைவாக இருப்பதற்கான சாத்தியம் உள்ளது. அதிகமாக அவர்கள் அன்பு செலுத்தினால், அவர்களுக்கு இடையே அதிக சுதந்திரம் இருக்கும். அவர்கள் அதிக அன்பு செலுத்தினால், அவர்களிடையே ஆதிக்கம் செலுத்துவதற்கும், எதையும் கேட்பதற்கும், எதையும் எதிர்பார்ப்பதற்குமான சாத்தியங்கள் மிகவும் குறைவாகத் தான் இருக்கும். மேலும், இயற்கையாகவே அங்கே விரக்தி என்கிற கேள்விக்கே இடமிருக்காது.

இரண்டு பேர் உறவு கொண்டாடிக் கொண்டிருக்கும் போது, அவர்களின் எதிர்பார்ப்புகள் நிறைவேறாத பொழுது - மேலும், அவை ஒரு போதும் நிறைவேறப் போவதில்லை - அவர்களது அன்பானது, அதன்பிறகு வெறுப்பாக மாறிவிடுகிறது. முன்பு எதிர்பார்ப்புகள் இருந்தன; இப்போது விரக்தி இருக்கிறது. முதலில் அவர்கள் தங்களின் எதிர்பார்ப்புகளை அவர்களிடம் நீட்டித்து வந்தனர். இப்போது அவர்கள் தங்களின் விரக்தியை நீட்டிப்பு செய்கின்றனர். அவர்களில் யார் ஒருவராலும் தாங்கள், தங்களின் சுய தன்னுணர்வில்லாத எண்ணங்களால் தான் சூழப்பட்டு இருக்கிறோம் என்பதைக் கண்டு கொள்ள முடியாது. அதனால், அவர்கள் கஷ்டப்படத் தான் செய்வார்கள்.

மேலும், அவர்கள் காதலை அடுத்தவர் மீது கற்பனை செய்து வந்த போது, அவர்கள் அடுத்தவர்களை பாராட்டினார்கள். அடுத்தவரைப் பற்றி முழுமையாக அறியாமலேயே பாராட்டினார்கள். இப்போது அவர்கள், அடுத்தவரை கண்டனம் செய்கிறார்கள். அதனால் தான் நீங்கள் எந்த எதிர்பார்ப்புகளையும் வைக்காதீர்கள் என்று உங்களுக்கு நினைவூட்ட விரும்புகிறேன். அன்பு செலுத்துங்கள். ஏனெனில், அன்பு செலுத்துவது உங்களது சொந்த அக வளர்ச்சிக்காகத் தான். நீங்கள் அதிக ஒளியை நோக்கி, அதிக உண்மையை நோக்கி, அதிக சுதந்திரத்தை நோக்கி வளர்வதற்கு உதவிடத் தான் உங்களது அன்புடைமை இருக்க வேண்டும். ஆனால், எந்த ஒரு உறவையும் உருவாக்காதீர்கள்.

ஒரே ஒரு விஷயத்தை மட்டும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். அன்பிற்கு மற்ற எல்லாவற்றையும் அழிக்கின்ற திறன் உண்டு. எனவே, வெறுமனே அதை ஒரு உறவாக ஆக்கிவிட

விட்டுவிடாதீர்கள். அதன் பிறகு, அன்பு மறைந்துவிடும். மேலும், அன்பு என்னும் பெயரில் ஆதிக்கம் செலுத்துதல், அரசியல் செய்தல் ஆகியவை தான் இடம் பெறும். அதன்பிறகு, பிரச்சனைகள் அதிகமாகிக் கொண்டே போகும்.

எல்லாவிதமான உறவுகளுக்கும் நான் எதிரானவன். உதாரணமாக, நான் 'நட்பு' என்கிற வார்த்தையை விரும்புவதில்லை. ஆனால், நான் 'நட்புடைமை' என்கிற வார்த்தையை விரும்புகிறேன். நட்புடைமை என்பது, உங்களிடம் உள்ள ஒரு குணாதிசயம். நட்பு என்பது, மீண்டும் ஒரு உறவாக ஆகிவிடுகிறது.

எனவே, அன்பு என்பதில் எந்தத் தவறும் இல்லை. உண்மையில், அன்பு இல்லையென்றால், எல்லாமே தவறு தான். மேலும், அன்பு என்பது மிகவும் விலை மதிக்க முடியாத ஒன்றாக இருப்பதால், அது எந்த ஒருவகையான மாசினாலும், எந்த வகையான கெடுதல்களாலும், எந்த வகையான விஷத்தினாலும் பாதிக்கப்படாமல் பாதுகாக்கப்பட வேண்டும். உறவுகள் அதை விஷமாக்கிவிடும். இந்த உலகம் தனி மனிதர்களால் நிறைந்திருப்பதைத் தான் நான் விரும்புகிறேன். 'ஜோடி' என்கிற அந்த வார்த்தையை உபயோகிப்பதும் கூட, என்னைக் காயப்படுத்துகிறது. நீங்கள் இரண்டு தனி மனிதர்களை அழித்துவிடுகிறீர்கள். மேலும், ஜோடி என்பது ஒரு அழகான விஷயம் அல்ல.

இந்த உலகம் தனி மனிதர்களால் மட்டுமே இருக்கட்டும். அதில் அன்பு தானாகவே மலரும்போது அதைப் பாடுங்கள், அதை ஆடுங்கள், அதை வாழ்ந்து பாருங்கள். ஆனால், அதன் மூலம் அடிமைச் சங்கிலிகளை உருவாக்கி விடாதீர்கள். யாரையும் உங்களத அடிமைத்தளையில் பிடித்து வைத்தக் கொள்ள முயற்சி செய்யாதீர்கள். அல்லது, உங்களையும் யாரும் அடிமைத் தளையில் பிடித்து வைத்துக் கொள்ள அனுமதிக்காதீர்கள்.

சுதந்திரமான தனி மனிதர்களைக் கொண்ட ஒரு உலகம் மட்டுமே உண்மையான ஒரு உலகமாக இருக்க முடியும்.

தனக்கு ஒருவர் தேவை என்பது மனிதனின் ஒரு மிகப்பெரிய தேவையாக இருக்கிறது. எனவே, அன்பு என்பது இல்லாமல் போகின்ற அந்த நேரத்தை என்னால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. இந்த மனித உயிர்கள் இருக்கும் காலம்வரை, அன்பு என்பது அவர்களின் நம்பிக்கையை வளர்த்து ஆளாக்குகின்ற ஒரு அனுபவமாக இருக்கும். அது இந்த பூமியில் கிடைக்கின்ற ஒன்று. ஆனால், இந்த பூமிக்குச் சொந்தமில்லாத ஒன்று. அது உங்களுக்கு இந்த சூரியனின் குறுக்கே பறந்து செல்வதற்கான சிறகுகளைக் கொடுக்கும்

உங்களிடம் அன்பு இல்லையென்றால், நீங்கள் சிறகுகள் இல்லாதவர். எனவே, இப்படி அந்த அன்பு என்பது மிகவும் ஊட்டமளிப்பதாகவும், மிகவும் தேவையானதாகவும் இருப்பதால், அதைச் சுற்றி எல்லாப் பிரச்சனைகளும் எழுந்துவிட்டன. நீங்கள், உங்களது காதலனோ அல்லது காதலியோ நாளைக்கும்கூட உங்களுக்குக் கிடைக்க வேண்டும் என்று விரும்புகிறீர்கள். அதனால் தான், திருமணம் என்பது வந்துவிட்டது. ஒருவேளை, நமது காதலனோ அல்லது காதலியோ நாளை நம்மை விட்டுவிட்டு போய்விடுவார்களோ என்கிற பயம் வந்துவிடுகிறது. ஆகவே, இந்த சமூகத்தின் முன்பாகவும், சட்டத்தின் முன்பாகவும் ஒரு ஒப்பந்தத்தை உண்டாக்கிக் கொள்கிறீர்கள். அன்பினை நீங்கள் ஒரு ஒப்பந்தமாக ஆக்கினால், நீங்கள் சட்டம் என்பதை அன்பிற்கு மேலாக வைத்து விடுகிறீர்கள். அதாவது, நீங்கள் இந்த பெருங்கூட்டத்தை, உங்களது தனித்தன்மைக்கு மேலாக வைத்து விடுகிறீர்கள் என்று அர்த்தம். மேலும், நீங்கள் அதற்கு இந்த நீதிமன்றம், ராணுவம், காவல்துறை, நீதிபதிகள் ஆகிய இவர்களின் ஆதவையும் எடுத்துக் கொண்டிருக்கிறீர்கள். ஏனெனில், அப்போது தான் நீங்கள் உங்களது அடிமைத் தளையை பத்திரமாகவும், உறுதியாகவும் வைத்திருக்க முடியும். நாளை என்ன நடக்கும் என்று யாரும் அறிய முடியாது. அன்பு என்பது, ஒரு தென்றலைப் போன்று வருகிறது - அது மீண்டும் வரலாம் அல்லது அது வராமலும் போகலாம். மேலும், அந்த அன்பானது தானாகவே வராத போதுஇ இந்த சட்டத்திற்காகவும், திருமணம் என்பதினாலும், சமுதாயத்தில் மரியாதை வேண்டும் என்பதற்காகவும், கிட்டத்தட்ட இந்த உலகம் முழுவதிலுமுள்ள எல்லாத் தம்பதிகளும் விபச்சாரம் செய்வது போன்று, தரம் தாழ்ந்த செயல் ஆகிவிடுகிறது.

நீங்கள் நேசிக்காத ஒரு பெண்ணுடன் வாழ்வது, நீங்கள் நேசிக்காத ஒரு ஆணுடன் வாழ்வது, பாதுகாப்பிற்காக வாழ்வது, பொருளாதார ஆதரவுக்காக வாழ்வது ஆகும். மேலும், அன்பு தவிர வேறு எந்தக் காரணத்திற்காகவும் சேர்ந்து வாழ்கின்ற அந்த வாழ்க்கையானது, விபச்சாரத்தைத் தவிர வேறு ஒன்றுமாகாது. இந்த உலகில் விபச்சாரம் முற்றிலும் ஒழிக்கப்பட வேண்டும் என்று நான் விரும்புகிறேன். எல்லா மதங்களும் இங்கே விபச்சாரம் இருக்கக் கூடாது என்று தான் கூறுகின்றன. ஆனால், இப்படிப்பட்ட வழியில் தான் மனிதனின் முட்டாள்தனம் வேலை செய்கிறது. விபச்சாரம் கூடாது என்று சொல்கின்ற இதே மதங்கள் தான், விபச்சாரத்திற்கான காரணமாகவும் அமைகின்றன. ஏனெனில், ஒருபுறம் அவைகள் திருமணத்திற்கு ஆதரவு தெரிவிக்கின்றன. மறுபுறத்தில், அவைகள் விபச்சாரத்திற்கு எதிராக இருக்கின்றன.

திருமணம் என்பதே அதனளவில் விபச்சாரம் போன்றது தான். என்னுடைய அன்பை நான் விசுவாசிக்கும் பட்சத்தில், நான் ஏன் திருமணம் செய்ய வேண்டும்? திருமணம் என்கின்ற அந்தக் கருத்தே அவநம்பிக்கையின் ஒரு அடையாளமாக உள்ளது. மேலும், அவநம்பிக்கையிலிருந்து வருகின்ற எதுவாக இருந்தாலும், அது உங்களுடைய அன்பானது ஆழமாகவும், உயரமாகவும் வளர்வதற்கு உதவாது. அது, அதை அழித்துவிடத் தான் செய்யும். அன்பு செலுத்துங்கள். ஆனால், போலித்தனமான ஏதாவது ஒன்றினால், அதாவது, திருமணம் அல்லது வேறு வகையான உறவுகளால் அன்பை அழிக்காதீர்கள். சுதந்திரத்தை கொடுத்தால் மட்டுமே, அன்பு உண்மையானதாக இருக்கும். இதுவே அதை நிர்ணயிப்பதாக இருக்கட்டும். மற்றவர்களின் தனிமைக்குள் குறுக்கிடாத பொழுது மட்டுமே அன்பானது உண்மையானதாக இருக்க முடியும். அது, அவரது தனித்தன்மையை, அவரது தனிமையை மதிக்கக் கூடியதாக இருக்கும். ஆனால், இந்த உலகம் முழுவதும் நீங்கள் பார்க்கின்ற எல்லாக் காதலர்களின் முழு முயற்சியுமே, அவர்களுக்குள் எதுவுமே தனிப்பட்டதாக இருக்கக் கூடாது என்பது தான்; எல்லா ரகசியங்களும் சொல்லப்பட வேண்டும் என்பது தான். அவர்கள் தனி மனிதப் பண்பினைக் கண்டு பயப்படுகின்றனர். மேலும், அவர்கள் ஒருவர் மற்றொருவரின் தனித்தன்மையை அழித்துக் கொள்கின்றனர். அப்படி ஒருவருக்கொருவர் தனித்தன்மையை அழித்துக் கொள்வதன் மூலம், அவர்களின் வாழ்வில் திருப்தியும், நிறைவும் கிடைக்கும் என்று நம்புகின்றனர். ஆனால், அவர்கள் வெறுமனே மேலும் மேலும் துன்பத்தைத் தான் அனுபவிக்கின்றனர்.

அன்பு செலுத்திக் கொண்டே இருங்கள். மேலும், உண்மையான எதுவும் எப்போதம் மாறிக் கொண்டேதான் இருக்கும் என்பதையும் நினைவில் கொள்ளுங்கள். உண்மையான அன்பு, எப்போதும் மாறாமல் அப்படியே இருக்கும் என்கிறதொரு தவறான எண்ணம் உங்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ளது. உண்மையானதொரு ரோஜா மலர் எப்போதும் அப்படியே இருக்க முடியாது. மேலும், உயிருள்ள எந்த மனிதரும் கூட, ஒருநாள் இறந்து தான் தீர வேண்டும். இந்த இயற்கையே தொடர்ந்து மாறிக் கொண்டே இருக்கிறது. மேலும், அன்பு என்பது நிரந்தரமானதாக இருக்க வேண்டும் என்கிற அந்த, எண்ணம் உண்மையாக இருக்குமானால் ... ... ஒருநாள் அந்த அன்பு மறைந்துவிடுமானால், அதன்பிறகு இயல்பாகவே அந்த அன்பு உண்மையில்லாதது என்று இணைத்துப் பேசப்படும்.

உண்மை என்னவென்றால், காதல் என்பது திடீரென்று வந்தது; உங்களது பக்கத்தில் இருந்து நீங்கள் எந்த முயற்சியும் எடுத்ததனால் அது

வரவில்லை. அது, இயற்கையின் ஒரு பரிசாக வந்தது. அது வந்த பொழுது, அந்தக் காதலானது ஒருநாள் திடீரென்று மறைந்து போய்விடும் என்று அதைப் பற்றி கவலைப்பட்டால், நீங்கள் அதை ஏற்றுக் கொள்ளவே மாட்டீர்கள். அது எந்த வழியில் வந்ததோ, அந்த வழியில் போய்விடும். ஆனால், அதற்காக கவலைப்பட வேண்டிய தேவையில்லை. ஏனெனில், ஒரு மலர் நிறம் மாறிவிட்டால், அடுத்த பூக்கள் வரும். எப்போதும் பூக்கள் பூத்துக் கொண்டே தான் இருக்கும். எனவே, ஒரே ஒரு மலரிடம் மட்டும் பற்று வைக்காதீர்கள். அப்படிச் செய்தால், விரைவில் நீங்கள் ஒரு உயிரற்ற மலருடன் பற்று வைத்ததைக் காண்பீர்கள். இப்போது இருக்கின்ற உண்மை நிலை அது தான். ஒரு காலத்தில் உயிருடன் இருந்த காதலுடன், மக்கள் இப்போது பற்று ஏற்படுத்தி இருக்கிறார்கள். இப்போது அது உங்களின் ஒரு ஞாபமாகவும், வேதனையாகவும் மட்டுமே உள்ளது. ஏனெனில், இந்த சட்டம் என்பதனால் நீங்கள் உங்களது மரியாதையைப் பற்றி அதிகம் கவலை கொள்கிறீர்கள்.

கார்ல் மார்க்ஸிடம் இந்தக் கருத்து, சரியானதொரு கருத்தாக இருந்தது. அதாவது, கம்யூனிஸத்தில் திருமணங்கள் என்பதே இருக்காது என்பது. மேலும், ரஷ்யாவில் புரட்சி நிகழ்ந்த போது, ஆரம்பத்தில் நான்கு அல்லது ஐந்து வருடங்கள் அவர்கள், காதலை சுதந்திரமான ஒன்றாக ஆக்குவதற்கு முயன்றார்கள். ஆனால், அதன் பிறகு தான் அவர்கள் அதில் உள்ள நடைமுறைச் சிக்கல்களைப் பற்றி அறிந்தார்கள். கார்ல் மார்க்ஸ் ஏட்டளவில் மட்டுமே அந்தக் கருத்தைக் கொண்டிருந்ததால், அதில் உள்ள நடைமுறைக் கஷ்டங்கள் அவருக்கு தெரிந்திருக்கவில்லை. மேலும், அதில் உள்ள மிகப்பெரிய சிக்கல் என்னவென்றால், திருமணம் என்பது இல்லாமல் போய்விடும் போது இந்த குடும்பம் என்பதும் மறைந்து போய்விடும். ஆனால், இந்த குடும்பம் என்பது தான் இந்த சமுதாயத்தின் முதுகு எலும்பு சமுதாயத்தின், நாட்டின் முக்கியமான முதுகெலும்பாகிய குடும்பம் என்பது மறைந்து போனால், அதன் பிறகு நாடு என்பதும் நீண்ட நாட்கள் நிலைத்து நிற்க முடியாது.

ரஷ்யப் புரட்சிக்குப் பின், ஐந்து வருடங்களுக்குள் கம்யூனிஸ்ட் கட்சியானது அந்த முழுக் கொள்கையையும் மாற்றிவிட்டது. திருமணம் என்பதற்கு மீண்டும் ஆதரவு அளிக்கப்பட்டது; விவாகரத்து அனுமதிக்கப்பட்டது. ஆனால், முழுமனம் இல்லாமல் அனுமதிக்கப்பட்டது. விவாகரத்து புரிவதற்கு எல்லாவகையான தடைகளும் ஏற்படுத்தப்பட்டன. ஏனென்றால், அப்போது தான் இந்த குடும்பம் என்னும் அமைப்பு இருக்க முடியும். ஏனெனில், அப்போது

அவர்கள் நாட்டை பலப்படுத்துவதற்கு ஆர்வத்துடன் இருந்தார்கள். நாடு என்பது இல்லாமல், அரசியல்வாதிகள் இருக்க முடியாது. அங்கே அரசாங்கம் என்பதும் இருக்க முடியாது. தனிமனிதச் சொத்துரிமை என்பதனால் தான் திருமணம் என்பது வந்தது என்கின்ற கார்ல் மார்க்ஸின் அடிப்படை கருத்தைப் பற்றி அதன்பிறகு அவர்கள் ஒருபோதும் பேசவில்லை. தனி மனிதத் சொத்துக்கள் மறைந்து வரும்போது, திருமணம் என்பதும் மறைந்து போயிருக்க வேண்டும். ஆனால், யாரும் அதைப் பற்றி பேசவில்லை.

இந்தக் குடும்பம் என்பது இருப்பதை நான் விரும்பவில்லை. இந்த நாடு என்று இருப்பதை நான் விரும்பவில்லை. இந்த உலகமானது பல்வேறு பாகங்களாகப் பிரிக்கப்படுவதை நான் விரும்பவில்லை. சுதந்திரமான தனி மனிதர்கள், தானாக எழுக்கின்ற அன்பில் வாழ்ந்து கொண்டு, இன்பம் அனுபவிப்பதை எந்தவிதமான கண்டனத்திற்கும் உள்ளாக்காமல், நரகம் என்கிற எந்த பயமும் இல்லாமல், மேலும் சொர்க்கம் என்பது போன்ற எந்த ஒரு வெகுமதியும் இல்லாமல் வாழ்கின்றதொரு உலகினை நான் விரும்புகிறேன். ஏனெனில், சொர்க்கத்தை நாமே இங்கே உருவாக்க முடியும். அதை உருவாக்குவதற்கான எல்லா சக்திகளும் நம்மிடம் உள்ளன. ஆனால், நாம் அதை உபயோகிப்பது இல்லை. அதற்கு நேர்மாறாக, அதற்கு எல்லா இடையூறுகளையும் நாம் உருவாக்கிக் கொண்டே போகிறோம்.

நான் காதலுக்கு எதிரானவன் அல்ல. நான் காதலுக்கு அதிக ஆதரவு கொடுப்பவன். அதனால் தான், நான் உறவுகளுக்கு எதிராக, திருமணங்களுக்கு எதிராக இருக்கிறேன். இரண்டு பேர் தங்களின் முழு வாழ்க்கையையும் சேர்ந்து வாழ்வது முடியும். யாரும் அவர்களைப் பிரிந்து போங்கள் என்று சொல்லப் போவதில்லை. ஆனால், அப்படி அவர்கள் ஒன்று சேர்ந்து வாழ்வது அன்பினால் மட்டுமே இருக்க வேண்டும். ஒருவர் மற்றொருவரின் தனி மனிதத் தன்மைக்குள் குறுக்கிடாமலும், அத்துமீறி நுழையாமலும் இருக்க வேண்டும். அது, அடுத்தவரின் உண்மையான மதிப்பாக இருக்க முடியும்.

நீங்கள் அன்பு செலுத்தலாம், நீங்கள் அன்பிலும் இருக்கலாம். மேலும், நீங்கள் வெறுமனே அன்பு செலுத்தினால், வெறுமனே அன்புடன் இருந்தால், அதன்பிறகு அன்பு என்பது வெறுப்பாக மாறுவதற்கான சாத்தியக்கூறுகள் இருக்காது. ஏனெனில், அங்கே எதிர்பார்ப்பு என்பது இருக்காது. அதனால், நீங்கள் விரக்தி அடைய வேண்டியதும் இருக்காது. ஆனால், நான் காதல் என்பதை ஒரு ஆன்மிக விஷயமாகப் பேசுகிறேன். அதை ஒரு உடல் சம்பந்தமான விஷயமாகப்பேசவில்லை. உடல் சம்பந்தமானதாக இருந்தால், அது

காதல் அல்ல; அது காமம். உடற்கூறானது, தனது இனம் தொடர வேண்டும் என்பதில் தான் ஆர்வமாக இருக்கும். அப்போது காதல் என்னும் கருத்தே வெறும் உடற்கூற்றிற்கு கொடுக்கும் கையூட்டாகத் தான் இருக்கும். நீங்கள் ஒரு ஆணிடமோ அல்லது ஒரு பெண்ணிடமோ உடல் உறவு கொண்ட பிறகு, உடனடியாக அவர்கள் மீது உங்களுக்கு ஆர்வம் குறைவதை காணலாம். குறைந்தபட்சம், 24 மணி நேரமாவது ஆர்வம் குறையும். மேலும், அது உங்களத வயதைப் பொருத்தும் உள்ளது. உங்களுக்கு வயதாகிவிட்டால், 48 மணிநேரம், 72 மணி நேரம் ... .... இப்படி கூடிக் கொண்டே போகும்.

பிரெஞ்சு நாட்டின் வெளிநாட்டு படைப் பிரிவில், ஒரு புதிய படைத் தளபதி சேர்ந்தார். அவருக்கு, அதன் தலைவர் எல்லாக் கட்டிடங்களையும் சுற்றிக் காண்பித்தார். அப்படி அவர்கள் சுற்றி முடித்த பிறகு, அந்த படைத்தளபதி அந்த தலைவரைப் பார்த்து, "கொஞ்சம் பொறுங்கள். நீங்கள் அங்கே தெரிகின்ற அந்த நீல நிற கட்டிடத்தை எனக்கு காட்டவில்லையே. அது எதற்காக பயன்படுத்தப்படுகிறது?" என்று கேட்டார்.

அதற்கு அந்த தலைவர், "ஆமாம், அங்கு தான் நாங்கள் ஒட்டகத்தினை வைத்துள்ளோம். இங்குள்ள படை வீரர்களுக்கு பெண்கள் ஆசை வந்துவிட்டால் ... ..." என்று இழுத்தார்.

"போதும்," என்று அந்த படைத் தளபதி வெறுப்புடன் கூறினார்.

அதன்பிறகு இரண்டு வாரங்கள் கழித்து, அந்த படைத் தளபதிக்கே பெண்கள் ஆசை வந்துவிட்டது. அவர், தலைவரிடம் சென்று, "ஏதாவது சொல்லுங்கள் தலைவரே," என்று கேட்டார். மேலும், தனது குரலைத் தாழ்த்திக் கொண்டும், சுற்றுமுற்றும் திரும்பத் திரும்ப பார்த்துக் கொண்டும் அவரிடம், "இப்போது அந்த ஒட்டகம் எப்போதாவது சும்மா இருக்குமா?" என்று கேட்டார்.

உடனே அந்த தலைவர், "சரி, பார்க்கலாம்," என்று கூறினார். அவர் தனது புத்தகத்தை எடுத்து திறந்து பார்த்தார். "ஏன், ஆமாம், அந்த ஒட்டகம் நாளை மதியம் இரண்டு மணிக்கு சுதந்திரமாகத் தான் உள்ளது," என்றார்.

அதற்கு அந்த தளபதி, "என்னை அதில் சேர்த்துவிடுங்கள்," என்றார்.

எனவே, அடுத்த நாள் மதியம் இரண்டு மணிக்கு அந்த படைத் தளபதி, அந்த நீலக் கட்டிடத்திற்கு சென்று கதவைத் திறந்தார். அங்கே அவர் இதுவரை பார்த்திராத ஒரு கழிசடை ஒட்டகத்தைப் பார்த்தார். அவர் கதவை மூடினார்.

அப்போது அந்த தலைவருக்கு பெரிய உறுமலும், கத்துகின்ற குரலும் கேட்டது. உடனே அவர் ஓடிப்போய் அந்த கட்டிடத்திற்குள் நுழைந்தார். அங்கு அந்த படைத் தளபதி நிர்வாணமாக, சகதியுடன், ஒட்டகத்தின் முடியானது மேலெல்லாம் ஒட்டிக் கொள்ள படுத்துக் கிடந்ததைக் கண்டார்.

அப்போது அந்த தலைவர், "நீங்கள் தயவுசெய்து என்னை மன்னிக்க வேண்டும்," என்று கூறிக் கொண்டு, "நீங்களும் மற்ற ஆண்கள் செய்வதைப் போல் புத்திசாலித்தனமாக செய்திருக்கலாமே. அதாவது, இந்த ஒட்டகத்தின் மீது ஏறி உட்கார்ந்து கொண்டு நகரத்திற்குச் சவாரி சென்று, அங்கு ஒரு பெண்ணை தேடிப் பிடித்திருக்கலாமே?" என்று கேட்டார்.

## எதிர்ச் செயலில் இருந்து செயலுக்கு

முதலாவதும், மிகவும் அடிப்படையாக புரிந்து கொள்ள வேண்டிய ஒரு விஷயம் என்னவென்றால், நீங்கள் என்ன செய்தாலும் அதை ஒரு எதிர் செயலாக செய்யக்கூடாது என்பது தான். அது வெறும் ஒரு செயலாக இருந்துவிட்டால், அதன் பிறகு அங்கே பிரச்சனை இருக்காது. செயல் என்பது எப்போதும் நல்லது; எதிர்செயல் என்பது எப்போதும் கெட்டது.

எனவே, முதலில் எதிர் செயல் என்கிற வார்த்தையைப் புரிந்து கொள் முயற்சி செய்யுங்கள். அதற்கு நீங்கள் தன்னுணர்வு இல்லாமல் செய்கின்ற செயல் என்று அர்த்தமாகும். யாரே ஒருவர் உங்களை ஆட்டுவிக்கிறார்கள் என்று அர்த்தம். யாராவது எதாவது சொல்கிறார்கள், யாராவது எதாவத செய்கிறார்கள். உடனே, நீங்கள் அதற்கு எதிர் செயல் புரிகிறீர்கள். அந்தச் சூழ்நிலையின் உண்மையான எஜமான் வேறு யாராகாவாவது இருக்கிறார்கள். யாராவது வந்து உங்களை அவமானப்படுத்துகிறார்கள். உடனே, நீங்கள் அதற்கு எதிர் செயல் புரிகிறீர்கள். நீங்களும் கோபம் அடைகிறீர்கள். யாராவது வந்த உங்களைப் புகழ்கிறார்கள். அப்போது நீங்கள் புன்சிரிப்பு சிரித்துக் கொண்டு சந்தோஷம் அடைந்தீர்கள். இரண்டும் ஒன்று தான். நீங்கள் ஒரு அடிமை போல் ஆகிவிடுகிறீர்களள். அப்போது அடுத்தவர், உங்களை எப்படித் தூண்டலாம் என்பதை அறிந்து கொள்கிறார். நீங்கள் ஒரு இயந்திரத்தைப் போல் நடந்து கொள்வீர்கள். நீங்கள் இன்னும் ஒரு மனிதனாக இல்லாமல், ஒரு இயந்திரமாகத் தான் இருக்கிறீர்கள்.

செயல் புரியுங்கள், எதிர் செயல் புரியாதீர்கள். மற்றவர்களின் கைகளில் நீங்கள் ஒரு விளையாட்டுப் பொருளாக ஆகிவிடாதீர்கள்.

மேலும், மனம் என்பது செயல்படாமல், அவன் மட்டும் வெறுமனே செயலாற்றுகின்ற ஒரு மனிதரின் நடவடிக்கைகளை உங்களால் முன்கூட்டியே தீர்மானிக்க முடியாது. மனதின் கட்டளைப்படி நடப்பவர்களைத் தான் முன்கூட்டியே தீர்மானிக்க முடியும். நீங்கள் விழிப்புடனும், உஷாராகவும், தன்னுணர்வுடனும் இருந்தால், எந்த ஒரு சூழ்நிலையும் எப்படித் திரும்பும் என்று யாராலும் கூற முடியாது. உங்களது தன்னுணர்விற்கு ஆயிரத்தோரு மாற்று வழிகள் திறந்து இருக்கும். தன்னுணர்வு என்றாலே முழு சுதந்திரம்; அதாவது, தானாகவே நடக்கின்ற ஒரு செயல், முற்றிலும் நிகழ்காலத்தில் நடப்பது, வேறு யாராலும் கட்டுப்படுத்தப்படாதது; ஒருவரின் சொந்த ஆன்மாவிலிருந்து வருவது.

நாம் வளர்க்கப்பட்டுள்ள கண்டிப்புக்குகளுக்கு தகுந்தாற்போல் தான் நாம் எதிர்செயல் புரிகிறோம். நீங்கள் ஒரு சைவக் குடும்பத்தில் பிறந்து, உங்கள் முன்பு அசைவ உணவு மேஜையில் வைக்கப்பட்டால், நீங்கள் வாந்தி எடுத்து சுகவீனம் அடைந்துவிடுவீர்கள். அது, அந்த அசைவ உணவினால் அல்ல. அது, உங்களது கண்டிப்பான வளர்ப்பினால். மாமிசம் சாப்பிடுவதற்கு பழக்கப்பட்ட ஒருவர், அதைப் பார்த்த உடனேயே சந்தோஷமடைவார். அவருக்கு, வாந்திக்குப் பதிலாக பசி எடுக்கும். அவர் சந்தோஷமும், சிலிர்ப்பும் அடைவார். இதுவும், அவரது பழக்கத்தின் விளைவு தான்.

நாம் ஒரு குறிப்பிட்ட வழியில் கண்டிப்புடன் வளர்க்கப் பட்டுள்ளதால் தான், நாம் எதிர்ச் செயலாற்றுகிறோம். நீங்கள் மிகவும் பண்பட்டவராக இருக்கும்படி கண்டிப்புடன் வளர்க்கப்படலாம். நீங்கள் எப்போதும் அடக்கமானவராக இருக்கும்படி கண்டிப்புடன் வளர்க்கப்படலாம். நீங்கள் அமைதியானவராக இருக்கும்படி கண்டிப்புடன் வளர்க்கப்படலாம். மேலும், மிகவும் தொந்தரவுமிக்க அல்லது கவனத்தை திசை திருப்புகின்ற நேரங்களில் நீங்கள் அசையாமல் இருக்கும்படி கண்டிக்கப்படலாம். ஆனால், அது ஒரு கண்டிப்பாக இருக்கும் பட்சத்தில், அதன் பின்னர் அதற்கும் சமய நெறிக்கும் எந்த சம்பந்தமும் கிடையாது. அதன் பிறகு, அது மனோதத்துவம் சம்பந்தப்பட்டதாக ஆகிவிடும். அங்கே ஒரு புத்தரோ அல்லது ஒரு இயேசுவோ குருநாதராக இருக்க முடியாது. அங்கே ஸ்கின்னர் மற்றும் பாவ்வோல்போன்றவர்கள் தான் குருநாதராக இருக்க முடியும். அது ஒருவித கண்டிப்பினால் விளையும் எதிர் செயல்விளைவாகும்.

ஸ்கின்னரின் பரிசோதனைக் கூடத்திற்கு ஒரு புதிய எலியைக் கொண்டு வந்ததைப் பற்றிய கதையை நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.

மனவியலார்கள், சுண்டெலிகளை வைத்துத் தான் ஆராய்ச்சி செய்கின்றனர். ஏனெனில், மனிதனுக்கு அதைவிட மிகப்பெரிய கௌரவத்தை அவர்களால் கொடுக்க முடியாது. ஒரு சுண்டெலியின் மனதை அவர்களால் புரிந்து கொள்ள முடியுமெனில், அவர்கள் மனித மனத்தை புரிந்து கொண்டுவிடலாம் என்று நினைக்கின்றனர்.

அவரது சோதனைக் கூடத்தில் நீண்ட நாட்களாக இருந்த பழைய எலி ஒன்று இந்தப் புதிய எலிக்கு தீட்சை கொடுத்தது. அது அதனிடம், "இங்கே பார், இந்த ஸ்கின்னர் மிகவும் நல்ல மனிதர். ஆனால், முதலில் நீ அவரை கண்டித்து வைக்க வேண்டாம். இந்த பொத்தானை நீ அழுத்தினால் போதும். உடனடியாக உனக்கு காலை உணவு வந்துவிடும். இப்படித்தான் நான் அவரை முற்றிலும் கட்டுப்பாட்டிற்குள் வைத்துள்ளேன்," என்றது.

கண்டிப்பதென்பது படுகொலை போன்றது. உங்களது, இயல்புத் திறன் படுகொலை செய்யப்படுகிறது. உங்கள் மனதில் ஒரு குறிப்பிட்ட கருத்து திணிக்கப்படுகிறது. மேலும், அதனால் நீங்கள் எப்போதுமே ஒரு சூழ்நிலையில் அந்த நிலைக்குரிய பதில் செயல் ஆற்றுவதில்லை. நீங்கள் எதிர் செயல் தான் ஆற்றுகிறீர்கள். சின்ன விஷயமாக இருந்தாலும், பெரிய விஷயமாக இருந்தாலும் அது ஒன்று தான்.

நீங்கள் ஒரு சமய நெறி மிக்க குடும்பத்தில் வளர்க்கப்பட்டவராக இருந்தால், கடவுள் என்னும் வார்த்தை அவ்வளவு அழகானதாகவும், அவ்வளவு புனிதமானதாகவும் இருக்கும். ஆனால், நீங்கள் ஒரு கம்யூனிஸ்ட் குடும்பத்தில் வளர்க்கப்பட்டால், அதன் பிறகு, அநேக வார்த்தை அசிங்கமானதாகவும், வாந்தி எடுப்பது போன்றும் இருக்கும். அந்த வார்த்தையைக் கூறினாலே போதும், உடனே அவரது வாயில் ஒரு கெட்ட ருசியை அவர் உணர்கிறார்.

சின்ன விஷயமா அல்லது பெரிய விஷயமா என்பது ஒரு கேள்வியல்ல. நீங்கள் கண்டிப்புடன் வளர்க்கப்பட்ட அந்த மனநிலையோடு நடந்து கொண்டால், அப்போது நீங்கள் ஒரு இயந்திரத்தைப் போன்று நடந்து கொள்கிறீர்கள். உங்களுக்குள் மனிதன் இன்னமும் பிறக்கவில்லை.

ஒரு ஆங்கிலேயரிடம் நீங்கள் ஒரு நகைச்சுவையைக் கூறினால், அவர் மூன்று முறை சிரிப்பார். நீங்கள் அதே நகைச்சுவையைக் கூறும் போது, முதல் முறை பண்புடன் இருக்க வேண்டும் என்பதற்காக முதலில் சிரிப்பார். மீண்டும் நீங்கள் அதை விளக்கும் போது, இரண்டாம்

முறையாக மீண்டும் பண்புடன் இருக்க வேண்டும் என்பதற்காக சிரிப்பார். எப்போதும் பண்புடன் இருக்க வேண்டும் என்பது தான் ஆங்கிலேயர்களுக்கு கொடுக்கப்பட்டுள்ள பயிற்சி. மூன்றாவதாக, நடு இரவில் ஆழ்ந்த தூக்கத்திலிருந்து விழித்தவுடன் திடீரென்று அந்த நகைச்சுவையின் அர்த்தத்தைப் புரிந்து கொண்டதற்காக ஒருமுறை மூன்றாவதாக சிரிப்பார்.

அதே நகைச்சுவையை நீங்கள் ஒரு ஜெர்மன்காரரிடம் கூறினால், அவர் இரண்டு முறை சிரிப்பார். நீங்கள் முதலில் அதைச் சொல்லும் போது பண்புடன் நடந்து கொள்ள வேண்டும் என்பதற்காக அவர் முதலில் சிரிப்பார். மீண்டும் நீங்கள் அதை விளக்கும் போது, அப்போதும் பண்புடன் நடந்து கொள்ள வேண்டும் என்பதற்காக இரண்டாவது முறையும் சிரிப்பார். ஆனால், அவர் மூன்றாம் முறையாக சிரிக்க மாட்டார். ஏனெனில், அவரால் அதை ஒருபோதும் புரிந்து கொள்ள முடியாது.

ஆனால், ஒரு நகைச்சுவையை ஒரு அமெரிக்கரிடம் சொன்னால், அவர் ஒரு முறை மட்டுமே சிரிப்பார். ஏனெனில், நீங்கள் கூறும்போதே அவர் அதைப் புரிந்து கொள்வார்.

மேலும், நீங்கள் ஒரு யூதரிடம் அதே நகைச்சுவையைக் கூறினால், அவர் சிரிக்கவே மாட்டார். அதற்கு பதிலாக, அவர், "இது பழைய சிரிப்புத்தான். மேலும், நீ அதைத் தப்புத் தப்பாக கூறுகிறாய்," என்பார்.

எனவே, அது நகைச்சுவையாக இருக்கலாம் அல்லது அது ஒரு மிகப்பெரிய தத்துவ விஷயமாக இருக்கலாம். அது ஒரு முக்கியத்துவம் அற்றதாக அல்லது கடவுளாகக் கூட இருக்கலாம். அதில் எந்த ஒரு வேறுபாடும் உண்டாகப் போவதில்லை. மக்கள், எப்போது தாங்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று கட்டுத்திட்டம் செய்யப்படுகிறார்களோ, அப்படித் தான் நடப்பார்கள். அவர்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று வளர்க்கப்பட்டு இருக்கிறார்களோ, அப்படித் தான் நடந்து கொள்வார்கள். இயற்கையானது, அவர்களுக்குள் இருந்து வேலை செய்ய அனுமதிக்கப்படுவதில்லை. அவர்கள் வளர்க்கப்பட்ட விதம் மட்டுமே அவர்களுக்குள் இருந்து வேலை செய்யும். இப்படிப்பட்ட மக்களைத் தான் நான் அடிமைகள் என்று அழைக்கிறேன்.

நீங்கள் விடுதலை பெற்றுவிட்டால், நீங்கள் எல்லாவிதமான கண்டிப்புகளையும் விட்டுவிட்டு முதல் முதலாக வாழ்க்கையை ஒரு புத்துணர்வுடன் கூடிய கண்களால் பார்க்கும் போது, இடையில் கண்டிப்புகள் என்கின்ற எந்த ஒரு மேகமும் இல்லாத போது, நீங்கள்

எப்படி நடந்து கொள்வீர்கள் என்று முன்கூட்டியே தீர்மானிக்க முடியாதவர் ஆகிவிடுவீர்கள். அதன்பிறகு என்ன நடக்கும் என்று யாரும் அறிய முடியாது. யாரும் கற்பனை செய்ய முடியாது. ஏனெனில், அதன் பின்னர் 'நீங்கள்' என்று ஒருவர் அங்கே ஒருபோதும் இருப்பதில்லை. இந்த இயற்கை தான் உங்கள் மூலமாக செயலாற்றும். ஆனால் இப்போது இந்த சமுதாயம் தான் உங்கள் மூலம் செயலாற்றிக் கொண்டிருக்கிறது.

நீங்கள் வெறுமனே விழிப்புடன் இருந்துவிட்டால், பதில் செயலாற்ற தயாராகிவிட்டால், எந்த ஒரு நிலையான கருத்தும் இல்லாமல், எந்தவிதமான தப்பெண்ணமும் இல்லாமல், எந்தவிதமான திட்டங்களும் இல்லாமல், அந்தத் தருணத்தில் என்னவெல்லாம் நடக்கிறதோ, அதற்கு நீங்கள் உண்மையானவராகவும், அதிகாரப்பூர்வமானவராகவும் ஆகிவிட்டால் போதும்.

அதிகார சக்தி, உண்மை சக்தி ஆகிய இரண்டு வார்த்தைகளையும் நினைவில் கொள்ளுங்கள். சாதாரணமாக, நீங்கள் உங்களை எந்த அதிகார சக்தி கண்டிப்பு செய்துள்ளதோ, அதற்குத் தகுந்தாற்போல் நடப்பீர்கள். அதாவது, இந்த மத குருக்கள், அரசியல்வாதிகள், பெற்றோர்கள் இவர்களுக்கு தகுந்தாற்போல் நடப்பீர்கள். அந்த அதிகார சக்திகளுக்கு தகுந்தாற்போல் நடப்பீர்கள். ஆனால், விடுதலை பெற்ற ஒரு மனிதன் அதிகார சக்திக்கு தகுந்தாற்போல் நடப்பதில்லை. அவன் சொந்தமான உண்மைச் சக்திக்கு தகுந்தாற் போல் நடக்கிறான். அவன் பதில் செயலாற்றுகிறான். ஏதோ ஒரு சூழ்நிலை வருகிறது, ஒரு சவால் வருகிறது, அதற்கு அவன் தனத முழு உயிருடனும் பதில் செயலாற்றுகிறான். அவனாலேயே, அவன் எப்படி நடந்து கொள்வான் என்று முன்கூட்டியே தீர்மானிக்க முடியாது.

நீங்கள் என்னிடம் ஒரு கேள்வி கேட்கும் போது, அதற்கு நான் என்ன பதில் சொல்லப் போகிறேன் என்று எனக்கே தெரியாது. அதற்கான பதிலை உங்களுக்கு கொடுத்த பிறகு மட்டுமே நான் அதை அறிகிறேன். அதன் பிறகு மட்டுமே, "எனவே இதுதான் பதில்!" என்பதை நான் கூறுகிறேன். உங்களது கேள்வி இங்கே இருக்கிறது. நானும் இங்கே இருக்கிறேன், இடையில் ஒரு பதில் செயல் நிகழ்ந்து தான் தீரவேண்டும்.

பதில் செயல் என்பது பொறுப்பு. பொறுப்பு என்பது உண்மைச் சக்தி. பொறுப்பு என்பது இந்த நொடிப் பொழுதில் வாழ்வது.

தன்னுணர்வற்ற மக்கள் என்ன செய்வார்கள் என்பதை நீங்கள் எப்போதும் முன்கூட்டியே தீர்மானிக்க முடியும். ஒன்று, அவர்கள் வீரர்களாக இருப்பார்கள் அல்லது கோழைகளாக இருப்பார்கள்.

அவர்கள் பொறுமையாக இருப்பார்கள் அல்லது அவர்கள் பொறுமை இழந்து இருப்பார்கள். ஆனால், எதையும் புரிந்து கொண்ட ஒரு தனி மனிதனுக்கு இதுவா அல்லது அதுவா என்கின்ற மாற்றுத் திட்டங்கள் இருக்காது. அவனுக்கு எல்லா சாத்தியங்களும் திறந்திருக்கும். எந்தக் கதவும் மூடப்பட்டிருப்பதில்லை. மேலும், ஒவ்வொரு நொடிப்பொழுதும் ஒரு தன்னுணர்வுள்ள தனி மனிதன், ஒரு விடுதலை பெற்ற தனி மனிதன், காரியம் ஒன்று நடப்பதற்கு முன்பே அதற்கான முடிவினை, தான் ஒருபோதும் சுமந்து கொண்டு செல்ல மாட்டான். அவனிடம் ஏற்கனவே தயார் செய்யப்பட்ட முடிவுகள் இருக்காது. புதியதாக, களங்கம் இல்லாததாக அவன் செல்வான். அவன் கடந்த காலங்களினால் மாசுபடுவதில்லை.

> பொறுமையானவராக, அன்பு செலுத்துபவராக, வன்முறை யற்றவராக, அமைதியானவராக ஆக வேண்டும் என்று முயற்சி செய்யாதீர்கள்; அப்படி நீங்கள் முயற்சி செய்தால், நீங்களே உங்களை நிர்பந்திப்பவர்கள் ஆகிவிடுவீர்கள். மேலும், நீங்கள் ஒரு போலித்தனம் நிறைந்தவராகவும் ஆகிவிடுவீர்கள். இப்படித் தான் இந்த மதங்கள் முழுவதும் போலித்தனம் நிறைந்தவையாக மாறிவிட்டது.

விழிப்புணர்வு தான் அதற்கான திறவுகோல். நீங்கள் விழிப்புணர்வுடன் இருந்தால் போதும், மற்றவையெல்லாம் பின் தொடர்ந்து வந்துவிடும்.

பொறுமையானவராக, அன்பு செலுத்துபவராக, வன்முறை யற்றவராக, அமைதியானவராக ஆக வேண்டும் என்று முயற்சி செய்யாதீர்கள்; முயற்சிக்காதீர்கள். அப்படி நீங்கள் முயற்சி செய்தால், நீங்களே உங்களை நிர்பந்திப்பவர்கள் ஆகி விடுவீர்கள். மேலும், நீங்கள் ஒரு போலித்தனம் நிறைந்தவராகவும் ஆகிவிடுவீர்கள். இப்படித் தான் இந்த மதங்கள் முழுவதும் போலித்தனம் நிறைந்தவையாக மாறிவிட்டது. உங்களுக்குள் நீங்கள் வேறுவிதமாக இருப்பீர்கள். ஆனால், வெளியில் நீங்கள் வர்ணம் தீட்டப்பட்டு இருப்பீர்கள். நீங்கள் வெளியில் சிரிக்கலாம். ஆனால், உள்ளுக்குள் கொன்றுவிட வேண்டும் என்று நீங்கள் விரும்புவீர்கள். உங்களுக்குள் எல்லாவிதமான குப்பைகளையும் சுமந்து கொண்டு இருப்பீர்கள். ஆனால், வெளியில் வாசனைத் திரவியங்களை பூசிக் கொள்வீர்கள். உங்களுக்குள் நீங்கள் நாற்றமடிப்பீர்கள். ஆனால், வெளியில் நீங்கள் ஒரு ரோஜா மலர் போன்ற மாலையை உருவாக்கி விடுவீர்கள்.

எதையும் ஒருபோதும் அமுக்கி வைக்காதீர்கள். அடக்கி வைத்தல் என்பது தான் மனிதனுக்கு நேர்ந்த மாபெரும் விபத்து. மேலும், அந்த விபத்து மிகவும் அழகான காரணங்களுக்காக நடந்துள்ளது. நீங்கள் ஒரு புத்தரைப் பார்க்கிறீர்கள். அவர் மிகவும் அமைதியாகவும், கலக்கம் இல்லாமலும் இருப்பதைப் பார்க்கிறீர்கள். உங்களுக்கு பேராசை எழுகிறது. நீங்களும் அதைப் போன்று இருப்பதற்கு ஆசைப்படுகிறீர்கள். எனவே, என்ன செய்வது? நீங்களும் ஒரு கற்சிலை போன்று உட்கார்ந்து இருப்பதற்கு முயற்சி செய்ய ஆரம்பிக்கிறீர்கள். நீங்கள் கலக்கம் அடையக் கூடிய ஏதாவது சூழ்நிலை ஏற்பட்டாலும்கூட, நீங்கள் உங்களை அடக்கிக் கொள்கிறீர்கள். நீங்கள், உங்களை கட்டப்படுத்திக் கொள்கிறீர்கள்.

கட்டுப்படுத்துதல் என்பது ஒரு அசிங்கமான வார்த்தை. அதில் நான்கு எழுத்துக்களுக்கு மேல் இருக்கலாம். ஆனால், அது நான்கு எழுத்து கொண்ட அசிங்கமான வார்த்தை.

விடுதலை ... ... மேலும், நான் விடுதலை என்று கூறுவதன் மூலம் எதையும் நீங்கள் செய்யலாம் என்பதற்கான ஒரு உரிமம் உள்ளது என்கிற அர்த்தத்தில் நான் கூறவில்லை. நீங்கள், நான் கூறுவதை தவறாகப் புரிந்து கொள்ளலாம். நான் சுதந்திரம் என்று கூறுவதை, நீங்கள் விரும்பியவற்றைச் செய்வதற்கான உரிமம் என்கிற அர்த்தத்தில் புரிந்து கொள்வீர்கள். ஏனெனில், விஷயங்கள் அப்படித்தான் நடக்கின்றன. கட்டுப்படுத்தப்பட்டதொரு மனம், அது விடுதலை என்பதைக் கேள்விப்பட்டவுடன், உடனடியாக அதை நீங்கள் விரும்பியதையெல்லாம் செய்வதற்கானதொரு உரிமம் என்று தான் புரிந்து கொள்கிறது. உரிமம் என்பது கட்டுப்பாடு என்பதன் எதிர் துருவம். விடுதலை என்பது வெறுமனே இரண்டிற்கும் இடையே இருப்பது. மிகச் சரியாக பாதியில் இருப்பது. அதாவது, கட்டுபாடும் இல்லாத, அதேசமயம் உரிமமும் இல்லாத ஒரு நிலையில் இருப்பது.

விடுதலைக்கென்று சுயமான ஒழுக்க விதிகள் உள்ளன. ஆனால், அது எந்த ஒரு அதிகார சக்தியாலும் உங்கள் மீது திணிக்கப்படுவது இல்லை. அது உங்களது விழிப்புணர்வினால் வருகிறது; உங்களது உண்மை சக்தியால் வருகிறது. விடுதலை என்பதை நீங்கள் உங்களது உரிமம் என்று தவறாகப் புரிந்து கொள்ளக் கூடாது. அப்படிப் புரிந்து கொண்டால், நீங்கள் மீண்டும் அதில் உள்ள முக்கிய கருத்தை தவறவிட்டு விடுவீர்கள்.

(விழிப்புணர்வு தான் விடுதலையைக் கொண்டு வரும்.) விடுதலையில், கட்டுபடுத்துவதற்கான அவசியம் இருக்காது. ஏனெனில், அங்கே விரும்பியவற்றையெல்லாம் செய்வதற்கான

உரிமமும் சாத்தியப்படாது. உரிமம் என்ற ஒன்று இருப்பதால் தான், நீங்கள் கட்டுப்பாட்டிற்குள் வருவதற்கு கட்டாயப் படுத்தப்படுகிறீர்கள். மேலும், நீங்கள் உரிமம் பெற்றவராக இருந்துவிட்டால், இந்த சமுதாயம் உங்களைக் கட்டுப்படுத்திக் கொண்டே போகும்.

நீங்கள் விரும்பியதையெல்லாம் செய்யலாம் என்கிற உரிமையோடு இருப்பதால் தான் இந்த காவல்துறை இருக்கிறது. மேலும், நீதிபதி, அரசியல்வாதிகள், நீதிமன்றங்கள் ஆகியவையும் இருக்கின்றன. மேலும், அவைகள் எல்லாம் நீங்கள் உங்களை மேலும் கட்டப்படுத்திக் கொள்ள கட்டாயப்படுத்திக் கொண்டிருக்கின்றன. நீங்கள் உங்களைக் கட்டுப்படுத்திக் கொள்வதன் மூலம், நீங்கள் உயிரோட்டமுள்ள அந்த முக்கிய கருத்தையே தவறவிட்டு விடுகிறீர்கள். ஏனெனில், அங்கே உங்களது கொண்டாட்டங்கள் காணாமல் போய்விடும். நீங்கள் அளவுக்கு அதிகமாக கட்டுப்படுத்தப்பட்டால், உங்களால் எப்படி கொண்டாட முடியும்?

இது தினமும் நடக்கிறது. மிகவும் கட்டுப்பாட்டுடனும், ஒழுக்கத்தோடும் உள்ள மக்கள் என்னிடம் வரும் போது, அவர்களது மண்டைக்குள் ஊடுருவிச் செல்வது கிட்டத்தட்ட முடியாத ஒன்றாக ஆகிவிடுகிறது. அந்த அளவுக்கு அது மிகவும் கடினமானதாக உள்ளது. அவர்களைச் சுற்றிலும் கற்களால் கட்டப்பட்ட சுவர் ஒன்று உள்ளது. அவர்கள் கல்லாகிவிட்டனர். அவர்கள் பனிக்கட்டி போல் உறைந்துவிட்டனர். அவர்களின் கதகதப்பு இழக்கப்பட்டுவிட்டது. ஏனெனில், நீங்கள் கதகதப்புடன் இருந்தால், நீங்கள் எதையாவது செய்து விடுவோமோ என்று பயப்படுவீர்கள். எனவே தான் அவர்கள் தங்களையே கொன்றுவிட்டார்கள். தங்களையே முற்றிலும் விஷமூட்டிவிட்டார்கள். கட்டுப்பாட்டுடன் வாழ்வதற்கு அவர்கள் கண்டுபிடித்த ஒரே தீர்வு வாழ்க்கையை வாழாமல் இருந்துவிடுவது ஒன்று தான். எனவே, நீங்களும் ஒரு கற்சிலை புத்தரைப் போன்று இருந்துவிட்டால், அதன்பிறகு நீங்கள் பொறுமையாகவும், அமைதியாகவும், ஒழுக்கமாகவும் இருப்பதைப் போன்று பாசாங்கு செய்ய முடியும்.

ஆனால், இங்கு நான் அதை கற்பிக்கவில்லை. உரிமம் என்பதைப் போல் கட்டப்பாடு என்பதையும் விட்டுவிட வேண்டியது அவசியமாகிறது. இப்போது உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும். உங்களால், ஒன்று கட்டுப்பாட்டை தேர்ந்தெடுக்க முடியும் அல்லது எதையும் செய்கின்ற உரிமத்தைத் தேர்ந்தெடுக்க முடியும். · "நான் கட்டுப்படுத்துவதை விட்டுவிட்டால், நான் விரும்பியதைச் செய்கின்ற உரிமத்தை பெற்றுவிடுவேன் ஆனால், அந்த உரிமத்தை நான்

விட்டுவிட்டால், அதன் பிறகு நான் கட்டுப்பாடு மிக்கவனாக ஆக வேண்டும்," என்று நீங்கள் கூறலாம். ஆனால், நான் உங்களுக்குக் கூறுகிறேன், நீங்கள் விழிப்புணர்வுடன் இருந்துவிட்டால், அந்த கட்டுப்பாடு மற்றும் உரிமம் ஆகிய இரண்டுமே அதே வழியில் வெளியே சென்றுவிடும். ஒரே நாணயத்தின் இரண்டு நோக்கங்கள் தான் அவை. மேலும், விழிப்புணர்வில் இருக்கும் போது அவை தேவைப்படாது.

இது நடந்தது :

ஒரு பதினெட்டு வயதுப் பையனொருவன் எப்போதுமே வெட்கப்படுபவனாகவும், ஒதுங்கியே அமைதியாக இருப்பவனாகவும் இருந்தான். ஒருநாள் மாலை அவன் தன்னை மாற்றிக் கொள்ள முடிவெடுத்தான். அவன் படுக்கை அறையிலிருந்து வெளியே வந்தவுடன், அவனது அப்பாவின் கன்னத்தில் அறைந்தான், "இங்கே பாருங்கள், நான் இப்போது வெளியே நகருக்குள் போகிறேன். நான் நல்ல அழகான பெண்களைப் பார்க்கப் போகிறேன். நான் போய் நன்றாகக் குடித்துவிட்டு, சந்தோஷமாக நேரத்தைக் கழிக்கப் போகிறேன். என் வயது பையன்கள் வாழ்க்கையின் ஆரம்பத்தில் செய்கின்ற எல்லாவற்றையும் நானும் செய்யப் போகிறேன். அதன் மூலம், கொஞ்சம் வீரதீரச் செயல்களையும், பரபரப்பையும் அடைய விரும்புகிறேன். எனவே, என்னைத் தடுப்பதற்கு முயற்சி செய்யாதீர்கள்," என்று கூறினான்.

அதற்கு அந்த வயதான அப்பா, "உன்னை தடுப்பதற்கு முயற்சி செய்வதா? கொஞ்சம் பொறு மகனே, நானும் உன்னோடு வருகிறேன்!" என்றார்.

கட்டுப்படுத்தப்பட்ட எல்லா மக்களும் அந்த நிலையில் தான் உள்ளனர். உள்ளுக்குள் கொதித்துக் கொண்டும், நினைத்ததை செய்கின்ற உரிமத்தோடு வெடித்துக் கிளம்புவதற்கும் காத்துக் கொண்டிருக்கிறார்கள்.

மடாலயங்களில் உள்ள உங்களது துறவிகளைப் போய் பாருங்கள். இந்தியாவில் ஒரு வகையான நரம்பியல் நோய் எங்கு பார்த்தாலும் உள்ளது. துறவிகள் எல்லோரும் நரம்பு நோய் உடையவர்கள். இதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். ஒன்று, நீங்கள் காமப்பித்தனாக மாறுகிறீர்கள் அல்லது நீங்கள் பொன்னாசை மண்ணாசை போன்ற மனப்பித்து பிடித்தவராக ஆகிவிடுகிறீர்கள். நீங்கள் உங்களது காமத்தை, உங்களது காம இச்சையை அடக்கினால், நீங்கள் மனப்பித்து பிடித்தவர்களாக ஆகிவிடுவீர்கள். நீங்கள் மனப்பித்தை விட்டுவிட்டால்,

காமப்பித்து பிடித்தவர்களாக ஆகிவிடுவீர்கள். மேலும், இரண்டுமே பைத்தியத்தின் வகைகள் தான். ஒருவன் வெறுமனே தானாகதான் இருக்க வேண்டும். காமப்பித்துடனும் இருக்கக் கூடாது, மனப்பித்துடனும் இருக்கக் கூடாது. எல்லாச் சூழ்நிலைகளுக்கும் ஏற்புடையவனாக, வாழ்க்கை என்னவெல்லாம் கொண்டு வருகிறதோ, அதையெல்லாம் எதிர் கொள்பவனாகவும், எதையும் ஏற்றுக் கொண்டு வாழ்வதற்கும், ஆனால் அதேசமயம் விழிப்புணர்வுடனும், தன்னுணர்வுடனும், முழுமையாகவும் இருக்க வேண்டும்.

ஆகவே, நீங்கள் இடைவிடாமல் நினைவில் கொள்ள வேண்டிய ஒரு விஷயம் என்னவென்றால், அது தன்னைத் தானே நினைவில் கொள்ளுதல் தான். நீங்கள் உங்களை மறந்துவிடக் கூடாது. மேலும், எப்போதுமே உங்களது ஆத்மாவின் மத்தியில் இருந்து செயலாற்றுங்கள். அங்கிருந்து உங்களது செயல்கள் வழிந்தோடி வரட்டும்; உங்களின் ஆன்மாவின் மையத்திலிருந்து வரட்டும். மேலும், அப்படி நீங்கள் எதைச் செய்தாலும் அது புண்ணியமானதாக இருக்கும்.

புண்ணியம் என்பது விழிப்புணர்வின் செயல்பாடு.

மேற்பரப்பில் இருந்து கொண்டு நீங்கள் ஏதாவது ஒன்றைச் செய்தால், அது பாவச் செயல் போன்று தெரியாது. ஆனால், அது பாவச் செயல் தான். இந்த சமுதாயம் உங்களால் சந்தோஷமாக இருக்கலாம். ஆனால், நீங்கள் உங்களுக்குள் சந்தோஷமாக இருக்க முடியாது. இந்த சமுதாயம் உங்களைப் புகழலாம். ஆனால், உங்களுக்குள் அடி ஆழத்தில் நீங்கள் உங்களை கண்டனம் செய்து கொண்டு தான் இருப்பீர்கள். ஏனெனில், நீங்கள் வாழ்க்கையை தவறவிட்டுவிட்டதை நீங்கள் அறிவீர்கள். மேலும், உங்களது வாழ்க்கையை ஒன்றுமில்லாததற்கு இழந்துவிட்டதையும் அறிந்து கொள்வீர்கள்.

இந்த சமுதாயம் உங்களைப் புகழ்வதில் என்ன மதிப்பு உள்ளது? மக்கள் உங்களை ஒரு புனிதர் என்று அழைப்பதற்கு என்ன அர்த்தம்? அது வெறும் வெட்டிப்பேச்சைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. அது எப்படி முக்கியமானதாக இருக்க முடியும்? எனவே, நீங்கள் வெட்டிப் பேச்சிற்காக உங்களது கடவுள் தன்மையை இழந்துவிட்டீர்கள். உங்களைச் சுற்றி இருக்கின்ற அந்த முட்டாள் ஜனங்களுக்காக, அவர்களின் நல்ல எண்ணத்திற்காக நீங்கள் உங்களது வாழ்க்கையை இழந்துவிட்டீர்கள்.

உங்களது மையத்திலிருந்து வாழுங்கள். அது தான் தியானம் என்பது. மேலும், கொஞ்சம் கொஞ்சமாக உங்களுக்குள் ஒரு ஒழுக்கம்

வருவதை உணர்வீர்கள். ஆனால், அந்தக் ஒழுக்கம் வலுக்கட்டாயமாக உங்கள் மீது திணிக்கப்படாததாக, நீங்கள் பேணி வளர்க்காததாக, உங்களுக்குள் தானாகவே எழுவதாக, இயல்பாகவே ஒரு மலர் மலர்வதைப் போன்றதாக இருக்கும். அதன் பின்னர், உங்களுக்கு இந்த முழு வாழ்க்கையும் கிடைக்கும். மேலும் உங்களுக்கு, உங்களது முழு ஆன்மாவும் கிடைக்கும்.

இப்படி, உங்களது (முழு ஆன்மாவும், முழு வாழ்க்கையும் சந்திக்கும் போது அவைகளுக்கு இடையே எழுவது தான் விடுதலை. அந்த இரண்டிற்கும் இடையே எழுவது தான் முக்தி.)

## எழுச்சி தானே தவிர புரட்சியல்ல

இந்த அரசாங்கங்களை கலைக்கின்ற கட்டத்திற்கு மனிதன் இன்னமும் வரவில்லை. குரோபோட்கின் போன்ற அரசாங்கத்திற்கு எதிரான புரட்சியாளர்கள் இந்த அரசாங்கத்திற்கும், சட்டத்திற்கும் எதிராக இருக்கின்றனர். அவர், இவைகளை கலைத்துவிட விரும்பினார். நானும்கூட அரசாங்கத்திற்கு எதிரான ஒரு எழுச்சியாளன் தான். ஆனால், குரோபோட்தின்னுக்கு முற்றிலும் எதிரான வழியில் செல்பவன்.

இந்த அரசாங்கங்கள் எல்லாம் பயனற்றவையாக ஆகும் அளவுக்கு, நீதிமன்றங்கள் காலியாக இருக்கும் அளவுக்கு, யாரும் கொலை செய்யப்படாமலும், யாரும் கற்பழிக்கப்படாமலும், யாரும் கொடுமைப்படுத்தப்படாமலும் அல்லது துன்புறுத்தப்படாமலும் இருக்கின்ற அளவுக்கு, மனித இனத்தின் தன்னுணர்வை உயர்த்தவே நான் விரும்புகிறேன். இதில் உள்ள வேறுபாட்டினை நீங்கள் கண்ட கொண்டீர்களா? குரோபோட்கின் இந்த அரசாங்கங்களை கலைத்து விடுவதைத் தான் வலியுறுத்துகிறார். நான் வலியுறுத்துவது என்னவென்றால், மனித இனத்தின் தன்னுணர்வை உயர்த்தும் போது இந்த அரசாங்கங்கள் தானாகவே பயனற்றுப் போய்விடும். நீதிமன்றங்கள் மூடப்படும் நிலைக்கு போய்விடும். காவல்துறை மறைந்து போய்விடும். ஏனெனில், அங்கே நீதிபதிகளுக்கு வேலை இருக்காது. எனவே, "வேறு வேலை ஏதாவது பாருங்கள்," என்று கூறும்படி ஆகிவிடும். நான் ஒரு வேறுபட்ட பரிமாணத்தில் அரசாங்கத்திற்கு எதிரான எழுச்சியாளன். முதலில் மக்கள் தயாராகிவிட்டால், இந்த அரசாங்கங்கள் தாமாகவே மறைந்து போய்விடும். நான் இந்த அரசாங்கங்களை அழிப்பதில் ஏற்புடையவன்

அல்ல; அவைகள் சில குறிப்பிட்ட தேவைகளை பூர்த்தி செய்கின்றன. மனிதன் மிகவும் காட்டுமிராண்டித்தனமாக, மிகவும் அசிங்கமாக நடந்து கொள்கிறான். எனவே, அவனை பலாத்காரத்தால் தடுக்கவில்லையென்றால், இந்த முழு சமுதாயமும் குழப்பத்தில் ஆழ்ந்துவிடும்.

நான் குழப்பங்களை ஆதரிப்பவன் அல்ல. இந்த உலகம் முழுவதும் இந்த மனித சமூகமானது ஒரு ஒத்திசைந்த ஒன்றாக, ஒரு மிகப்பெரிய கூட்டமைப்பாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன். மக்கள் எல்லோரும் தியானம் செய்து கொண்டும், எந்தவிதமான குற்ற உணர்வு இல்லாமலும், மக்கள் மிகப்பெரிய அமைதியுடனும், மகிழ்ச்சியில் ஆடிக் கொண்டும், பாடிக் கொண்டும், யாரும் யாரோடும் போட்டி போடுகின்ற ஆசை இல்லாமலும், எல்லோரும் தாங்கள் அமெரிக்காவின் ஜனாதிபதியாக ஆகி தங்களது சிறப்பை உணர்த்த வேண்டும் என்கிற எண்ணத்தை விட்டுவிட்டும், எந்தவிதமான தாழ்வு மனப்பான்மையால் கஷ்டப்படாமலும், யாரும் தான் உயர்ந்தவர் ஆக வேண்டும் என்று விரும்பாமலும், யாரும் தனது மகத்துவத்தைப் பற்றி தம்பட்டம் அடிக்காமலும் வாழ வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.

அப்போது இந்த அரசாங்கங்கள், கதிரவனைக் கண்ட காலைப் பனி போல் மறைந்து போகும். ஆனால், அது ஒரு முற்றிலும் மாறுபட்ட கதை, ஒரு முற்றிலும் மாறுபட்ட அணுகுமுறை. அந்த தருணம் வரும்வரை இந்த அரசாங்கங்கள் தேவை.

இது ஒரு எளிய விஷயம். நீங்கள் நோயுற்று இருந்தால் மருந்து தேவை. குரோபோட்கின் போன்ற புரட்சியாளர்கள் இந்த மருந்துகளை அழித்துவிட வேண்டும் என்று விரும்புகிறார்கள். நான், நீங்கள் ஆரோக்கியமானவர்களாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன். அப்போது, உங்களுக்கு மருந்து தேவைப்படாது. தானாகவே நீங்கள் அவற்றை தூக்கி எறிந்துவிடுவீர்கள். அந்த மருந்துகளை வைத்துக் கொண்டு நீங்கள் என்ன செய்ய முடியும்? அவைகள் முற்றிலும் பயனற்றவை, உண்மையில் ஆபத்தானவை. அநேக மருந்துகள் விஷத்தன்மை கொண்டவைன. என்ன காரணத்திற்காக நீங்கள் அதைச் சேர்த்து வைக்க வேண்டும்? எனவே, நான் கொடுக்கின்ற முக்கியத்துவத்தில் உள்ள வேறுபாட்டினைப் பாருங்கள்.

நான் மருந்துகளுக்கு எதிரானவன் அல்ல. அந்த மருந்துகளை தேவை ஆக்குகின்ற அந்த மனித இனத்தின் நோய்களுக்கு நான் எதிரானவன். நான் ஒரு ஆரோக்கியமான மனிதனை விரும்புகிறேன். இப்போது இது மரபணு பொறியியல் என்கிற துறையின்மூலம்

சாத்தியமாகியுள்ளது. ஒரு மனிதன் நோய் வாய்படாமல் இருக்கும்படி செய்துவிடுகின்ற சாத்தியக் கூறுகள் அதில் உள்ளன. ஏனெனில், அவன் பிறந்ததிலிருந்தே நோய்வாய்ப்படாத அளவுக்கு அவனது மரபணுக்களை திட்டமிட்டுச் செய்துவிடலாம். நோயை எதிர்த்து போராடுவதற்கான ஏற்பாடுகளைச் செய்துவிடலாம். நிச்சயமாக மருந்துகள் மறைந்து போகும். மருந்துக் கடைகள் மறைந்து போகும். மருத்துவர்கள் மறைந்த போவார்கள். மருத்துவக் கல்லூரிகள் மூடப்பட்டுவிடும். நான் அவைகளுக்கு எதிராக இருக்கிறேன் என்பதற்காக அல்ல! மனித இனம் ஆரோக்கியமாக இருப்பதன் விளைவாக அவை நடக்கும்.

நான் ஒரே ஒரு உலகை, ஒரே மொழியை, ஒரே மதத்தன்மையை, ஒரே மனித இனத்தை விரும்புகிறேன். மேலும், மனித இனமானது உண்மையில் தன்னுணர்வில் வளர்ந்துவிட்டால், ஒரே அரசாங்கமும் ஏற்பட வேண்டும் என்று விரும்புகிறேன்.

அரசாங்கம் என்பது, நாம் பெருமையாகச் சொல்லிக் கொள்கின்ற ஒன்று அல்ல. அது ஒரு அவமானம். அது இருப்பது இன்னமும் நீங்கள் காட்டுமிராண்டிகளாகத் தான், நாகரீகம் இல்லாதவர்களாகத் தான் இருக்கிறீர்கள் என்பதைக் காட்டுகிறது. இல்லையெனில், உங்களை ஆள்வதற்கு உங்களுக்கு ஒரு அரசாங்கம் ஏன் தேவைப்படுகிறது?

எல்லாக் குற்றங்களும் மறைந்துவிடும் போது, மற்றவர்கள் நம்மை சுரண்டிவிடுவார்களோ என்கிற பயம் போய்விடும் போது, நீங்கள் இந்த அதிகாரவர்க்கம் நிறைந்த அரசாங்கத்தை வைத்துக் கொண்ட என்ன செய்வீர்கள்? உங்களால் இதைத் தொடர முடியாது. ஏனெனில், அப்போது அது இந்த நாட்டின் பொருளாதாரத்திற்கு ஒரு சுமையாக ஆகிவிடும். அந்தச் சுமை மேலும் மேலும் பெரிதாகிக் கொண்டே போகும். இப்படிப்பட்ட ஆட்சி முறையில் சுமைகள் பெரிதாகிக் கொண்டே போகும். அதற்கு எளிய காரணம் என்னவென்றால், எவரும் வேலை செய்ய விரும்புவதில்லை, எல்லோரும் வேலையை வெறுக்கிறார்கள். எனவே, எல்லோருக்கும் உதவி தேவைப்படுவதால் வேலை வளர்ந்து கொண்டே போகும்.

எல்லா அரசாங்க அலுவலகத்திலும் ஒவ்வொரு மேஜை மீதும் கோப்புகள் அடுக்கி வைத்திருப்பதை நீங்கள் காணலாம். நீங்கள் யாருக்காவது லஞ்சம் கொடுக்காத வரையில், உங்களது கோப்பு அந்த பெரிய குவியலில் எங்கோ ஒரு இடத்தில் இருக்கும். அது ஒருபோதும் மேலே வராது. மேலும், இந்த அதிகாரவர்க்கத்தினர் இப்படி அவர்கள் முன்னால் கோப்புகள் குவிக்கப்பட்டு இருப்பதைப் பார்த்து சந்தோஷப்படுகின்றனர். அது அவர்களை முக்கியத்துவம்

வாய்ந்தவர்களாகவும், சிறப்பு மிக்கவர்களாகவும் ஆக்கிவிடுகிறது. அநேக மக்களிடம் தாங்கள் அதிகாரம் மிக்கவர்களாக இருப்பதாகவும், இந்த கோப்புகள் எல்லாம் மக்கள் மீது தங்களுக்கு உள்ள அதிகாரத்தை காட்டுவதாகவும் அவர்கள் மனதில் நினைக்கின்றனர்.

இந்த பூமியில் இதற்கு முன்பு இருந்த சமுதாயப் புரட்சியாளர்களின் வகையில் இருந்து நான் ஒரு முற்றிலும் வேறுபட்ட எழுச்சியாளன். நான் எனதளவில் ஒரு தனி வகையானவன்; ஏனெனில், எனது அணுகுமுறை முற்றிலும் மாறுபட்டது. நான் இந்த அரசாங்கங்களுக்கு எதிரானவன் அல்ல. இந்த அரசாங்கங்களின் அவசியத்திற்கு எதிரானவன். நான் நீதிமன்றங்களுக்கு எதிரானவன் அல்ல. நான் இந்த நீதிமன்றங்களின் அவசியத்திற்குத் தான் எதிரானவன்.

என்றாவது ஒருநாள், என்றாவது ஒரு காலத்தில், மனிதன் எந்தவிதமான கட்டுப்பாடுகளும், அதாவது மதம் அல்லது அரசியல் இவற்றின் கட்டுப்பாடுகள் எதுவும் இல்லாமல் மனிதன் வாழ்கின்ற தகுதியை அடையக்கூடிய சாத்தியங்களை நான் காண்கிறேன். ஏனெனில், அப்போது அவன் தனக்குத் தானே கட்டுப்பாட்டுடன் இருப்பான்.

ஓஷோ ஒரு கதையில், "குருவைப் பார்க்க வந்த ஒரு சீடன் அவரிடம், மனிதன் விடுதலை பெற்றவனாக இருக்கிறானா என்று கேள்வி கேட்டான்.

அதற்கு அந்த குரு, அந்த சீடனை எழுந்து நிற்கச் சொல்லி அதன் பிறகு அவனது ஒரு காலை தரையை விட்டு மேலே தூக்கிக் கொண்டு நிற்கச் சொன்னார். அந்த சீடனும் ஒரு காலில் நின்றான். மற்றொரு கால் பூமியில் படாமல் காற்றில் இருந்தது. இப்போதும் அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. மேலும் அந்த குரு, சீடனிடம் அந்த ஒரு காலையும் தரையைவிட்டு மேலே தூக்கும்படி கூறுனார்."

இப்போது நீங்கள், எதற்காக விடுதலை, எதிலிருந்து விடுதலை ஆகிய இரண்டிற்கும் இடையே உள்ள வேறுபாடு குறித்து பேச முடியுமா?

எதாவது ஒன்றிலிருந்து விடுதலை பெறுவது என்பது சாதாரணமானது, உலக வார்த்தை சார்ந்தது. மனிதன் எப்போதுமே விஷயங்களில் இருந்து விடுதலை பெறுவதற்கு முயற்சிப்பான். அது படைப்புத்திறன் மிக்கது அல்ல. அது விடுதலை என்பதன் எதிர்மறை நோக்கம். ஏதாவது ஒன்றிற்கான விடுதலை என்பது படைப்பாற்றல் உள்ளது. உங்களுக்கு ஒரு குறிப்பிட்ட பார்வை இருக்கும். நீங்கள்

அந்தப் பார்வையை காரியமாக்க விரும்புவீர்கள். அப்போது நீங்கள் விடுதலை பெற விரும்புவீர்கள்.

(ஏதாவது ஒன்றிலிருந்து விடுதலை என்பது, எப்போதும் கடந்த காலத்திலிருந்து வரும். மேலும், ஏதாவது ஒன்றிற்கான விடுதலை என்பது எப்போதும் எதிர்காலத்திலிருந்து வரும்.)

ஏதாவது ஒன்றிற்கான விடுதலை என்பது ஒரு ஆன்மிக பரிமாணம். ஏனெனில், அப்போது நீங்கள் இதுவரை அறியாத ஒன்றினுள் நகர்ந்து செல்கிறீர்கள். மேலும், ஒருவேளை, ஒருநாள் அறிய முடியாத ஒன்றினுள்ளும் நகர்ந்து செல்லலாம். அது உங்களுக்குச் சிறகுகளைக் கொடுக்கிறது. ஏதாவது ஒன்றிலிருந்து விடுதலை என்பது, மிஞ்சி மிஞ்சிப் போனால், உங்களது கைவிலங்குகளை அகற்றலாம். அது நன்மையானதாக இருக்க வேண்டிய அவசியம் இல்லை. அதற்கு இந்த முழு சரித்திரமும் சாட்சி. நான் இரண்டாவதாக வலியுறுத்துகின்ற அந்த விடுதலையை மக்கள் ஒருபோதும் சிந்தித்ததில்லை. அவர்கள் முதல் வகையைப் பற்றித்தான் சிந்தித்தனர். ஏனெனில், அவர்களால் இரண்டாவது விடுதலையில் உள்ள உண்மைகளைக் கண்டறிய முடியவில்லை. முதல் விடுதலை என்பது அவர்களின் கண்களுக்குத் தெரிவது. கால்களில் விலங்குகள், கைகளிலும் கைவிலங்குகள். அவர்கள் அதிலிருந்து விடுவிக்கப்பட விரும்புகின்றனர். ஆனால், அதன் பிறகு என்ன? அதன்பிறகு, நீங்கள் உங்களது கைகளைக் கொண்டு என்ன செய்யப் போகிறீர்கள்? ஏதோ ஒன்றிலிருந்து விடுதலை பெற வேண்டும் என்று கேட்டதற்காக நீங்கள் மனவருத்தம் கூட படலாம்.

பிரெஞ்சு புரட்சியின் போது, பாஸ்டில் மாளிகையில் நடந்தது இது. அது பிரெஞ்சு நாட்டில் மிகவும் புகழ்பெற்ற சிறைச்சாலை. ஆயுள் தண்டனை பெற்றவர்களுக்காகவே அது ஒதுக்கி வைக்கப்பட்டிருந்தது. எனவே, ஒருவர் உயிருடன் பாஸ்டில் சிறைக்குள் செல்வார். ஆனால், மீண்டும் உயிருடன் வெளியில் வருவதில்லை. உயிரற்ற பிணம் தான் வெளியே கொண்டு வரப்படும். மேலும், அவர்களின் கைகளில் விலங்கிடப்பட்டு, அது ஒரு பூட்டினால் பூட்டப்பட்டு விடும். அதன் பின்னர், அந்தப் பூட்டின் சாவியானது பாஸ்டிலில் உள்ள ஒரு கிணற்றினுள் எறியப்பட்டுவிடும். ஏனெனில், அந்தச் சாவிகள் இனிமேல் தேவைப்படாது. அந்தப் பூட்டுகள் மீண்டும் திறக்கப் போவதில்லை. எனவே, அந்தச் சாவிகளால் என்ன பயன்? அந்தச் சிறையில் ஐயாயிரத்திற்கும் அதிகமானவர்கள் இருந்தனர். எனவே, ஐயாயிரம் சாவிகளை வைத்துக் கொண்டு அவைகளை ஏன் தேவையில்லாமல் பாதுகாக்க வேண்டும்? ஒருமுறை அவர்கள்,

இருட்டு அறைக்குள் நுழைந்துவிட்டால், அதன்பிறகு எப்போதுமே அங்கு தான் இருந்தாக வேண்டும்.

எனவே, பிரெஞ்சுப் புரட்சியாளர்கள் முதல் முதலாக சிந்தித்த விஷயம் என்னவென்றால், அந்த பாஸ்டில் சிறையில் உள்ள மக்களை விடுதலை செய்வது தான். ஒருவரை, அவர் என்ன தவறான காரியம் செய்திருந்தபோதும், அதற்காக அவரை சிறைச்சாலையில் ஒரு இருட்டு அறையில் மரணம் அடையும் வரை காத்திருக்கவைப்பது என்பது மனிதாபிமானமற்றது. அவரது மரணம் ஐம்பது வருடம் கழித்தும் வரலாம் அல்லது அறுபது வருடம் கழித்தும் வரலாம். அறுபது வருடங்கள் காத்திருப்பது என்பது அந்த ஆன்மாவிற்கு மிகப்பெரிய துன்புறுத்தலாக இருக்கும். அது தண்டனை ஆகாது. அது பழிவாங்குதல். ஏனெனில், இந்த மக்கள் சட்டத்திற்குத்தான் கீழ்படியவில்லை. அவர்களது செயலுக்கு, அவர்களுக்கு அளித்த தண்டனை அதிகபட்சமானதாகும்.

புரட்சியாளர்கள் சிறையின் கதவுகளைத் திறந்தனர். அவர்கள், மக்களை அவர்களின் இருட்டு அறைகளில் இருந்து வெளியே இழுத்து வந்தார்கள். ஆனால், அவர்கள் ஆச்சரியப்பட்டனர். அந்த மக்கள் தங்களின் அறைகளை விட்டு வெளியே வரத் தயாராக இல்லை.

நீங்கள் இதைப் புரிந்து கொள்ள முடியும். அறுபது வருடம் இருட்டில் ஒரு மனிதன் வாழ்ந்துவிட்ட பின்னர், சூரிய ஒளி என்பது அதிகமானதாக அவனுக்குத் தெரியும். அவனால் தூங்க முடியாது. அவன் வெளிச்சத்திற்கு வருவதற்கு விரும்ப மாட்டான். அவனது கண்கள் மிகவும் மென்மையானதாக ஆகிவிடும். மேலும், அதில் என்ன உள்ளது? இப்போது அவனுக்கு எண்பது வயதாகியிருக்கும். அவர் உள்ளே நுழைந்த போது அவரது வயது இருபது. அவர் தனது வாழ்நாள் முழுவதும் இருளில் இருந்துவிட்டார். அந்த இருட்டு தான் அவரது வீடாகிவிட்டது.

ஆனால், அந்தப் புரட்சியாளர்கள் அந்த சிறைக் கைதிகளை விடுதலை செய்ய விரும்பினார்கள். அவர்கள் கைதிகளின் கைவிலங்குகளையும், கால் விலங்குகளையும் உடைத்து எறிந்தார்கள். ஏனெனில், அதற்குரிய சாவிகள் இல்லை. ஆனால், அந்த சிறைக் கைதிகள் மிகவும் எதிர்ப்பு காட்டினார்கள். அவர்கள் அந்த சிறைச் சாலையை விட்டு வெளியேற விரும்பவில்லை. அவர்கள், "நீங்கள் எங்களது நிலையைப் புரிந்து கொள்ளவில்லை. அறுபது ஆண்டுகள் சிறையில்இருந்த ஒரு மனிதனால், வெளியில் என்ன செய்ய முடியும்? அவனுக்கு உணவு கொடுப்பது யார்? இங்கே உணவு கொடுக்கப்படுகிறது. அவன் தனது இருட்டு அறையில் ஓய்வெடுக்க

முடியும். அவன் கிட்டத்தட்ட இறந்துவிட்டான் என்பதை அவன் அறிவான். வெளியில் அவன் தனது மனைவியைக் கண்டுபிடிப்பது என்பது முடியாது அல்லது அவளுக்கு என்ன நடந்தது என்பதும் தெரியாது. அவனது பெற்றோர்கள் இறந்து போயிருப்பார்கள். அவனது நண்பர்களும் இறந்து போயிருப்பார்கள் அல்லது அவனை முற்றிலும் மறந்து போயிருப்பார்கள். மேலும், அவனுக்கு யாரும் வேலை கொடுக்கப் போவதில்லை. அறுபது ஆண்டுகள் வேலையே செய்யாமல் இருந்துவிட்ட ஒருவனுக்கு, யார் வேலை கொடுப்பார்கள்? அதுவும் பாஸ்டில் போன்றதொரு மிகவும் கொடூரமானவர்கள் சிறை வைக்கப்பட்டிருந்த இடத்தில் இருந்த ஒருவருக்கு யார் வேலை கொடுப்பார்கள்? பாஸ்டில் சிறையில் இருந்தவன் என்ற பெயர் ஒன்றே போதும், அவனுக்கு வேலை மறுக்கப்படும். ஏன் இப்படி எங்களை கட்டாயப்படுத்துகிறீர்கள்? நாங்கள் எங்கு தூங்குவது? எங்களுக்கு வீடுகள் கிடையாது. நாங்கள் எங்கு வசித்தோம் என்பது கூட எங்களுக்கு மறந்து போய்விட்டது. வேறு யாராவது அங்கு வசிக்கலாம். இந்த அறுபது ஆண்டுகளில் எங்களது வீடுகள், எங்களது குடும்பங்கள், எங்களது நண்பர்கள், எங்களது முழு உலகமும் மாறிப் போயிருக்கும். எங்களால் அதை உருவாக்க முடியாது. எங்களை இன்னும் துன்புறுத்தாதீர்கள். நாங்கள் துன்புறுத்தப்பட்டது போதும்," என்று கூறினார்கள்.

அவர்கள் கூறுவதிலும் அர்த்தம் இருந்தது. ஆனால், புரட்சியாளர்கள் எதையும் சுலபத்தில் விட்டுவிடுபவர்கள் அல்ல. அவர்கள், நாம் சொல்வதைக் கேட்க மாட்டார்கள். அவர்கள், அந்த மக்களை பாஸ்டில் சிறையில் இருந்து வலுக்கட்டாயமாக வெளியேற்றினார்கள். ஆனால், அன்று இரவே எல்லோரும் திரும்ப வந்துவிட்டனர். அவர்கள், "எங்களுக்கு பசி எடுக்கிறது. எனவே, எங்களுக்கு உணவு கொடுங்கள்," என்று கேட்டார்கள்.

நடு இரவில் வந்த சிலர், "எங்களுக்கு மீண்டும் எங்களது விலங்குகளைக் கொடுங்கள். ஏனெனில், அவைகள் இல்லாமல் எங்களால் தூங்க முடியவில்லை. நாங்கள் ஐம்பது, அறுபது வருடங்களாக கைகளில் கைவிலங்குடனும், கால்களில் விலங்குடனும் இருட்டில் தூங்கி வந்திருக்கிறோம். அவைகள் கிட்டத்தட்ட எங்களது உடலில் ஒரு அங்கமாக மாறிவிட்டது. நாங்கள், அவைகள் இல்லாமல் தூங்க முடியாது. எனவே, எங்களது விலங்குகளை திரும்பவும் எங்களுக்குக் கொடுங்கள். மேலும் எங்களுக்கு, எங்களின் இருட்டு அறை தான் விருப்பமானது. நாங்கள் முழுமையான சந்தோஷத்தில் அங்கே இருந்தோம். உங்களது புரட்சியை எங்கள் மீது திணிக்காதீர்கள்.

நாங்கள் ஒன்றுமறியாதவர்கள். நீங்கள், உங்களது புரட்சியை வேறு எங்காவது வைத்துக் கொள்ளுங்கள்," என்று கூறினார்கள்.

புரட்சியாளர்களுக்கு அதிர்ச்சி ஆயிற்று. இந்த நிகழ்ச்சி காட்டுவது என்னவென்றால், ஏதோ ஒன்றிலிருந்து விடுதலை என்பது அவசியம் ஒரு வரப்பிரசாதமாகத் தான் இருக்கும் என்பதல்ல.

இதை நீங்கள் இந்த உலகம் முழுவதிலும் காணலாம்; பிரிட்டிஷ் அரசாங்கத்திடமிருந்து, ஸ்பானிஷ் அரசாங்கத்திடமிருந்து, போர்ச்சுக்கல் அரசாங்கத்திடமிருந்து நாடுகள் விடுதலை அடைந்துவிட்டன. ஆனால், அவைகளின் நிலை அவர்கள் அடிமைகளாக இருந்ததைவிட, இப்போது இன்னும் மோசமாகத் தான் உள்ளது. அவர்களுக்கு, அவர்களின் அடிமைத்தனம் பழகிப் போய்விட்டது. அவர்கள் இலட்சியங்களை விட்டுவிட்டனர். அவர்கள் தங்களது சூழ்நிலையை தங்களின் ஊழ்வினை என்று ஏற்றுக் கொண்டுவிட்டனர்.

ஏதாவது ஒன்றிலிருந்து விடுதலை, வெறுமனே குழப்பத்தை உருவாக்கிவிடும்.

எனது குடும்பம் முழுவதும் இந்தியாவின் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டிருந்தது. அவர்கள் அனைவரும் சிறைக்குச் சென்று வந்தவர்கள். அவர்களின் கல்வி பாதிக்கப்பட்டது. யாரும் பல்கலைக் கழகத்தில் பட்டம் பெற முடியவில்லை. ஏனெனில், அவர்கள் தேர்வில் வெற்றி பெறுவதற்கு முன்பே கைது செய்யப்பட்டு விட்டார்கள். ஒருவர் மூன்று ஆண்டுகள் இருந்தார், ஒருவர் நான்கு ஆண்டுகள் சிறையில் இருந்தார். மேலும் அதன் பின்னர், அவர்கள் மீண்டும் படிப்பைத் தொடர்வதென்பது தாமதமான ஒன்றாக ஆகிவிட்டதால், அவர்கள் உண்மையான புரட்சியாளர் ஆகிவிட்டார்கள். சிறையில் அவர்கள் புரட்சிக்கான தலைவர்கள் எல்லோருடனும் தொடர்பு வைத்திருந்தனர். அதன்பிறகு, அவர்களின் முழு வாழ்க்கையும் புரட்சிக்காக ஒதுக்கப்பட்டுவிட்டது.

நான் அப்போது சிறு பையனாக இருந்தேன். ஆனால், நான் எனது அப்பாவோடும், சித்தப்பாக்களுடனும், "இந்த அடிமைத்தனம் என்பது அசிங்கமானது என்பதை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. அது உங்களது மனித நிலையை தரம் தாழ்த்திவிடுகிறது. அதை எதிர்த்துப் போராட வேண்டியது தான். ஆனால், நான் கூறும் முக்கிய கருத்து என்னவென்றால், நீங்கள் விடுதலை பெற்ற பின்னர் என்ன செய்வீர்கள்? ஏதோ ஒன்றிலிருந்து விடுதலை பெறுவது என்பது தெளிவானது தான். நான் அதற்கு எதிரானவன் அல்ல. நீங்கள் இந்த விடுதலையை வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறீர்கள் என்பதை தெளிவாகப் புரிந்து

கொள்ளவே நான் விரும்புகிறேன். அடிமைத்தனத்தில் வாழ்வது எப்படி என்று உங்களுக்குத் தெரியும். விடுதலையில் வாழ்வது எப்படி என்பதை நீங்கள் அறிவீர்களா? அடிமைத்தனத்தில் சில குறிப்பிட்ட கட்டளைகளுக்கு நீங்கள் பணிந்தாக வேண்டும். இல்லையென்றால், நீங்கள் நசுக்கப்பட்டு விடுவீர்கள், கொல்லப்பட்டு விடுவீர்கள், சுடப்பட்டு விடுவீர்கள். எனவே, விடுதலை பெற்ற பிறகு அந்த ஒழுங்குமுறையை கடைபிடிக்க வேண்டியது உங்களது பொறுப்பு என்பதை நீங்கள் அறிவீர்களா? யாரும் உங்களை கொலை செய்ய மாட்டார்கள். மேலும், வேறு யாரும் அதற்கு பொறுப்பாக இருக்கவும் மாட்டார்கள். நீங்கள் தான் அதற்கு பொறுப்பானவராக இருக்க வேண்டும். நீங்கள் உங்கள் தலைவர்களிடம், எதற்காக இந்த விடுதலை என்று கேட்டிருக்கிறீர்களா?," என்று நான் அவர்களிடம் விவாதிப்பதுண்டு.

ஆனால், நான் ஒருபோதும் இதற்கு பதில் பெறவில்லை. அவர்கள், "இப்போது நாங்கள் அந்த அடிமைத்தளத்திலிருந்து விடுபடுவதில் அதிக ஈடுபாட்டுடன் இருக்கிறோம். விடுதலை அடைந்தவுடன் அதைப் பற்றி நாங்கள் கவனிப்போம்," என்று கூறுவார்கள்.

நான் அவர்களிடம், "இது விஞ்ஞானபூர்வமான நோக்கம் கிடையாது. நீங்கள் ஒரு பழைய வீட்டினை இடிக்கும் போது, நீங்கள் புத்திசாலியாக இருந்தால், நீங்கள் குறைந்தபட்சம் ஒரு புது வீட்டிற்கான வரைபடத்தையாவது தயார் செய்ய வேண்டும். அந்த பழைய வீட்டினை இடிப்பதற்கு முன்பு நீங்கள் ஒரு புதிய வீட்டினை தயார் செய்தால், அது இன்னும் சிறந்ததாக இருக்கும். இல்லையெனில், நீங்கள் வீடு இல்லாமல் இருப்பீர்கள். அதன்பிறகு நீங்கள் கஷ்டப்படுவீர்கள். ஏனெனில், வீடு இல்லாமல் இருப்பதைவிட, அந்த பழைய வீட்டில் இருப்பது மிகவும் நல்லது," என்று கூறுவேன்.

என்னுடைய குடும்பத்தினருடன், இந்திய புரட்சியின் மாபெரும் தலைவர்கள் எங்களோடு தங்குவது வழக்கம். மேலும், இதுதான் அவர்களுடன் நான் இடைவிடாது செய்யும் வாக்குவாதமாக இருந்தது. ஆனால், இந்த விடுதலை கிடைத்தவுடன் அதை வைத்துக் கொண்டு அவர்கள் என்ன செய்யப் போகிறார்கள் என்பதற்கு பதில் கூறிய புரட்சியின் ஒரு தலைவரைக் கூட நான் ஒருபோதும் கண்டதில்லை.

விடுதலையும் வந்தது. லட்சக்கணக்கில் இந்துக்களும், முகமதியர்களும் ஒருவரை ஒருவர் கொன்று குவித்தனர். அவர்கள், ஒருவரை ஒருவர் கொலை செய்வதில் இருந்து பிரிட்டிஷ் படைகள்

காப்பாற்றி வந்தன. ஆனால், அந்தப் படைகள் விலகிய பின்னர், இந்தியா முழுவதிலும் கலகம் ஏற்பட்டது. எல்லோர் வாழ்க்கையும் ஆபத்தானதாக இருந்தது. நகரங்கள் முழுவதும் தீக்கிரையாகின. இரயில்கள் எரிக்கப்பட்டன; மேலும், மக்கள் அந்த எரிகின்ற இரயில் இருந்து வெளியேற அனுமதிக்கப்படவில்லை.

இதைப் பார்த்து நான், "இது ஆச்சரியமாக உள்ளது. அடிமைகளாக இருக்கும் போது இது நடக்கவில்லை; ஆனால், விடுதலை ஆன பின்னர் இது நடக்கிறது. மேலும், இதற்கான காரணம் வெறுமனே நீங்கள் விடுதலை வாழ்க்கைக்கு உங்களை தயார்படுத்திக் கொள்ளாதது தான்," என்று கூறினேன்.

இந்த நாடு இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது. இதை அவர்கள் ஒருபோதும் சிந்திக்கவில்லை. நாடு முழுவதும் குழப்பம் நிலவியது. மேலும், ஆட்சிக்கு வந்த மக்களிடம் ஒரு குறிப்பிட்ட திறமை தான் இருந்தது. அது என்னவென்றால், பாலங்களையும், சிறைகளையும் எரிப்பது. இந்த நாட்டினை அடிமைப்படுத்தியவர்களை கொன்று குவிப்பது. இது தான் அவர்களது திறன். இவர்கள் தான் விடுதலைக்காகப் போராடிய தலைவர்கள்; இயல்பாகவே அவர்கள் ஆட்சிக்கும் வந்துவிட்டனர். அவர்கள் போரிட்டனர், அவர்கள் வெற்றி பெற்றனர். ஆட்சி அதிகாரம் அவர்களின் கைகளில் வந்துவிட்டது. ஆனால், அது தவறானவர்களின் கைகளுக்குத்தான் போய்விட்டது.

எந்த ஒரு புரட்சியாளர்களிடமும் அதிகாரத்தைக் கொடுக்கக் கூடாது. ஏனெனில், அவனுக்கு கொலை செய்வது எப்படி என்று தான் தெரியும். ஆனால், அவனால் ஒன்றை உருவாக்குவது எப்படி என்று தெரியாது; அவனுக்கு எப்படி அழிப்பது என்பது மட்டுமே தெரியும். புரட்சியாளருக்கு மதிப்பு, மரியாதை, தங்கப்பதக்கம், எல்லாம் கொடுக்கலாம். ஆனால், அவனிடம் ஆட்சி அதிகாரத்தை மட்டும் கொடுத்துவிடக் கூடாது.

அப்போது நீங்கள் படைப்பாற்றல்மிக்க மக்களைக் கண்டுபிடிக்க வேண்டும். ஆனால், அத்தகைய மக்கள் புரட்சியில் பங்கு பெற்றிருக்க மாட்டார்கள்.

இது மிகவும் மென்மையான விஷயம். அந்த படைப்பாற்றல் மிக்க மக்கள், தங்களின் படைப்பாற்றலில் கவனத்தை செலுத்திவிட்டதால், அவர்கள், யார் ஆட்சி செய்கிறார்கள் என்பதைப் பற்றிய ஆர்வம் காட்டவில்லை. அவர்கள், தங்களின் சக்தி முழுவதையும் தங்களின் படைப்பாற்றலில் செலவழித்து வந்தனர். ஆகவே, அவர்கள் புரட்சியால் பதவி வகிக்கவில்லை. உண்மையில், அவர்கள் கொள்கைகளைத்

துறந்தவர்கள். இப்படிப்பட்ட மக்கள், ஒருபோதும் புரட்சியில் பங்கு பெறாதவர்கள். எனவே, நீங்கள் இவர்களுக்கு ஆட்சி அதிகாரத்தைக் கொடுப்பீர்களா?

ஆகவே, இந்த உலகில் இதுவரை நடந்த புரட்சிகள் எல்லாம் தோற்றுப் போய்விட்டன. அதற்கான எளிய காரணம் என்னவென்றால், இப்படி புரட்சி செய்கின்ற மக்களிடம் ஒரு வகையான திறமை இருந்தது. ஆனால், ஒரு தேசத்தை உருவாக்கக் கூடிய மக்கள், மக்களிடம் பொறுப்பை உருவாக்கக் கூடியவர்கள், வேறு வகையைச் சேர்ந்தர்களாக இருந்தனர். அவர்கள் அழிப்பு வேலையில், கொலை செய்வதில் பங்கு பெறுவதில்லை. ஆனால், ஆட்சி அதிகாரம், யார் போராடினார்களோ, அவர்களின் கைகளில் போய்விடுகிறது. ஆகவே, இயல்பாகவே ஒவ்வொரு புரட்சியும், நான் சொல்வதைத் தெளிவாகப் புரிந்து கொள்ளாத வரையில், அதனளவில் தோல்வியடையத் தான் செய்யும்.

புரட்சியில் இரண்டு பாகங்கள் உள்ளன. அவை எதிலிருந்து 'இருந்து' மற்றும் 'ஆக எதுவாக' இவைகள் தான். எனவே, இரண்டு வகையான புரட்சியாளர்கள் இருந்தாக வேண்டும். முதலாவது வகையாகிய 'இருந்து' என்பதற்காக, அதாவது எதில் 'இருந்து' விடுதலை அடைய வேண்டும் என்பதற்கு பாடுபடுபவர்களும், அதன்பிறகு அந்த முதல் புரட்சியாளர்களின் வேலை முடிந்தவுடன், விடுதலைக்கு 'ஆக' பாடுபடும் புரட்சியாளர்களாக இருக்க வேண்டும். ஆனால், இப்படி சமாளிப்பது மிகவும் கடினம். இவர்களைச் சமாளிப்பது யார்? ஒவ்வொருவரும் ஆட்சி அதிகாரத்திற்கு முழு வெறி கொண்டு இருக்கிறார்கள். புரட்சி செய்தவர்கள் வெற்றி பெற்றுவிடும் போது, அதிகாரம் அவர்களுடையதாக ஆகிவிடுகிறது. அவர்களால் அதை வேறு யாரிடமும் கொடுக்க முடியாது. எனவே, அந்த நாடு குழப்பத்தில் விழுந்துவிடும். மேலும், ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பரிமாணத்திலும் அது இன்னும் மோசமாகப் போய்விடும்.

அதனால் தான் நான் எந்தவிதமான புரட்சிகளையும் கற்பிப்பதில்லை. நான், உங்களுக்கு எழுச்சியைத் தான் கற்பிக்கிறேன். புரட்சி என்பது கூட்டத்தினுடையது; எழுச்சி என்பது தனி மனிதனுடையது. தனி மனிதன், தன்னை மாற்றிக் கொள்கிறான். அவன் இந்த அதிகார அமைப்பைப் பற்றி கவலைப்படுவதில்லை; அவன் வெறுமனே தனது இருப்பு நிலையை மாற்றிக் கொண்டு, தன்னை சரி செய்து கொள்கிறான். தனக்குள்ளாக ஒரு புதிய மனிதன் பிறப்பதற்கு வழி செய்கிறான். எனவே, இப்படி இந்த முழு தேசமும் எழுச்சியோடு இருக்க ஆரம்பித்தால் ... ...

இதில் உள்ள மிகவும் அற்புதமானதொரு விஷயம் இது தான். அதாவது, இந்த எழுச்சியில் இரண்டு வகைப்பட்ட புரட்சியாளர்களும் கலந்து கொள்ளலாம். ஏனெனில், எழுச்சி என்பதில் நிறைய அழிக்கப்பட வேண்டும். அதே சமயம், நிறைய உருவாக்கப்பட வேண்டும். உருவாக்குவதற்காகவே விஷயங்கள் அழிக்கப்பட வேண்டும். எனவே, இது எல்லோருக்கும் பிடிக்கும். அதாவது, அழிப்பதில் விருப்பம் உள்ளவர்கள் யாராயினும், அதே போன்று படைப்பதில் விருப்பம் உள்ளவர்கள் யாராயினும், அவர்கள் எல்லோருக்கும் எழுச்சி என்பது பிடித்துப் போகும்.

இது ஒரு கூட்டம் சம்பந்தப்பட்ட விஷயம் அல்ல. இது, உங்களது சொந்த தனி மனிதத் தன்மை. மேலும், பல லட்சம் மக்கள் இப்படி எழுச்சியின் வழியே சென்றால், அதன்பிறகு ஆட்சி அதிகாரம், நாடு இப்படிப்பட்ட மக்களின் கைகளுக்குப் போய்விடும். எழுச்சியாளர்களாகிய இவர்களிடம் போய்விடும். எழுச்சியின் மூலம் மட்டுமே புரட்சிகள் வெற்றி காண முடியும். அது இல்லாதபோது புரட்சியில், இரண்டு பட்ட தனி மனிதத் தன்மை வந்துவிடுகிறது.

எழுச்சி என்பது ஒன்றுதான் அது இரண்டு பட்டதல்ல.

மேலும், இதையும் நினைவில் கொள்ளுங்கள். எழுச்சியில் அழித்தலும், படைத்தலும் ஒன்றாகக் கைகோர்த்து, ஒன்றுக்கொன்று ஆதரவாகச் செல்லும். அவைகள் இரண்டும், இரண்டு தனித்தனி செயல்முறைகளாக இருக்காது. ஆனால், நீங்கள் அதை தனித்தனியாக பிரித்துவிட்டால், அதாவது புரட்சியில் உள்ளது போல் பிரித்துவிட்டால், நீங்கள் பழைய கதையை மீண்டும் திரும்பவும் செய்ய வேண்டியது தான்.

நீ கேட்ட கேள்வியில் உள்ள கதை இன்னும் முடியவில்லை. அது ஒரு அழகான, மறைஞானம் மிகுந்த கதை.

ஒரு மனிதன், எந்த அளவுக்கு சுதந்திரமானவன், விடுதலை பெற்றவன் என்று கேட்பதற்கு அவன் ஒரு குருவிடம் வருகிறான். அவன் முழுமையாக சுதந்திரமாக இருக்கிறானா அல்லது அங்கே ஏதேனும் வரையறைகள் இருக்கிறதா? இந்த விதி, ஊழ்வினை இதைப் போன்று ஒரு வரையறைக்கு மேல் நீங்கள் போக முடியாதபடி கடவுள் போன்ற ஏதோ ஒன்று உள்ளதா?

அந்த ஞானி, அவருக்கே உரித்தானதொரு வழியில் பதில் கூறுகிறார். அவர் தர்க்கவாதத்தின் மூலம் அல்லாமல், செயல்முறையில் பதில் கூறுகிறார். "எழுந்து நில்," என்று அவர் கூறுகிறார்.

அந்த மனிதன் இதை ஒரு முட்டாள்தனமான பதிலாக எண்ணியிருக்க வேண்டும். "நான் இவரிடம் ஒரு சிறிய கேள்வி

கேட்டால், "இதற்கு இவர் என்னை எழுந்து நிற்கச் சொல்கிறாரே," என்று நினைத்திருக்க வேண்டும். ஆனாலும் கூட, அவன், "என்ன தான் நடக்கிறது என்று பார்க்கலாம்," என்று எண்ணிக் கொண்டு, அவன் எழுந்து நின்றான்.

இப்போது அந்த ஞானி, "உன்னுடைய ஒரு காலை தரையில் இருந்து மேலே தூக்கு," என்றார்.

அந்த ஆள் இதற்குள்ளாக, தான் ஒரு பைத்தியத்திடம் வந்து மாட்டிக் கொண்டதாக நினைத்திருப்பான். இப்படிச் செய்வதற்கும், சுதந்திரத்திற்கும், விடுதலைக்கும் என்ன தொடர்பு உள்ளது? ஆனால், இப்போது அவன் அங்கு வந்து கேள்வி கேட்டுவிட்டான். மேலும், அந்த ஞானி மிகவும் மரியாதைக்குரியவர் என்பதால், அங்கே சீடர்களின் கூட்டம் வேறு இருந்தது. எனவே, அவருக்கு மரியாதை கொடுக்காவிட்டால், அவர் சொல்வதைக் கேட்காவிட்டால், அது தவறாகிவிடும். எனவே, அவன் ஒரு காலை தரையில் இருந்து தூக்கி வைத்துக் கொண்டு, ஒரு காலில் நின்று கொண்டிருந்தான்.

அதன் பிறகு அந்த குரு, "இது மிகவும் நல்லது. இன்னும் ஒரு விஷயம் செய்யவேண்டும். இப்போது அந்த அடுத்த காலையும் மேலே தூக்கு," என்று கூறினார்.

அது முடியாது! அந்த ஆள் குருவிடம், "நீங்கள் முடியாத ஒன்றை என்னிடம் கேட்கிறீர்கள். நான் எனது வலது காலை மேலே தூக்கினேன். இப்போது என்னால், எனது இடது காலையும் தூக்க முடியாது," என்றான்.

அதற்கு அந்த குரு, "ஆனால், நீ சுதந்திரமாகத் தானே இருக்கிறாய். முதலில் நீ இடது காலை தூக்கியிருக்கலாம் அல்லவா. அங்கு யாரும் உன்னை கட்டிப் போடவில்லை. வலது காலை தூக்குவதா அல்லது இடது காலை மேலே தூக்குவதா என்பதைத் தேர்ந்தெடுப்பதற்கு உனக்கு முழுச் சுதந்திரம் இருந்தது. நான் அதைப் பற்றி எதுவும் கூறவில்லை. நீ தான் முடிவெடுத்தாய். நீ தான் வலது காலை மேலே தூக்கினாய். உனது அந்த முடிவின் மூலமாக, உனது இடது காலை நீ மேலே தூக்க முடியாதபடி நீ செய்துவிட்டாய். எனவே கடவுள், விதி, ஊழ்வினை இவற்றைப் பற்றி கவலைப்படாதே. வெறுமனே எளிய விஷயங்களை சிந்தித்துப் பார்," என்றார்.

நீங்கள் செய்கின்ற எந்த ஒரு செயலும், வேறு ஒரு செயலைச் செய்வதில் இருந்து உங்களைத் தடுத்துவிடும். அது, அதற்கு எதிரானதாகப் போய்விடும். எனவே, ஒவ்வொரு செயலும் ஒரு வரையறைக்குட்பட்டது. இந்தக் கதையில் அது மிகவும் தெளிவாக

உள்ளது. வாழ்க்கையில் இது மிகவும் தெளிவாக இருப்பதில்லை. ஏனெனில், ஒரு கால் பூமியிலும், ஒரு கால் காற்றிலும் இருப்பதால், உங்களால் பார்க்க முடிவதில்லை. ஆனால் ஒவ்வொரு செயலும், ஒவ்வொரு முடிவும் வரையறைக்குட்பட்டது.

எந்த முடிவும் எடுப்பதற்கு முன்பு நீங்கள் முற்றிலும் சுதந்திரமானவர்கள். ஆனால், நீங்கள் முடிவெடுத்துவிட்டால், உங்களது அந்த முடிவே, உங்களது அந்த தேர்வே உங்களுக்கு ஒரு வரையறையைக் கொண்டுவந்து விடும். ஆனால், வேறு யாரும் அந்த முடிவை உங்கள் மீது திணிக்கவில்லை. அது விஷயங்களின் இயல்பாகும். உங்களால் முரண்பாடான விஷயங்களை ஒரே நேரத்தில் சேர்ந்து செய்ய முடியாது. மேலும், அப்படி நீங்கள் செய்ய முடியாமல் இருப்பது மிகவும் நல்லது. இல்லையெனில், நீங்கள் ஏற்கனவே குழப்பத்தில் இருக்கிறீர்கள், இப்போது நீங்கள் இன்னும் அதிக குழப்பத்தில் இருப்பீர்கள். நீங்கள் பைத்தியமாகிப் போய்விடுவீர்கள். இது, நீங்கள் வெறுமனே உயிர் வாழ்வதற்கானதொரு பாதுகாப்பு ஏற்பாடு.

'அடிப்படையில் எதையும் தேர்ந்தெடுப்பதற்கான முழுச் சுதந்திரம் உங்களுக்கு உண்டு. ஆனால், நீங்கள் தேர்ந்தெடுத்துவிட்டால், அதன்பின்னர் உங்களது அந்தத் தேர்வே ஒரு வரைமுறையைக் கொண்டு வந்துவிடும்.'

அடிப்படையில் எதையும் தேர்ந்தெடுப்பதற்கான முழுச் சுதந்திரம் உங்களுக்கு உண்டு. ஆனால், நீங்கள் தேர்ந்தெடுத்துவிட்டால், அதன்பின்னர் உங்களது அந்தத் தேர்வே ஒரு வரைமுறையைக் கொண்டு வந்துவிடும்.

ஆகவே, நீங்கள் முற்றிலும் சுதந்திரமானவராக இருக்க விரும்பினால், அதன்பின்னர் எதையும் தேர்வு செய்யாதீர்கள். இங்கு தான் எதையும் தேர்வு செய்யாத விழிப்புணர்வு என்னும் போதனை உள்ளே வருகிறது. மிகப்பெரிய குருமார்கள் 'எதையும் தேர்ந்தெடுக்காமல், வெறுமனே அப்படியே விழிப்புணர்வுடன் இரு' என்று வலியுறுத்துவது ஏன்? ஏனெனில், நீங்கள் ஏதாவது ஒன்றைத் தேர்ந்தெடுத்த அந்த நொடிப் பொழுதிலேயே, நீங்கள் உங்களது சுதந்திரத்தை இழந்துவிட்டீர்கள். நீங்கள் ஒரே ஒரு பகுதியோடு மட்டுமே விட்டுவிடப்படுகிறீர்கள். ஆனால், நீங்கள் எதையும் தேர்வு செய்யாமல் இருந்திருந்தால், உங்களது சுதந்திரம் முழுமையாக இருக்கும்.

ஒரே ஒரு விஷயம் மட்டுமே முற்றிலும் சுதந்திரமானது. அது என்னவென்றால், எதையும் தேர்வு செய்யாததொரு விழிப்புணர்வு தான் அது. மற்றவையெல்லாம் வரையறைக்குட்பட்டது.

நீ ஒரு பெண்ணை காதலிக்கிறாய். அவள் அழகாக இருக்கிறாள், ஆனால் ஏழை. நீ பணத்தை விரும்பலாம். வேறு ஒரு பெண்ணிடம் அதிக பணம் இருக்கலாம். ஆனால் அசிங்கமாக, அருவருப்பாக இருக்கலாம். இப்போது நீ தான் தேர்ந்தெடுக்க வேண்டும். நீ எதைத் தேர்வு செய்தாலும், நீ கஷ்டப்படத் தான் வேண்டும். நீ அழகாக இருக்கின்ற அந்த ஏழைப் பெண்ணைத் தேர்வு செய்தால், நீ எப்போதும் தேவையில்லாமல் நாம், நமக்கு கிடைக்கவிருந்த செல்வத்தை இழந்துவிட்டோமே என்று மனம் வருந்துவாய். ஏனெனில், அந்த அழகு கொஞ்ச நாட்களில் உனக்குப் பழக்கப்பட்டு விடுவதால், நீ அதை ஏற்றுக் கொண்டுவிட்டதால், திரும்பவும் நீ அதைப் பார்க்க மாட்டாய். மேலும், அழகை வைத்துக் கொண்டு நீ என்ன செய்ய முடியும்? உன்னால் அதை வைத்து ஒரு கார் வாங்க முடியாது, உன்னால் ஒரு வீட்டை வாங்க முடியாது, உன்னால் எதையும் வாங்க முடியாது. இப்போது உனது அழகைக் கொண்டு நீ உனது தலையில் அடித்துக் கொள்ள வேண்டியது தான். நீ என்ன செய்ய முடியும்? எனவே, இப்போது உனது மனம், உனது தேர்வு தவறு என்று நினைக்க ஆரம்பித்துவிடும்.

ஆனால், நீ அந்த அசிங்கமான பெண்ணைத் தேர்வு செய்தால், உனக்கு எல்லாவற்றையும் வாங்குவதற்கான பணம் கிடைக்கும். நீ அரண்மனை, வேலைக்காரர்கள், எல்லா இயந்திரங்களையும் வாங்கலாம். ஆனால், நீ அந்தப் பெண்ணை சகித்துக் கொண்டு தான் ஆக வேண்டும். சகித்துக் கொள்வதோடு மட்டுமல்ல, அவளிடம், "நான் உன்னை நேசிக்கிறேன்," என்றும் கூற வேண்டும். மேலும், உன்னால் அவளை வெறுக்கவும் கூட முடியாது. அவள் அந்த அளவுக்கு அருவருப்பாக இருப்பாள். வெறுப்பதற்கும்கூட ஒருவருக்கு மிகவும் அருவருப்பில்லாத ஒருவர் தேவை. ஏனெனில், வெறுப்பு என்பது ஒரு உறவு. மேலும், உன்னால் அந்த கார்களையும், அந்த அரண்மனைகளையும், அந்த தோட்டங்களையும் சந்தோஷமாக அனுபவிக்கவும் முடியாது. ஏனெனில், அந்தப் பெண்ணின் அருவருப்பான முகம் இடைவிடாமல் உன்னைத் தொடர்ந்து வரும். மேலும், அவளுக்கும், நீ அவளைத் திருமணம் செய்து கொள்ளவில்லை; அவளது செல்வத்தைத் தான் திருமணம் செய்து கொண்டாய் என்பதை அறிவாள். எனவே, அவள் உன்னை ஒரு வேலைக்காரனைப் போன்று தான் நடத்துவாளேயொழிய, ஒரு காதலனாக நடத்த மாட்டாள். மேலும், இதுதான் உண்மை. நீயும் அவளை விரும்பவில்லை. அதன்பிறகு நீ

உட்கார்ந்து கொண்டு ஏழைக் குடிசையும், சாதாரண உணவும் இருந்தாலே இன்னும் நன்றாக இருந்திருக்கும் என்று சிந்திக்க ஆரம்பித்து விடுவாய். அப்போது, உனது மனைவி மட்டுமாவது அழகாக இருந்திருப்பாள், நீயும் சந்தோஷத்தை அனுபவிப்பாய். இதைத் தேர்ந்தெடுத்தால் நீ ஒரு முட்டாள் ஆகிவிட்டாய்.

இப்படி நீ எதைத் தேர்ந்தெடுத்தாலும், நீ தேர்ந்தெடுக்காமல் விட்ட அந்த அடுத்தது அப்படியே இருப்பதால், உன்னை அதற்காக ஏக்கம் கொள்ள வைத்து, உனக்கு மனவருத்தத்தைக் கொடுத்துவிடும்.

ஒருவனுக்கு முழுமையான சுதந்திரம் வேண்டுமென்றால், அதன்பிறகு எதையும் தேர்வு செய்யாத விழிப்புணர்வு மட்டுமே பதிலாக இருக்கும்.

மேலும், நான் உங்களிடம் புரட்சிக்குப் பதிலாக எழுச்சி கொள்ளுங்கள் என்று கூறுதன் மூலம், நான் உங்களை ஒரு முழுமையானவராக ஆக்குவதற்கு நெருக்கத்தில் கொண்டு வருகிறேன். புரட்சியில் நீங்கள் இரண்டாகப் பிரிந்தே ஆகவேண்டும். ஒன்று, ஏதோ ஒன்றிலிருந்து அல்லது ஏதோ ஒன்றிற்காக அந்தப் புரட்சி இருக்கும். உங்களால் அந்த இரண்டையும் வைத்திருக்க முடியாது. ஏனெனில், அவைகள் இரண்டிற்கும் வேறுபட்ட திறமை தேவை. ஆனால், எழுச்சி என்பதில் அந்த இரண்டு குணங்களும் ஒன்றாக இணைந்து இருக்கும்.

ஒரு சிற்பி சிலையை செதுக்கும் போது, அவன் இரண்டையும் செய்கிறான். அவன் அந்தக் கல்லை, அது எப்படி இருக்கிறதோ அப்படியே வைக்காமல், அதை வெட்டி வெட்டி எறிகிறான். ஆனால், அப்படி அவன் வெட்டி எறிவதன் மூலம், அவன் முன்பு அங்கு இல்லாத ஒரு புதிய சிலையை உருவாக்குகிறான். அழித்தலும், படைத்தலும் ஒன்றாகவே செல்கின்றன; அவைகள் பிரிக்கப்படுவதில்லை.

எழுச்சி என்பது முழுமையானது.

புரட்சி என்பத பாதியானது தான். மேலும், அப்படி பாதி அளவுடன் இருப்பது தான் புரட்சியில் உள்ள ஆபத்தாகும். புரட்சி என்கிற வார்த்தை அழகானது தான். ஆனால், நூற்றாண்டு காலமாக அது இரண்டுபட்ட மனதோடு சம்பந்தப்பட்டுவிட்டது. மேலும், நான் எல்லாவிதமான பிளவுகளுக்கும் எதிரானவன். ஏனெனில், அவைகள் உங்களை மனச்சிதைவு உள்ளவர்களாக ஆக்கிவிடும்.

எனவே, அடிமைத்தனத்திலிருந்து விடுதலை பெற்ற எல்லா நாடுகளும் இப்போது எண்ணிப் பார்க்க முடியாத துன்பத்தில் ஆழ்ந்து கொண்டிருக்கின்றன. அவர்கள் அடிமைகளாக இருந்த போது இருந்ததைப் போல் அவர்கள் இப்போது இல்லை. மேலும், அவர்கள்

மூந்நூறு நானூறு ஆண்டுகளாக அடிமைகளாக இருந்துவிட்டனர். அந்தக் காலக்கட்டத்தில் அவர்கள் இத்தகைய துன்பத்தை எதிர் கொண்டதில்லை. ஆனால், வெறுமனே சில பத்தாண்டுகளில் அவர்கள் மிகவும் நரக வாழ்க்கை வாழ்ந்து வருகின்றனர். மேலும், அவர்கள், "நாம் ஏன் விடுதலைக்காகப் போராடினோம்? இதுதான் விடுதலை என்றால், அதன்பிறகு அந்த அடிமைத்தனமே இன்னும் மேலானது," என்று ஆச்சரியப்படுகின்றனர். அடிமைத்தனம் ஒருபோதும் சிறந்தது அல்ல. இது ஏன் இப்படி உள்ளதென்றால், மக்கள் தாங்கள் பாதி விடுதலையைத் தான் தேர்ந்தெடுத்து இருக்கிறோம் என்பதை இன்னமும் அறியாதது தான் காரணம்.

நீங்கள் விடுதலையின் மறுபாதியையும் சாதிக்க முடியும். ஆனால், இந்த புரட்சியைக் கொண்டு வந்த அதே மனிதர்களை வைத்துக் கொண்டு நீங்கள் அதைச் செய்ய முடியாது. அடுத்த பகுதிக்கு முற்றிலும் வேறுபட்ட புத்திசாலித்தனமும், ஞானமும் தேவை. மேலும் கொலைகளையும், அணுகுண்டுகளையும் வீசி எறிந்து இரயில்கள், காவல் நிலையங்கள், தபால் நிலையங்கள் ஆகியவற்றை தீயிட்டு கொளுத்திய அந்தப் புரட்சியாளர்கள் இப்போது தேவைப்பட மாட்டார்கள்.

எனது குடும்பத்தில் எனது தாத்தா மட்டுமே, எனது சித்தப்பாக்களை பல்கலைக் கழகத்திற்கு அனுப்புவதற்கு எதிராக இருந்தார். எனது அப்பா தான் எப்படியோ சமாளித்து அவர்களை அங்கே அனுப்பினார். எனது தாத்தா எங்களிடம், "உங்களுக்குத் தெரியாது. இந்தப் பையன்களை நான் புரிந்து வைத்திருக்கிறேன். நீ இவர்களை பல்கலைக் கழகத்திற்கு அனுப்புவாய். ஆனால், அவர்கள் சிறைச்சாலையில் போய் இருப்பார்கள். இப்போதுள்ள சூழ்நிலை அப்படித்தான் உள்ளது," என்று கூறுவார்.

அநேகவிதமான புரட்சிகள் மாணவர்களால், இளைஞர்களால், வாழ்க்கையைப் பற்றி ஒன்றும் அறியாதவர்களால் நடத்தப்படுகிறது. அவர்கள் எதையும் அனுபவித்துப் பார்க்கவில்லை. ஆனால், அவர்களிடம் சக்தி உள்ளது. அவர்களிடம் வீரியம் உள்ளது. அவர்கள் இளைஞர்களாக இருப்பதால், விடுதலை பெற வேண்டும் என்கிற ஆசைக் கனவை அவர்கள் கொண்டிருப்பார்கள். அவர்கள் எல்லாவற்றையும் செய்வார்கள். வெடிகுண்டுகளைச் செய்வது, அவற்றை வீசி அதிகார வர்க்கத்தினரையும், அரசியல்வாதிகளையும் கொல்வது ஆகிய எல்லாவற்றையும் செய்வார்கள். இப்படி அவர்கள் இதையெல்லாம் செய்துவிட்டபின். அவர்கள் சிறையில் இருந்து விடுதலை பெற்றவுடன், அவர்கள் தங்களுக்கு மிகவும் சக்தி இருந்தும்

அதைப் பயன்படுத்துகின்ற திறன் தங்களிடம் இல்லாமலிருப்பதை திடீரென்று கண்டனர். அவர்களுக்குப் புத்திசாலித்தனமும் கிடையாது. எனவே, அதை என்ன செய்வது? அவர்கள் பாசாங்கு செய்ய ஆரம்பித்தார்கள். அவர்கள், ஒரு கற்பனை உலகை அனுபவித்தார்கள். மேலும், இந்த நாடும் சிறிது காலம் அதை அனுபவித்தது. ஏனெனில், இப்போது நமது சொந்த மக்கள் தான் அதிகாரத்தில் உள்ளனர்! ஆனால், விரைவில் அவர்கள் ஒருவருக்கொருவர் சண்டையிட ஆரம்பித்துவிட்டனர்.

புரட்சியில் சில பிரச்சனைகள் உள்ளன - அவை எப்போதும் இருக்கும் என்று நான் நினைக்கிறேன் - அந்தப் புரட்சியானது ஒரு வகையான மக்களால் மட்டுமே நடத்தப்படுகிறது. மேலும், எல்லா அதிகாரமும் அவர்களின் கைக்கு வந்துவிடும். அதிகார போதை என்பது மனிதனுக்குள்ளது தான். புரட்சியாளர்கள் இந்த அதிகாரத்தை வேறு யாரிடமும் கொடுத்துவிட விரும்ப மாட்டார்கள். ஆனால், அதைத் தான் நாம் செய்ய வேண்டும். படைப்பாற்றல் மிக்க, புத்திசாலித்தனம் மிக்க, புதிய மனிதர்களை கண்டுபிடிக்க வேண்டும். அவர்களால் தான் இந்த தேசத்திற்கு புதிய தொழில்நுட்பங்களையும், நவீன வேளாண்மை முறைகளையும் கொண்டு வருவதற்கு உதவ முடியும். அவர்கள் தான், இந்த நாட்டில் புதிய தொழில்களை அறிமுகப்படுத்த முடியும். அவர்கள் தான், உலக நாடுகளின் முதலீட்டிற்கு இந்த நாட்டின் கதவுகளைத் திறக்க முடியும்.

ஆனால், இதற்கு நேர் எதிர்மாறாக இந்தியாவில் நடந்தது. இந்த நாடு ஒவ்வொரு நாளும் கீழே விழுந்து கொண்டே போயிற்று. அது அழிய ஆரம்பித்தது. மேலும் அது அழிந்து கொண்டே போனது. ஆனால், அதிகாரத்தில் தவறான மனிதர்கள் இருக்கிறார்கள் என்கிற எளிய உண்மையை யாரும் ஒரு முக்கிய கருத்தாகக் கொள்ளவில்லை.

எனவே, இந்தப் புரட்சியாளர்களுக்கு வெறும் மரியாதையைக் கொடுங்கள், பரிசுகளைக் கொடுங்கள், வெகுமதிகளைக் கொடுங்கள், பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட்ட பெரிய சான்றிதழ்களைக் கொடுங்கள். அவர்கள், அதை தங்களின் வீடுகளில் மாட்டி வைக்கட்டும். ஆனால், அவர்களிடம் ஆட்சி அதிகாரத்தை மட்டும் கொடுத்துவிடாதீர்கள்.

இப்படி, இந்த புரட்சிகளின் அழிவுச் சூழ்நிலையைப் பார்த்த பிறகு தான் நான் இந்த எழுச்சி என்பதைப் பற்றி, அதாவது அது தனி மனிதன் சம்பந்தப்பட்டது என்பதால், அதைப் பற்றி சிந்திக்க ஆரம்பித்தேன். மேலும், தனி மனிதன் ஒருவன் தனது அழிக்கும் ஆற்றலையும்,

படைக்கும் ஆற்றலையும், தனது எதையும் தேர்வு செய்யாத விழிப்புணர்வில் கொண்டு வந்து ஒன்று சேர்த்து, அவற்றிற்குள் ஒரு இசைவை உருவாக்கும் தகுதி பெற்றவனாக இருப்பான்.

மேலும், இது போன்று அநேக மக்கள் இந்த எழுச்சியின் மூலம் தெளிவு பெற்றால் போதும், அவர்களால் அவர்களுக்குள்ளேயே ஒரு புதிய மனிதனை வெளிக் கொண்டுவர முடியும். அதன் பிறகு பிரச்சனைகளை தீர்ப்பது கடினமாக இருக்காது. இந்த எழுச்சி என்பது யாருக்கும் எதிராக அல்ல, இது உங்களின் சொந்த கட்டுப்பாடுகளுக்கும், கண்டிப்புகளுக்கும் எதிரானதாகத் தான் இருக்கும்.

புரட்சி என்பதை இந்தக் காலத்திற்கு ஒத்து வராததாக ஆக்க வேண்டும்.

நீங்கள் கஷ்டப்பட்டு போராடுவதன் மூலம், இந்த உலகையும், இந்த சூழ்நிலையையும் உங்களால் மாற்றிவிட முடியும் என்று நினைக்கிறீர்களா? நீங்கள் எந்த மனிதர்களுக்கு எதிராகப் போராடிக் கொண்டிருக்கிறீர்களோ, அந்த மக்களைப் போன்றே நீங்களும் மாறி விடுவீர்கள். இது வாழ்க்கையின் அடிப்படை விதி. உங்களது எதிரிகளை மிகவும் கவனமாகத் தேர்ந்தெடுங்கள். நண்பர்களை எந்தக் கவனமும் இல்லாமல் தேர்ந்தெடுக்கலாம். நண்பர்களைப் பற்றி கவலைப்பட ஒன்றும் இல்லை. ஏனெனில், அவர்கள் உங்களது எதிரிகள் உங்கள் மீது கொண்டிருக்கும் அதே தாக்கத்தை இவர்களும் கொண்டிருப்பதில்லை. நீங்கள் உங்களது எதிரிகளோடு மிகவும் கவனமாக இருக்க வேண்டும். ஏனெனில், நீங்கள் அவரோடு போராட வேண்டும். போரிடும் போது, நீங்களும் அதே போர்த் தந்திரங்களையும், யுக்திகளையும் கையாள வேண்டும். மேலும், அந்த தந்திரங்களையும், யுக்திகளையும் ஆண்டாண்டு காலமாக பயன்படுத்த வேண்டும். அவைகள் உங்களை கட்டுப்படுத்திவிடும். இப்படித்தான் காலம் காலமாக நடந்து வருகிறது.

ரஷ்யாவை கம்யூனிஸ்டுகள் ஆள்வதற்கு முன்காக, அதை ஆண்டு வந்த ஜார் மன்னர்களை விடவும், தான் ஆபத்தானவர் என்று ஜோசப் ஸ்டாலின் நிரூபித்துவிட்டார். இது ஏன்? ஏனெனில் ஸ்டாலின், ஜார் மன்னர்களிடமிருந்து அவர்களின் அந்த தந்திரங்களைக் கற்றுக் கொண்டார். ஜார்களோடு போராடும் போது, அவர்கள் உபயோகித்த அதே யுக்திகளை இவரும் கற்றுக் கொண்டார். அவர் வாழ்நாள் முழுவதும் அவர், ஜார்களுக்கு எதிராக போராடிக் கொண்டும், வன்முறைகளை பயிற்சி செய்து கொண்டும் இருந்தார். மேலும், அவர் அதிகாரத்திற்கு வரும் போது ஸ்டாலின் ஒரு ஜார் ஆகவே மாறிவிட்டார். இன்னும் சொல்லப் போனால், அவர்களைவிடவும் அதிக

ஆபத்தானவராக அவர் ஆகிவிட்டார். ஏனெனில், அவர் ஜார்களை எதிர்த்துப் போரிட்டு வெற்றி பெற்றுவிட்டார். அவர், அவர்களைவிடவும் அதிக சூழ்ச்சியுடனும், அதிக வன்முறையுடனும், அதிக ஆசையுடனும், அவர் ஒரு மாக்கியவெல்லி போல் ஆகிவிட்டார். அப்படி இல்லையென்றால், அவரால் ஜார்களை எதிர்த்து வெற்றி பெறுவது சாத்தியமாகி இருக்காது.

மேலும், அவர் இன்னும் மிகப்பெரிய அளவில் செய்தார்; அவர் எல்லா ஜார்களையும் தோற்கடித்தார். ஜோசப் ஸ்டாலின் ஒருவனே செய்த படுகொலைகளைக் கணக்கிட்டால், எல்லா ஜார்களும் ஒன்றாகச் சேர்ந்து செய்த படுகொலைகளும் வன்முறைகளும் ஒரு போதும் அதிகமானதல்ல. ஸ்டாலின் மிகவும் நன்றாக கற்றுக் கொண்டார். மேலும், புரட்சியின் தலைவராகிய லெனினிற்கு அவர் விஷம் கொடுத்ததாக சந்தேகப்படுகிறார்கள். லெனின் உடல்நலம் குன்றி இருந்தார். எனவே, அவருக்கு மருந்து என்ற பெயரில் கொஞ்சம் கொஞ்சமாக விஷம் கொடுக்கப்பட்டு அவர் கொல்லப்பட்டார். லெனின் உயிரோடு இருந்திருந்தால், அதன்பிறகு ஜோசப் ஸ்டாலின் அதிகாரத்தில் மூன்றாவது ஆளாக இருந்திருப்பார். ஏனெனில், இரண்டாவதாக லியோன் டிராட்ஸ்கி என்பவர் இருந்தார். எனவே, ஸ்டாலினின் முதல் முன்னுரிமை லெனினை அழிப்பதாக இருந்தது. அவர், லெனினைக் கொன்றார். அதன்பிறகு, இரண்டாவதாக கொல்ல வேண்டியது டிராட்ஸ்கியை. அதையும் அவர் செய்தார். அதன்பிறகு, ஸ்டாலின் அதிகாரத்தை கைப்பற்றினார். மேலும், அவர் அதிகாரத்திற்கு வந்தவுடன், அவர் ஒவ்வொருவராகக் கொலை செய்ய ஆரம்பித்தார். பொலிட் பீரோவில் உள்ள எல்லா அங்கத்தினர்கள் மற்றும் போகப் போக கம்யூனிஸ்ட் தலைவர்களில் உயர் பதவியில் இருப்பவர்களையும் கொன்றார். ஏனெனில், அவர்கள் அனைவருக்கும் அவரின் அந்த தந்திரம் தெரியும். எனவே, அவர்களை இல்லாமல் செய்துவிட்டார்.

இப்படி, இந்த உலகின் எல்லாப் புரட்சிகளிலும் நடந்துள்ளது. இந்த உலகம் மிகவும் அழகானது. ஆனால், இது தவறான கைகளில் உள்ளது. ஆனால், நான் இப்படிக் கூறுவதால், நீங்கள் அதே தவறான கைகளுக்கு எதிராக போராட ஆரம்பியுங்கள் என்று அர்த்தமல்ல. நான் கூறுகின்ற அர்த்தம் என்னவென்றால், தயவுசெய்து நீங்கள் அந்தத் தவறான கையாக இருந்துவிடாதீர்கள். அவ்வளவு தான்.

நான் புரட்சியை கற்பிக்கவில்லை. நான் எழுச்சியை கற்பிக்கிறேன். மேலும், இரண்டிற்கும் இடையே உள்ள வேறுபாடு மிகவும் பெரியது. புரட்சி என்பது அரசியல் சார்ந்தது. எழுச்சி என்பது மதம் சம்பந்தப்பட்டது. புரட்சிக்கு நீங்கள் உங்களை ஒரு கட்சியாக, ஒரு

ராணுவமாக அமைத்துக் கொண்டு, எதிரிகளுக்கு எதிராகப் போராட வேண்டும். எழுச்சி என்றால், நீங்கள் ஒரு தனிப்பட்ட மனிதனாக எழுச்சி பெற்று, வெறுமனே இந்த முழு வேட்கையிலிருந்து வெளியேறிவிடுவீர்கள். குறைந்தபட்சம், நீங்களாவது இந்த இயற்கையை அமுக்காமல் இருப்பீர்கள்.

மேலும், இன்னும் அதிகமான மக்கள் வெளியேறிவிட்டால், இந்த உலகம் காப்பாற்றப்படும். அது தான் அரசியல் அல்லாத, உண்மையான புரட்சியாக இருக்க முடியும். அது ஆன்மிகப் புரட்சியாக இருக்கும். மேலும், அதிக மக்கள் இப்படிப்பட்ட பழைய மனம் மற்றும் அதன் வழியில் இருந்து வெளியேறிவிட்டால், அதிக மக்கள் அன்புடனும், ஆசையற்றும், பேராசையற்றும் இருந்தால், அதிக மக்கள் இனிமேல் இந்த அதிகாரம், அரசியல், புகழ், மரியாதை இவற்றில் ஆர்வம் இல்லாமல் இருந்தால், இந்த உலகம் காப்பாற்றப்படும். மேலும், மக்கள் அதிக அளவில் இந்த நாற்றமடிக்கும் பழைய விளையாட்டை விட்டுவிட்டு வெளியேறி, தாங்கள் சுயமாகவே வாழ ஆரம்பித்துவிட்டால் போதும். இது பழைமைக்கு எதிரான போராட்டம் அல்ல, இது வெறுமனே பழைமையின் பிடியில் இருந்து விடுபடுவது தான். மேலும், இது ஒன்று தான் அந்த பழைமையை பலவீனப்படுத்துகின்ற ஒரே வழி, அதை அழிப்பதற்கான ஒரே வழி இது மட்டும் தான்.

லட்சோப லட்சம் மக்கள் இப்படி அரசியல்வாதிகளின் கைகளில் இருந்து விடுபட்டுவிட்டால், இந்த அரசியல்வாதிகள் தாமாகவே உயிரற்றுப் போய்விடுவார்கள். நீங்கள் அவர்களோடு போராட முடியாது. அப்படி நீங்கள் போரிட்டால், நீங்களும் கூட ஒரு அரசியல்வாதி ஆகிவிடுகிறீர்கள். நீங்கள், அவர்களுக்கு எதிராகப் போராடினால், நீங்கள் பேராசை பிடித்தவராகவும், லட்சியவாதியாகவும் ஆகிவிடுகிறீர்கள். அது உங்களுக்கு உதவாது.

அதிலிருந்து வெளியேறியவராக நீங்கள் இருங்கள். மேலும், உங்களுக்கு உள்ளது இந்த சிறிய வாழ்க்கை. இதில் இன்னும் ஐம்பது, அறுபது, எழுபது வருடங்கள் இங்கு இருக்கலாம். எனவே, நீங்கள் இந்த உலகத்தை மாற்றிவிடப் போவதாக நம்பிக்கை கொள்ள முடியாது. ஆனால், நீங்கள் இந்த உலகில் இன்னமும் சந்தோஷத்தையும் அன்பையும் அனுபவிக்க முடியும் என்று நம்பிக்கை கொள்ளலாம்.

இந்த வாழ்க்கை அளித்துள்ள சந்தர்ப்பத்தை எந்த அளவுக்குப் பயன்படுத்த முடியுமோ, அந்த அளவுக்கு பயன்படுத்திக் கொண்டாடுங்கள். இதை போராட்டத்திலும், எதிர்ப்பிலும் வீணாக்காதீர்கள்.

நான் ஒரு அரசியல் சக்தியை உருவாக்கவில்லை. அது ஒருபோதும் கிடையாது. எல்லா அரசியல் புரட்சிகளும் முழுமையான தோல்வி அடைந்துவிட்டன. எனவே, அதை கண் இல்லாத குருடர்கள் மட்டுமே நம்பிக் கொண்டிருப்பார்கள். கண்கள் உள்ள ஒருவர் உங்களுக்குப் புதியதாக ஏதோ ஒன்றினை கற்பித்துத் தான் ஆக வேண்டும். இது ஒரு புதியது. இது முன்பும் நடந்துள்ளது. ஆனால், மிகப்பெரிய அளவில் நடக்கவில்லை. நாம் இப்போது இதை மிகப்பெரிய அளவில் செய்ய வேண்டும். பல லட்சம் மக்கள் வெளியேறி வரவேண்டும். வெளியேறி நீங்கள் வாருங்கள் என்று நான் கூறுவது, நீங்கள் இந்த சமுதாயத்தை விட்டு வெளியேறி மலைகளுக்குப் போய் வசியுங்கள் என்கிற அர்த்தத்தில் அல்ல. நீங்கள் தொடர்ந்து இந்த சமுதாயத்தில் வாழுங்கள். ஆனால், நீங்கள் லட்சியங்களையும், பேராசைகளையும், வெறுப்புணர்வையும் விட்டுவிடுங்கள். இந்த சமுதாயத்தில் வாழ்ந்து கொண்டே அன்பாக இருங்கள், ஒன்றும் இல்லாதவராக வாழுங்கள். அதன்பின்னர், உங்களால் சந்தோஷத்தை அனுபவிக்கவும், கொண்டாடவும் முடியும். மேலும், இப்படி நீங்கள் சந்தோஷத்தை அனுபவிப்பதாலும், கொண்டாடுவதாலும் நீங்கள் அந்த பேரானந்தத்தின் அதிர்வலைகளை மற்றவர்களுக்கும் பரப்ப முடியும்.

இந்த முறை நாம் இந்த உலகத்தை மாற்றி அமைக்க முடியும். ஆனால், போராட்டத்தினால் அல்ல. நடந்தது வரை போதும். நாம் இந்த உலகினை கொண்டாட்டத்தின் மூலமும், ஆடல், பாடல், சங்கீதம், தியானம், அன்பு இவற்றின் மூலம் மாற்றியமைக்க வேண்டும், போராட்டத்தால் அல்ல.

புதுமை இங்கு வருவதற்கு, பழைமை நிச்சயமாக இல்லாமல் போக வேண்டும். ஆனால், தயவுசெய்து நான் கூறுவதை தவறாக அர்த்தம் செய்து கொள்ளாதீர்கள். நிச்சயமாக இந்த பழைமை இல்லாமல் போக வேண்டும். ஆனால், இந்தப் பழைமை உங்களுக்கு உள்ளே தான் இருக்கிறதேயொழிய, உங்களுக்கு வெளியே இல்லை. இந்த சமுதாயத்தின் நான் பழைய அமைப்பைப் பற்றி பேசவில்லை. உங்களது மனதின் பழைய அமைப்புகள் இல்லாமல் போனால் தான், புதியவை உள்ளே வர முடியும் என்று கூறுகிறேன் நான். மேலும், ஒரு தனி நபர் பழைய மன அமைப்பில் இருந்து வெளியேறினாலே போதும், அது அநேகம் பேர் தங்களது வாழ்க்கையை மாற்றம் செய்வதற்கான மாபெரும் இடத்தை உருவாக்கிவிடும். அது கற்பனை செய்ய முடியாததாகவும், நம்ப முடியாததாகவும் இருக்கும். ஒரு தனி மனிதன் மாற்றம் பெறுவது, அந்த மாற்றத்தை தூண்டிவிடுவதாக இருக்கும். அதன் பின்னர், இன்னும் அநேகம் பேர் மாற்றம் அடைய ஆரம்பிப்பார்கள். அவரது இருப்பு எல்லோருக்கும் ஒரு கிரியா ஊக்கி ஆகிவிடும்.

நான் கற்பிக்கும் எழுச்சி இதுதான். நீங்கள் இந்த பழைய அமைப்பில் இருந்து வெளியேறி வாருங்கள். இந்த பழைய பேராசையில் இருந்து வெளியேறுங்கள். இந்த பழைய கருத்துக்களில் இருந்து வெளியேறுங்கள். நீங்கள் ஒரு அமைதியான, தியானம் செய்கின்ற, அன்பு செலுத்துகின்ற மனிதராக ஆகிவிடுங்கள். நீங்கள் இன்னும் அதிக நடனத்துடன் இருந்து பாருங்கள். அதன்பிறகு என்ன நடக்கிறது?. கூடிய விரைவில் யாராவது ஒருவர் நிச்சயமாக உங்களோடு சேர்ந்து நடனமாடுவார். அதன்பிறகு, இன்னும் அதிக மக்கள் உங்களோடு சேர்ந்து நடனமாடுவார்கள்.

நான் எந்தவிதமான அரசியல் கற்பிதங்களும் இல்லாதவன். நான் அரசியலுக்கு முற்றிலும் எதிரானவன். ஆம், புதியது உள்ளே வரவேண்டும் என்றால், பழையது வெளியே செல்ல வேண்டியது தான். ஆனால், அந்தப் பழமை என்பது 'உங்களுக்குள்' இல்லாமல் போக வேண்டும். அதன்பிறகு, புதியது அங்கே வந்துவிடும். மேலும், அந்தப் புதியது உங்களுக்குள் வந்துவிட்டால், அந்தப் புதியது தொற்று நோய் போன்று பரவிவிடும். அது மற்றவர்களுக்கும் பரவிவிடும்.

சந்தோஷம் என்பது தொற்றிப் பரவுவது! சிரியுங்கள், அதன்பிறகு மற்றவர்களும் சிரிப்பதைக் காண்பீர்கள். அதே போன்று தான் துக்கமும். நீங்கள் சோகமாக இருந்தால், உங்கள் சோக முகத்தை பார்க்கின்ற ஒருவரும் சோகமாகிவிடுவார். நாம் அனைவரும் தனித்தனியானவர்கள் அல்ல; நாம் அனைவரும் ஒன்று சேர்ந்தே இருக்கிறோம். ஆகவே, யாராவது ஒருவரின் இதயம் சிரிக்கும் போது இன்னும் அநேக அடுத்த இதயங்களும் அதனால் வருடப்படுகின்றன. சில வேளைகளில் வெகுதொலைவில் உள்ள இதயங்களும் கூட வருடப்படும். நீங்களும் வெகு தொலைவில் இருந்து இங்கு வந்திருக்கிறீர்கள். எப்படியோ எனது சிரிப்பு உங்களை வந்துசேர்ந்திருக்கிறது. எப்படியோ எனது அன்பு உங்களை வந்துசேர்ந்திருக்கிறது. எப்படியோ ஒரு புதிரான வழியில் எனது ஆன்மா உங்களது ஆன்மாவைத் தீண்டியுள்ளது. எனவே தான் நீங்கள் பலவிதமான இன்னல்களுக்கு இடையே இங்கு வந்திருக்கிறீர்கள்.

ஆனால், நீங்கள் ஏதாவது ஒன்றிற்கு எதிராக போராட வேண்டும் என்று நான் கற்பிக்கவில்லை. ஏதாவது ஒன்றிற்கு எதிராக நீங்கள் போராடும் போது, நீங்கள் ஒரு எதிர்வினை செய்பவராக ஆகி விடுகிறீர்கள். ஏனெனில், இது ஒரு எதிர் வினை. நீங்கள் ஏதோ ஒன்றின் மீது பற்று வைக்கிறீர்கள். அதன்பிறகு, அதற்கு எதிராக ஆகிவிடுகிறீர்கள். அதனால், நீங்கள் எதிராக இருக்கின்ற அந்த விஷயம் உங்களை ஆதிக்கம் செலுத்த ஆரம்பிக்கிறது. ஒருவேளை, அது

எதிர்மறையான வழியில் இருக்கலாம். ஆனால், அது ஆதிக்கம் செலுத்தியே தீரும்.

பிரட்ரிக் நீட்சே, இயேசு கிறிஸ்துவிற்கு மிகவும் எதிர்ப்பானவராக இருந்தார். ஆனால், எனது கூற்று என்னவென்றால், பிரட்ரிக் நீட்சே அவர்கள் இயேசு கிறிஸ்துவினால் மிகவும் கவரப்பட்டிருந்தார். அதனால் தான் அவர், அவருக்கு எதிராகத் திரும்பினார். அவர் ஏசுவின்மீது அதீத ஆசையோடு இருந்தார். அவர் தானும் இயேசு கிறிஸ்து போன்று ஆக வேண்டும் என்று அவர் முயற்சி செய்தார். அவரது மாபெரும் புத்தகமாகிய "Thus Spake Zarathustra" என்பது ஒரு புதிய சுவிசேஷத்தை உருவாக்குகின்ற முயற்சி தான். அவர் பயன்படுத்திய மொழி, உருவகங்கள், அந்தக் கவிதை நயம் நிச்சயமாக நமக்கு இயேசு கிறிஸ்துவை நினைவுக்கு கொண்டு வரும். ஆனால், நீட்சே ஏசுவுக்கு அதிக எதிர்ப்பானவராக இருந்தார். அவர் ஒரு போதும் எந்த ஒரு சந்தர்ப்பத்தையும் விடவில்லை. அவருக்கு இயேசுவை கண்டனம் செய்ய வேண்டிய சந்தர்ப்பம் வந்தால், அவர் உடனே அவரை கண்டனம் செய்வார். ஆனால் அவர் மீண்டும் மீண்டும் இயேசுவை நினைவூட்டுவதை ஒருவர் நன்றாக உணர முடியும். மேலும், அவர் தனது இறுதிக்கட்டத்தில் மனநிலை பாதிக்கப்பட்ட போது, தனது கடிதங்களில் "Anti Christ Fredrick Neetzsche" என்று கையெழுத்துப் போட ஆரம்பித்தார். அவர் மனநிலை பாதிக்கப்பட்ட போதும் கூட அவரால் இயேசுவை மறக்க முடியவில்லை. முதலில் "Anti Christ" என்று எழுதிவிட்டு, அதன்பின்னர் தான் தனது பெயரை கையெழுத்தாகப் போடுவார். இதில் நீங்கள் அவரது அதீத ஆசையைக் காணலாம். அவரது வாழ்நாள் முழுவதும் அவரிடம் ஆதிக்கம் செலுத்திய அந்த இயேசு மீதான பொறாமையை நீங்கள் காணலாம். அந்த பொறாமை, அவரது அபரிமிதமான படைப்பாற்றலை அழித்துவிட்டது. அவர் ஒரு எழுச்சியாளராக இருந்திருக்க வேண்டும். ஆனால் அவர், தன்னை ஒரு எதிர் வினையாற்றுபவராக தரம் தாழ்த்திக் கொண்டார். அவர் இந்த உலகிற்கு புதியது ஏதோ ஒன்றைக் கொண்டு வந்திருக்க வேண்டும். ஆனால், அவரால் முடியவில்லை. அவர் இயேசுவிடம் அதீதமான பற்று வைத்துவிட்டார்.

நான் எதற்கும், யாருக்கும் எதிரானவன் அல்ல. நீங்கள் ஏதோ ஒன்றிலிருந்து விடுதலை பெறுவதையும் நான் விரும்பவில்லை. நீங்கள் வெறுமனே விடுதலை அடைய வேண்டும் என்று தான் நான் விரும்புகிறேன். இதில் உள்ள வேறுபாட்டைப் பாருங்கள். ஏதோ ஒன்றிலிருந்து விடுதலை பெறுவது ஒருபோதும் முழுமையாக இருக்காது. அதில் உள்ள "இருந்து" என்பது, அதை அதன் கடந்த காலத்தோடு கட்டிப் போட்டுவிடுகிறது. ஏதோ ஒன்றிலிருந்து பெறும் விடுதலை, ஒருபோதும் உண்மையான விடுதலையாக இருக்க முடியாது.

# தடைக் கற்களும், படிக்கற்களும்

## கேள்விகளுக்கான பதில்கள்

சமுதாயம், அரசியல், பொருளாதாரம் என்று இங்கே அநேக விதமான விடுதலை உள்ளது. ஆனால், அவைகள் எல்லாம் மேற்பரப்பில் உள்ளவை மட்டுமே. உண்மையான விடுதலை என்பது அதற்கு முற்றிலும் வேறுபட்ட பரிமாணத்தைக் கொண்டது. அது இந்த வெளி உலகத்தோடு சம்பந்தமே இல்லாதது. அது உங்களுக்குள் எழுவது. அது எல்லா விதமான கண்டிப்புகள், மதம், கொள்கைகள், அரசியல், தத்துவங்கள் ஆகியவற்றிலிருந்து விடுதலை அடைவது.

மற்றவர்களால் உங்கள் மீது திணிக்கப்பட்டவையெல்லாம், உங்களை கட்டிப் போடுகிறது. விலங்கு மாட்டுவது போல் ஆகிறது. உங்களை சிறைப் படுத்துகிறது. உங்களை ஆன்மீகத்தில் ஒரு அடிமையாக ஆக்கிவிடுகிறது.

தியானம் என்பது இது போன்ற எல்லாத் தடைகளையும், எல்லாக் கண்டிப்புகளையும் அழிப்பது, உங்களது முழு சிறைச்சாலையையும் அழித்துவிடுவது. எனவே, நீங்கள் மீண்டும் திறந்த வெளியில், இந்த வானம் மற்றும் நட்சத்திரங்களுக்கு அடியில், இந்த இயற்கைக்கு உரியவராக நீங்கள் மாறிவிடுவீர்கள்.

> சுதந்திரமாக இருப்பதற்கான பொறுப்பினை நீ ஏற்றுக் கொள்ளும் அளவுக்கு, ஒருங்கிணைந்து இருக்கும் போது மட்டுமே உனது விடுதலை என்பது சாத்தியமாகும். இந்த உலகம் சுதந்திரமானதாக இல்லை. ஏனெனில், மக்கள் முதிர்ச்சி பெற்றவர்களாக இல்லை.

இயற்கைக்கு நீங்கள் கிடைக்கின்ற அந்த நொடிப் பொழுதிலேயே இந்த இயற்கையும் உங்களுக்கு கிடைக்கும். இந்த இரண்டு விதமான கிடைத்தல்களின் சந்திப்பு தான் முடிவான பேரானந்தம் ஆகும். ஆனால், இது விடுதலையில் மட்டுமே நடக்க முடியும். விடுதலை என்பது தான் மிகவுயர்ந்த மதிப்பு; அதைவிட உயர்ந்தது எதுவும் இல்லை.

**ஒருபுறம், நாம் என்ன செய்ய வேண்டும் என்று நினைக்கிறோமோ அதைச் செய்வதற்கான சுதந்திரம் நமக்கு இருக்க வேண்டும் என்று கூறுகிறீர்கள். ஆனால் மறுபுறம் நாம் எல்லாவற்றிற்கும் பொறுப்பை எடுத்துக் கொள்ள வேண்டும் என்றும் கூறுகிறீர்கள். பொறுப்பு என்பதோடு என்னால், 'விடுதலை' என்கிற வார்த்தையை நான் விரும்பியபடி உபயோகிக்க முடியவில்லை. நீங்கள் கூறுவது என்ன என்பதை நான் புரிந்து கொள்ளும் போது, நான் மிகவும் நன்றியுணர்வு கொள்கிறேன். ஆனால், சுதந்திரம் என்பதை, எதையும் செய்வதற்கான உரிமம் என்று தான் நான் அறிகம் பார்க்கிறேன்.**

மனித இனத்திடம் என்றுமே தீர்ந்து போகாத கேள்விகளுள் இதுவும் ஒன்று. அதுவே விடுதலையும், பொறுப்பும், நீ விடுதலை அடைந்துவிட்டால், இப்போது உனக்கு எந்த பொறுப்பும் கிடையாது என்கிற அர்த்தத்தில் தான் அதை நீ மொழி மாற்றம் செய்து கொள்கிறாய். நூறு ஆண்டுகளுக்கு முன்பு பிரட்ரிக் நீட்சே, "கடவுள் இறந்துவிட்டார். எனவே, மனிதன் விடுதலை ஆகிவிட்டான்," என்று கூறினார். மேலும், அவர் எழுதிய அடுத்த வாக்கியம் என்னவென்றால், "இப்போது நீங்கள் என்ன செய்ய விரும்புகிறீர்களோ, அதையெல்லாம் செய்யாமல், அங்கே பொறுப்பு என்பதே கிடையாது. கடவுள் இறந்துவிட்டார். எனவே, மனிதன் விடுதலை அடைந்துவிட்டான். அங்கு பொறுப்பு ஒன்றும் கிடையாது," என்பதாகத்தானே ஆகும். அங்கே நீட்சே முற்றிலும் தவறாகச் கூறிவிட்டார். கடவுள் என்பவர் இல்லையென்றாகிவிடும் போது, அங்கே உனது தோள்களில் மிகப்பெரிய பொறுப்பு வந்து அமர்ந்து விடும். கடவுள் இருக்கிறார் என்னும் போது, அவர் உனது பொறுப்புகளை பகிர்ந்து கொள்ள முடியும். நீ உனது பொறுப்புகளை அவர் மீது சுலபமாகப் போட்டுவிடலாம். நீ அவரிடம், "நீங்கள் தான் இந்த உலகை உண்டாக்கினீர்கள். நீங்கள் தான் என்னை இந்த வழியில் ஆக்கிவிட்டீர்கள். எனவே இறுதியாக, முடிவாக நீங்கள் தான் பொறுப்பாளி, நான் அல்ல என்று கூறமுடியும். நான் எப்படி பொறுப்பாளி ஆகமுடியும்? நான் வெறுமனே படைக்கப்பட்ட ஒரு பொருள். நீங்கள் தான் படைப்பாளி. ஆரம்பத்திலேயே நீங்கள் ஏன் எனக்குள் களங்கத்தின் விதைகளையும்,பாவத்தின் விதைகளையும் போட்டீர்கள்? நீங்கள் தான் பொறுப்பு. நான் சுதந்திரமானவன்," என்று கூறிவிட முடியும். உண்மையில், கடவுள் என்று ஒருவர் இல்லையென்றால், அதன்பின்னர் மனிதன் அவனது செயல்களுக்கு முழுப் பொறுப்பானவன் ஆகிவிடுவான். ஏனெனில், அங்கே உனது பொறுப்பை யார் மீதும் இறக்கி வைப்பதற்கு வழியே இருக்காது.

எனவே, உன்னிடம் நீ சுதந்திரமானவன் என்று நான் கூறும் போது, நீ தான் பொறுப்பாளி என்கிற அர்த்தத்தில் தான் கூறுகிறேன். உனது பொறுப்புகளை நீ யார் மீதும் தூக்கி எறிய முடியாது. நீ தனியாக இருப்பாய். மேலும், நீ எதைச் செய்தாலும் அது உன்னுடைய பொறுப்பு தான். வேறு யாரோ தான் உன்னை இப்படிச் செய்யும்படி நிர்பந்தித்தார்கள் என்று நீ கூற முடியாது. ஏனெனில், நீ சுதந்திரமானவன். உன்னை யாரும் நிர்பந்திக்கவும் முடியாது! நீ சுதந்திரமானவனாக இருப்பதால், எதையும் செய்ய வேண்டுமா அல்லது கூடாதா என்று முடிவெடுக்க வேண்டியதும் நீ தான். விடுதலை என்பதோடு பொறுப்பும் வந்துவடுகிறது. விடுதலை என்பதே பொறுப்பு தான். ஆனால், மனமோ மிகவும் சூழ்ச்சியானது; மனம் அதை தனக்கே உரிய சொந்த வழியில் மொழிமாற்றம் செய்து கொள்கிறது. அது எதைக் கேட்க வேண்டும் என்று நினைக்கிறதோ, அதைத் தான் அது எப்போதும் கேட்கும். அது, தனது சொந்த வழியில் தான் விஷயங்களை மொழிமாற்றம் செய்து கொண்டே போகும். இந்த மனமானது ஒருபோதும் உண்மையிலேயே எது சத்தியம் என்பதைப் புரிந்து கொள்ளாது. அது ஏற்கனவே அந்த முடிவை எடுத்து விடுகிறது.

"டாக்டர், நான் ஒரு மரியாதைக்குரிய மனிதன். ஆனால், இப்போது கொஞ்ச காலமாக எனது வாழ்க்கை குற்ற உணர்வுகளாலும், என்னை நானே குற்றம் சாட்டிக் கொள்பவனாகவும் உணர்வதால், மிகவும் தாங்க முடியாததாக ஆகிவிட்டது," என்று கூறினார், மீண்டும் அந்த நோயாளி, டாக்டரிடம், "இங்கே பாருங்கள், நான் சமீபகாலமாக சிறுமிகளின் அடிப்பாகத்தை அன்புடன் தடவவும், கிள்ளவும் வேண்டும் என்கிற கட்டுப்படுத்த முடியாத உந்துதலுக்கு ஆளாகிவிட்டேன்," என்று துக்கத்துடன் மென்று விழுங்கி கொண்டே கூறினார்.

"அன்பானவரே," என்று கூறி அவரைத் தடவிக் கொடுத்த மனநல மருத்துவர், அவரிடம் ஆறுதலாக, "நாங்கள் உங்களது இந்த துரதிர்ஷ்டவசமான உந்துதலை விட்டொழிப்பதற்கு நிச்சயமாக உதவ வேண்டும். இது எவ்வளவு கவலை தரக் கூடியது என்பதை என்னால் உணர முடிகிறது ... ....," என்றார்.

இதற்கிடையே அவசரமாக ஆர்வத்துடன் குறுக்கிட்ட அந்த நோயாளி, "டாக்டர், நான் எனது அந்த உந்துதலை விட்டொழிக்க விரும்பவில்லை. ஆனால், எனது குற்ற உணர்வைத் தான் நான் விட்டொழிக்க விரும்புகிறேன்," என்றார்.

எனவே, மக்கள் விடுதலையைப் பற்றி பேசிக் கொண்டே போகிறார்கள். ஆனால், அவர்கள் சரியான விடுதலையை

விரும்புவதில்லை. பொறுப்பில்லாமல் இருப்பதைத் தான் அவர்கள விரும்புகிறார்கள். அவர்கள் விடுதலை வேண்டும் என்று கேட்கின்றனர். ஆனால், அவர்களுக்குள் அடி ஆழத்தில், பொறுப்பில்லாமல் இருப்பதற்கும், தாங்கள் விரும்பியதைச் செய்கின்ற உரிமத்தையும் தான் விரும்புகின்றனர்.

விடுதலை என்பது முதிர்ச்சி; உரிமம் என்பது குழந்தைத்தனம். சுதந்திரமாக இருப்பதற்கான பொறுப்பினை நீ ஏற்றுக் கொள்ளும் அளவுக்கு, ஒருங்கிணைந்து இருக்கும் போது மட்டுமே உனது விடுதலை என்பது சாத்தியமாகும். இந்த உலகம் சுதந்திரமானதாக இல்லை. ஏனெனில், மக்கள் முதிர்ச்சி பெற்றவர்களாக இல்லை. பல நூற்றாண்டுகளாக புரட்சியாளர்கள் அநேக விஷயங்களில் முயற்சி செய்து பார்த்துவிட்டார்கள். ஆனால், அவைகள் எல்லாம் தோல்வியடைந்துவிட்டன. கற்பனை சமுதாயத்தை உருவாக்க நினைப்பவர்கள், எப்போதுமே இந்த மனிதனை எப்படி சுதந்திரமானவனாக ஆக்குவது என்று ஆழ்ந்து சிந்தித்து வந்துள்ளனர். ஆனால், யாரும் இதுபற்றி கவலைப்படவில்லை. ஏனெனில், மனிதன் தனக்குள் ஒரு ஒருங்கிணைப்பு இல்லாமல், அவன் சுதந்திரமானவனாக இருக்க முடியாது. ஒரு புத்தர் மட்டுமே சுதந்திரமானவராக இருக்க முடியும். ஒரு மகாவீரர், ஒரு கிறிஸ்து, ஒரு முகம்மது இவர்கள் தான் விடுதலை பெற்றவராக இருக்க முடியும். ஒரு ஜாதுஷ்ட்ரர் தான் சுதந்திரமானவராக இருக்க முடியும். ஏனெனில், விடுதலை என்றால், இப்போது அந்த மனிதர் விழிப்புடன் இருக்கிறார் என்று அர்த்தம். நீ விழிப்புணர்வுடன் இல்லாத போது, இந்த அரசாங்கம், காவல்துறை, நீதிமன்றங்கள் ஆகியவை உனக்கு தேவை. அதன் பின்னர், உனது சுதந்திரம் துண்டிக்கப்பட வேண்டும். சுதந்திரம் என்பது பெயரளவில் தான் இருக்கும். உண்மையில், அது இல்லவே இல்லை. அரசாங்கம் என்ற ஒன்று இருக்கும் போது, சுதந்திரம் என்பது எப்படி இருக்க முடியும்? அது சாத்தியப்படாது. ஆனால், அதற்காக என்ன செய்வது?

அரசாங்கங்கள் மறைந்து போனால், அங்கே சர்வாதிகாரம் தான் இருக்கும், சுதந்திரம் இருக்காது. இப்போது இருப்பதைவிடவும், இன்னும் மோசமானதொரு நிலையாக அது ஆகிவிடும். அது, சுத்த பைத்தியக்காரத்தனமாகும். நீங்கள் உஷாராக இல்லாததால் தான் காவல்துறை தேவைப்படுகிறது. இல்லையெனில், சாலைகளின் சந்திப்பில் ஒரு காவல்காரர் ஏன் நிற்க வேண்டும்? மக்கள் உஷாராக இருந்தால், இந்தக் காவல்காரர்களை அகற்றிவிடலாமே. . ஏனெனில், அவர் அப்போது தேவையற்றவராக ஆகிவிடுவார். ஆனால், மக்கள் தன்னுணர்வுடன் இல்லாததால்தான், காவல்காரர் தேவைப்படுகிறார்.

ஆகவே, நான் 'விடுதலை' என்று கூறும்போது, பொறுப்புள்ளவராக இருங்கள் என்கிற அர்த்தத்தில் தான் சொல்கிறேன். எந்த அளவுக்கு நீ அதிக பொறுப்புடன் இருக்கிறாயோ, அந்த அளவுக்கு நீ அதிக சுதந்திரத்துடன் இருப்பாய்; அந்த அளவுக்கு நீ பொறுப்பை எடுத்துக் கொள்வாய். அதன்பிறகு, நீ என்ன செய்கிறாய் என்பதைப் பற்றியும், நீ என்ன சொல்கிறாய் என்பதைப் பற்றியும், நீ மிகவும் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும். நீ உனது சிறு உடல் அசைவைக்கூட விழிப்புடன் செய்ய வேண்டும். ஏனெனில், இங்கே உன்னைக் கட்டுப்படுத்துவதற்கு யாரும் கிடையாது. நீ சுதந்திரமானவன் என்று நான் கூறும் போது, நீயும் ஒரு கடவுள் தான் என்கிற அர்த்தத்தில் கூறுகிறேன். விடுதலை என்பது ஒரு உரிமம் அல்ல; அது ஒரு மிகப்பெரிய கட்டுப்பாடு.

**நாற்பது வருடங்களாக நான் சிறையில் வசித்தேன். அதில் அதிகம் நானே உருவாக்கிக் கொண்டது. இப்போது நான் மேலும் மேலும் சுதந்திரமாக இருப்பது சாத்தியம் என்பதை அறிகிறேன். ஆனால், நான் வளர்ச்சி அடைவதற்கு ஒரு நல்ல சூழ்நிலையும், ஒரு பாதுகாப்பான இடமும் தேவை என்று உணரும் போது என்ன செய்வது? எங்கேயும், எப்போதும் சுதந்திரமாக இருப்பது எப்படி? அதைக் குறித்து நான் எனக்குள் வருத்தத்தை, எதிர்ப்பையும் உணர்கிறேன்.**

விடுதலை என்பது வெளி உலகில் இல்லை; ஒருவர் உண்மையான சிறையிலும் கூட சுதந்திரமானவராக இருக்க முடியும். விடுதலை என்பது உனக்குள் உள்ள ஏதோ ஒன்று. அது உனது தன்னுணர்வு சம்பந்தப்பட்டது. நீ எங்கு வேண்டுமானாலும் சுதந்திரமாக இருக்க முடியும். கைவிலங்கு போட்டாலும், ஒரு சிறைச்சாலையில் இருந்தாலும், நீ சுதந்திரமானவனாக இருக்க முடியும். அதே நேரத்தில் நீ சிறைச்சாலைக்கு வெளியேயும் கூட சுதந்திரம் அற்றவனாக, உனது சொந்த வீட்டிலும் கூட சுதந்திரமற்றவனாக இருக்க முடியும். கண்ணால் பார்ப்பதற்கு சுதந்திரமாக இருப்பது போல் தெரியும். ஆனால், உனது தன்னுணர்வானது சுதந்திரமானதாக இல்லையென்றால், நீ ஒரு சிறைக் கைதியாகத் தான் இருப்பாய்.

நீ வெளியில் உள்ள சுதந்திரத்தையும், உனக்குள் உள்ள சுதந்திரத்தையும் போட்டு குழப்புகிறாய். வெளி உலகைப் பொருத்தமட்டில், உன்னால் ஒருபோதும் சுதந்திரமாக இருக்க முடியாது. அது எப்போதும் தெளிவான ஒன்றாக இருக்கட்டும். வெளியுலகைப் பொருத்தமட்டில், நீ தனியாக இல்லை. ஆகவே, நீ எப்படி முற்றிலும் சுதந்திரமானவனாக இருக்க முடியும்? உன்னைச் சுற்றிலும் லட்சக்கணக்கான மக்கள் உள்ளனர். வெளிப்புறத்தில் வாழ்க்கை என்பது

ஒரு சமரசமாகத் தான் இருக்க முடியும். இந்த பூமியில் நீ மட்டுமே தனியாக இருந்தால், நீ சுதந்திரமானவனாக இருந்திருப்பாய். ஆனால், நீ தனியாக இல்லையே.

சாலையில் நீ இடது பக்கம் தான் சென்றாக வேண்டும். மேலும், கேள்வி கேட்பவருக்கு இது ஒரு பெரிய அடிமைத்தனமாக இருக்கும். "ஏன்? இடதுபக்கம் தான் போக வேண்டும் என்று நான் ஏன் நிர்பந்திக்கப்படுகிறேன்? நான் ஒரு சுதந்திரமான பெண் தான். நான் வலதுபக்கம் நடந்து போக விரும்பினால், நான் வலதுபக்கம் தான் நடப்பேன். நான் சாலையில் நடுவில் நடக்க வேண்டும் என்று விரும்பினால், சாலையின் நடுவில் தான் நடப்பேன்," என்று கூறலாம். இந்தியாவில் நீ அதைச் செய்ய முடியும். இந்திய[illegible]ிகவும் சுதந்திரமான நாடு என்பதை நினைவில் கொள்! இந்த உலகிலேயே மிகப்பெரிய ஜனநாயக நாடு இது. எனவே, நீ வலது, இடது, நடு என்று எந்தப்பக்கம் வேண்டுமானாலும் நடக்கலாம்.

புரிந்து கொண்டுள்ள ஒரு மனிதன், தனது சுதந்திரத்தை எந்த அளவுக்கு மதிக்கிறானோ, அந்த அளவுக்கு அவன் மற்றவர்களின் சுதந்திரத்தையும் மதிப்பான். ஏனெனில், உனது சுதந்திரத்தை யாரும் மதிக்கவில்லையென்றால், உன்னுடைய சுதந்திரம் அழிக்கப்பட்டு விடும். அது ஒருவருக்கொருவர் புரிந்து கொள்வதைச் சார்ந்து தான் உள்ளது. "நான் உனது சுதந்திரத்தை மதிக்கிறேன். எனது சுதந்திரத்தை நீ மதி. அப்போது நாம் இருவரும் சுதந்திரமாக இருக்க முடியும்," என்று கூறலாம். ஆனால், இது ஒரு சமரசம். நான் உனது இருப்பு நிலைக்குள் குறுக்கிட மாட்டேன். நான் உன்மீது அத்துமீறி நடந்து கொள்ள மாட்டேன் என்று சமரசம் செய்து கொள்வதாகும்.

உதாரணமாக, நடு இரவில் நீ ஒரு பாட்டை உரக்கப் பாட விரும்புகிறாய். நீ ஒரு சுதந்திரமான மனிதன் தான். மேலும், நீ உனது வீட்டில் சத்தம் போட்டு பாட முடியவில்லையென்றால், இந்த சுதந்திரம் எந்த வகையைச் சார்ந்தது? ஆனால், உனது பக்கத்து வீட்டுக்காரர்களும் தூங்க வேண்டுமல்லவா! எனவே, அங்கே ஒரு சமரசம் இருந்தாக வேண்டும்.

வெளியுலகில் நாம் ஒருவரை ஒருவர் சார்ந்து தான் இருக்கிறோம். யாரும் முழுமையான சுதந்திரத்துடன் இருக்க முடியாது. வாழ்க்கை என்பது ஒன்றை ஒன்று சார்ந்தது. இந்த மனிதர்களோடு மட்டும் நீ சார்ந்து இல்லை. இங்குள்ள எல்லாவற்றையும் சார்ந்து தான் நீ இருக்கிறாய். நீ இங்குள்ள எல்லா மரங்களையும் வெட்டிவிட்டால், நீ மரணமடைந்து விடுவாய். ஏனெனில், அந்த மரங்கள் தான் இடைவிடாமல் உனக்கு

பிராணவாயுவை கொடுத்துக் கொண்டிருக்கின்றன. நீ அவற்றைச் சார்ந்து இருக்கிறாய். அதே போன்று, அவைகளும் உன்னைச் சார்ந்து இருக்கின்றன. நாம் பிராணவாயுவை எடுத்துக் கொண்டு, கரியமிலவாயுவை வெளியிடுகிறோம். மரங்கள் இதற்கு நேர் எதிரானதைச் செய்கின்றன. அவைகள் பிராணவாயுவை வெளியிடுகின்றன. கரியமில வாயுவை உள்ளே எடுத்துக் கொள்கின்றன.

ஆகவே, மக்கள் புகை பிடிக்கும் போது மரங்கள் மிகவும் சந்தோஷப்பட வேண்டும். ஏனெனில், அவைகளுக்கு அதிக கரியமில வாயு உருவாக்கப்படுகிறது! ஆனால் புகை பிடிப்பதன் மூலகாரணத்திற்குள் நீங்கள் செல்ல வேண்டும் என்று நான் கூறும் போது, இந்த மரங்கள் மிகவும் கவலைப்படும். ஆனால், அதன்பிறகு புகைப்பிடித்தல் மறைந்து போகும். அதாவது, இதற்கு முன்பு கரியமில வாயு கிடைத்ததைப் போன்று இப்போது அந்த மரங்களுக்கு அது கிடைக்காது.

நாம் மரங்களோடு மட்டும் சார்ந்து இருப்பவர்கள் அல்ல. சூரியனோடும், சந்திரனோடும், இந்த நட்சத்திரங்களோடும் சம்பந்தப்பட்டு தான் நாம் இருக்கிறோம். எல்லாமே ஒன்றை ஒன்று சார்ந்தது தான். இந்த ஒன்றை ஒன்று சார்ந்து இருப்பதை அனுபவியுங்கள். நீங்கள் மற்றவர்களோடு சம்பந்தம் உடையவர்களாக இருக்கிறீர்கள். மற்றவர்கள் உங்களோடு சம்பந்தம் உடையவர்களாக இருக்கின்றனர். இது ஒரு சகோதரத்துவம், இது ஒரு உறவு. இந்த பூமியில் உள்ள சிறிய புல்லின் இலைகூட இங்குள்ள மிகப்பெரிய நட்சத்திரத்துடன் தொடர்புடையது.

ஆனால் அக உலகில், உங்களது அக சாம்ராஜ்ஜியத்தில் நீங்கள் முற்றிலம் சுதந்திரமானவராக இருக்கலாம். மேலும், அதன்பிறகு உங்களால் துக்கம் கொள்ளவோ, கோபம் கொள்ளவோ முடியாது. அதற்கான அவசியமும் இருக்காது. எனவே, இந்த வெளியில் உள்ள ஒன்றை ஒன்று சார்ந்து இருக்கும் நிலையானது கண்டிப்பாக நமக்குத் தேவை என்பதை புரிந்து கொள். அதைக் குறித்து நாம் எதுவும் செய்ய முடியாது. இதில் விஷயங்கள் எப்படி இருக்க வேண்டுமோ, அதன்படி இருக்கின்றன. அதை ஏற்றுக் கொள். அதைக் குறித்து எதுவும் செய்ய முடியாத நிலையில், ஏற்றுக் கொள்ளுதல் ஒன்று மட்டுமே வழி. மேலும், இதனை சந்தோஷமாக ஏற்றுக் கொள். இதை ஏற்றுக் கொள்! இது நமது பிரபஞ்சம்; நாம் இதன் அங்கம். நாம் தனித்தீவு அல்ல. நாம் இந்த கண்டத்தின் ஒரு அங்கம் தான். நாம், நான் என்னும் ஆணவம் கிடையாது.

உனது விடுதலை என்னும் கருத்தானது, எங்கோ ஒரு மூலையில், உனது ஆணவம் என்னும் கருத்தில் வேரூன்றி உள்ளது. உனது ஆணவம் என்பது பொய்யான தோற்றம். நாம் தனிப்பட்டவர்களாக இல்லாத போது, நமக்கு எப்படி தனிப்பட்ட ஆணவம் இருக்க முடியும்? மொழியைப் பொருத்தமட்டில் வேண்டுமானால், நாம் இந்த 'நான்' என்னும் வார்த்தையைப் பயன்படுத்துவது மிகவும் உபயோகமானதாக இருக்கும். ஆனால், இதில் எந்தவிதமான உட்பொருளும் இல்லை. இது வெறும் நிழல் போன்றது, முற்றிலும் வெற்றிடம் போன்றது. ஒரு உபயோககரமான வார்த்தை தான். ஆனால், உண்மையில்லாத வார்த்தை.

ஆனால், உனக்குள் விடுதலை அடைவது சாத்தியமானது. நீ, உனக்குள் ஆழத்தில் விழிப்புணர்வுக்குள் செல்லச் செல்ல அது நிகழும். உனது உடலைக் கவனி; உனது எண்ணங்களின் செயல்முறையைக் கவனி. உனது எண்ண ஓட்டத்தின் முழு செயல் முறைகளையும் காட்சி பாவனையுடன் கவனி. அப்படி கவனித்தால், கொஞ்சம் கொஞ்சமாக நீ என்பவன் கோபம் மற்றும் பேராசை இல்லாதவன் என்றும், இந்துவோ, முகமதியனோ அல்லது கிறிஸ்தவனோ அல்ல என்றும், கத்தோலிக்கரோ அல்லது கம்யூனிஸ்டோ அல்ல என்றும் கண்டு கொள்வாய். கொஞ்சம் கொஞ்சமாக நீ என்பது உனக்குள் எழுகின்ற எந்த எண்ணமும் அல்ல என்பதையும் அறிந்து கொள்வாய். நீ என்பது இந்த மனம் என்பதாக இல்லை என்பதையும் அறிந்து கொள்வாய். நீ என்பது ஒரு தூய்மையான சாட்சி. எனவே, அந்த தூய்மையான சாட்சி பாவனையின் அனுபவம் தான் முழு சுதந்திரத்தின் அனுபவமாகும். ஆனால், இது உனக்குள் நடக்கின்ற ஒரு விஷயம். மேலும், எவனொருவன் தனக்குள் முழுவதும் விடுதலையுடன் இருக்கிறானோ, அவன் வெளியுலக விடுதலைக்கு ஏங்க மாட்டான். அப்படிப்பட்ட அந்த மனிதன் இயற்கையை அப்படியே ஏற்றுக் கொள்வான்.

சாட்சி பாவனையின் மூலம், உனக்குள் ஒரு விடுதலையை உருவாக்கிக் கொண்டு அந்த அக விடுதலையில் வாழ்ந்து வா. அதன் பின்னர், வெளியுலகில் ஒன்றை ஒன்று சார்ந்து இருப்பதை உன்னால் கண்டு கொள்ள முடியும். அது அழகானதாகவும், ஆசீர்வாதம் நிறைந்ததாகவும் இருக்கும். அதற்கு எதிராக நீ கோபம் கொள்ளத் தேவையில்லை. அதனுள் ஓய்வாக இரு. அதனிடம் சரணாகதி அடைந்துவிடு. மேலும், எவனொருவன் உண்மையிலேயே விடுதலை பெற்றவனாக இருக்கிறானோ, அவனால் தான் சரணடைய முடியும் என்பதையும் நினைவில் கொள்.

**'REBEL' (கிளர்ச்சியாளன்) என்கிற ஆங்கில வார்த்தைக்கு, ஏதோ ஒன்றுக்கு எதிராக போராடுபவன் என்று தான் அர்த்தமல்லவா? இந்த**

**வார்த்தையே, 'REBELLERE,' அதாவது, திரும்பப் போராடுதல் என்கிற லத்தீன் வார்த்தையிலிருந்து வந்தது தானே. ஆனால், நீங்கள் இதைப் பற்றி பேசும் போது அதை நேர்மறையான உணர்வில் 'எழுச்சி' என்று பேசுகிறீர்கள். நீங்கள் இந்த வார்த்தையின் அர்த்தத்தை மாற்றுகிறீர்களா?**

நான் அந்த வார்த்தையின் அர்த்தத்தை மாற்றவில்லை. நான் அந்த வார்த்தையை முழுமையானதாக ஆக்குகிறேன். அதற்கு கொடுக்கப்பட்டுள்ள அர்த்தம் ஒரு பாதி மட்டும் தான். அதற்கு, வெறுமனே எதிர்மறையான அர்த்தம் மட்டுமே கொடுக்கப்பட்டுள்ளது. மேலும், எந்த ஒரு எதிர்மறையும், நேர்மறை இல்லாமல் இருக்க முடியாது. REBEL என்கிற ஆங்கில வார்த்தை, REBELLERE என்கிற லத்தீன் வார்த்தையிலிருந்து வருகிறது என்பது உண்மை தான். அதாவது, திரும்பவும் போராடு என்பது தான் அதன் அர்த்தம். ஆனால், அது அர்த்தத்தின் ஒரு பாதி தான்; அதன் அடுத்த பகுதி பல நூற்றாண்டுகளாக காணாமல் போய்விட்டது. யாரும் அந்த வார்த்தையின் முழு அர்த்தத்தை மாற்றி அமைப்பதைப் பற்றி கவலைப்பட வில்லை. எதிராகப் போராடுதல் என்பது ஆரம்பம் மட்டுமே. ஆனால், எதற்காகப் போராட வேண்டும்?

உன்னிடம் ஒரு நேர்மறையான லட்சியம் இல்லாவிட்டால், உனது விடுதலை என்பது அர்த்தமில்லாதது. நீ எதற்காகப் போராடுகிறாய் என்பதையும் தெளிவாக அறிந்திருக்க வேண்டும். உனது விடுதலையின் லட்சியம் என்ன?

மேலும், இந்த உண்மையானது, 'REBEL' என்கிற வார்த்தைக்கு மட்டுமல்ல, இந்த உண்மை பல வார்த்தைகளுக்கும் பொருந்தும். 'விடுதலை' என்கிற (FREEDOM) வார்த்தையும் மக்களின் மனதில் ஒரு எதிர்மறையான உணர்வை, அதாவது ஏதாவது ஒன்றிலிருந்து விடுதலை பெறுவது என்கிற உணர்வைத் தான் ஏற்படுத்தி உள்ளது. ஆனால், இந்த விடுதலை எதற்காக என்று யாரும் கேட்பதில்லை. ஏதோ ஒன்றிலிருந்து விடுதலை என்பது மிகவும் முக்கியமான பகுதி தான். ஆனால், அது ஒரு எதிர்மறையான பகுதி மட்டும் தான். உன்னிடம் ஒரு நேர்மறையான லட்சியம் இல்லாவிட்டால், உனது விடுதலை என்பது அர்த்தமில்லாதது. நீ எதற்காகப் போராடுகிறாய் என்பதையும் தெளிவாக அறிந்திருக்க வேண்டும். உனது விடுதலையின் லட்சியம் என்ன?

கிளர்ச்சி (Rebel), கிளர்ச்சி செய்தல் (Rebellion) என்பது கண்டனத்துக்குரியதாக உள்ளது. மேலும், இந்த கண்டனத்தின் ஒரு

பகுதியாகத்தான். அதாவது, மொழியியல் அறிஞர்கள் மொழி அகராதியில் இதற்கு ஒரு எதிர்மறையான அர்த்தத்தை மட்டுமே கொடுத்துவிட்டனர். யாரும் 'எதற்கான கிளர்ச்சி?' என்று கேள்வி எழுப்பவில்லை. ஆனால், இது தான் முக்கியமான கேள்வியாக இருக்க வேண்டும். என்னைப் பொருத்தவரையில், இந்த எதிர்மறைப் பகுதி என்பது வெறும் ஒரு ஆரம்பம் மட்டும் தான். அது முடிவானதல்ல. நேர்மறையான பகுதிதான் அதன் முடிவு. மேலும், அது தான் அந்த முழு வட்டத்தை பூர்த்தி செய்யும்.

நீ உயிரற்று போனவைகளுக்கு எதிராக கிளர்ந்து எழுகிறாய். மேலும், எது உயிரோட்டமுள்ளதாக இருக்கிறதோ, அதற்காக நீ கிளர்ந்து எழுகிறாய். இல்லையெனில், இந்த மூட நம்பிக்கைகளுக்கு எதிராக கிளர்ந்து எழ வேண்டிய அவசியம் என்ன? எந்த ஒரு கிளர்ச்சியும், அது எதிர்மறையானதாக மட்டுமே இருக்குமேயானால், அது முழுமை பெறாததாகவும், பயனற்றதாகவும் தான் இருக்கும். நேர்மறையானது மட்டுமே அதை அர்த்தமுள்ளதாகவும், சிறப்பானதாகவும் ஆக்கும்.

எல்லா வார்த்தைகளிலும் இதை ஞாபகத்தில் வைத்துக் கொள். அதாவது, இந்த சமுதாயம் எதிர்மறை அர்த்தத்தை மட்டுமே வைத்திருக்குமானால், அதற்கு அந்த வார்த்தைகளுக்கு எதிராக அந்த சமுதாயம் உள்ளது என்று தான் அர்த்தம். உண்மையான கிளர்ச்சிக்கு எதிராக மட்டும் அது இருப்பதில்லை, கிளர்ச்சி என்கிற அந்த வார்த்தைக்கும் கூட அது எதிரானது தான். அது, அதற்கு ஒரு எதிர்மறையான நிறத்தைக் கொடுத்துவிட்டது. அதற்கு ஒரு நேர்மறையான நிறத்தை, ஒரு நேர்மறையான அழகை கொடுப்பதென்பது, அதை ஆதரிப்பது என்று அர்த்தமாகும்.

நான் கிளர்ச்சி என்கிற வார்த்தையின் அர்த்தத்தை மாற்றவில்லை. நான் வெறுமனே அதை முழுமையாக்குகிறேன். அது நீண்ட காலமாக முழுமை பெறாமல் இருந்து வருகிறது. அதற்கு முழுமையும், அதற்கு கடைசி நேர வேலைகளும் தேவைப்படுகிறது. அப்போது தான் அதனால், அதனிடமிருந்து வெளியே எடுக்கப்பட்ட அந்த அழகினை திரும்பவும் பெற முடியும்.

இந்த சமுதாயம், வாழ்க்கையின் எல்லா நோக்கங்களிலும் சூழ்ச்சியுடன் இருந்துவிட்டது. அது வார்த்தைகளை, மொழியை, எல்லாவற்றையும் தனக்குத் தகுந்தாற்போல் ஆக்கிக் கொண்டு விட்டது. அதன் அர்த்தங்கள், சமுதாயத்தின் அமைப்பிற்கு ஆதரவாக இருக்கும்படி செய்துவிட்டது. எனவே, மொழிகளும்கூட கடந்த காலத்தில் அவைகளின் மீது கட்டப்பட்டுள்ள விலங்குகளிலிருந்து

விடுதலை பெற வேண்டியது அவசியமாகிறது. அழகான வார்த்தைகளாகிய ‘கிளர்ச்சி’, ‘விடுதலை’, ‘புரட்சி’ போன்ற வார்த்தைகள் அதன் எதிர்மறையான அர்த்தங்களில் இருந்து மீட்கப்பட வேண்டும். மேலும், இதைச் செய்வதற்கான ஒரே வழி, இந்த உலகின் மையத்தை நேர்மறையானதாக மாற்றுவது ஒன்று மட்டும்தான். எதிர்மறை என்பது நேர்மறையாக ஆவதற்கான ஒரு தயார் நிலை மட்டுமேயாகும். நீங்கள் ஒரு நிலத்தை தயார் செய்யும் போது, அதில் உள்ள களைகள், தேவையில்லாமல் வளர்ந்துள்ள காட்டுச் செடிகள், அவைகளின் வேர்கள் ஆகியவற்றை, அதாவது அந்த நிலத்தில் உள்ள எதிர்மறையான விஷயங்களை முதலில் வெளியே எடுத்து விடுகிறீர்கள்.

ஆனால், வெறுமனே களைகளை நீக்குவதும், அதில் உள்ள காட்டுச்செடிகளையும், அதன் வேர்களையும் நீக்குவதும் மட்டுமே, நீங்கள் ஒரு நிலத்தைத் தயார் செய்வதற்கு போதுமானதாக ஆகிவிடாது. நீங்கள் அதில் ரோஜாக்களையும் கூட நட வேண்டும். அப்படி நடுவது தான் நேர்மறையான பகுதியாகும். நீ அதில் அழகான மரங்களையும், அழகான மலர்ச் செடிகளையும் நட வேண்டும். நேர்மறையான ஏதோ ஒன்று நடப்பதற்கு ஏதுவாக தயார் செய்வது மட்டுமே, எதிர்மறையான காரியத்தின் வேலையாகும்.

**சமீபகாலமாக, நான் எனது நாடு, இடம் அல்லது எனது சொந்த தனிப்பட்ட சரித்திரம் ஆகிய சிறைகளில் இருந்து விடுதலை பெற்று விட்டதாகவும், இனிமேல் ஒருபோதும் இப்படிப்பட்ட சிறைவாசத்தில் இருக்கப்போவதில்லை எனவும் உணர்கிறேன். ஆனால், இப்படிப்பட்ட இந்த சுதந்திரத்துடன் ஏதோ ஒரு துக்கமும் கலந்திருப்பது போன்ற உணர்வும் உள்ளது. அந்த துக்கம் என்ன?**

விடுதலைக்கு இரண்டு பக்கங்கள் உள்ளன. மேலும், நீ ஒரே ஒரு பக்கத்தை மட்டுமே, நீ தனிப்பக்கத்தை மட்டும் அனுபவித்தால், நீ அந்த விடுதலையோடு துக்கம் கலந்திருப்பதைத் தான் உணர்வாய். நீ இந்த சுதந்திரத்தின் முழு மனோதத்துவத்தையும் புரிந்து கொள்ள வேண்டும்.

அதன் முதல் பக்கமானது, ஏதோ ஒன்றிலிருந்து விடுதலை பெறுவது என்பதாக உள்ளது. அதாவது, ஏதோ ஒரு நாட்டிலிருந்து, ஏதோ ஒரு குறிப்பிட்ட திருச்சபையில் இருந்து, ஏதோ ஒரு குறிப்பிட்ட இனத்திலிருந்து, அல்லது ஏதோ ஒரு குறிப்பிட்ட அரசியல் கொள்கையிலிருந்து விடுதலை பெறுவது என்பதாகும். இதுதான் விடுதலையின் முதல் பகுதி, விடுதலை என்பதன் அஸ்திவாரம். அது எப்போதுமே ஏதோ ஒன்றிலிருந்து விடுதலை பெறுவதற்காகவே இருக்கும். நீ இந்த விடுதலையைப் பெற்றவுடன், மிகவும் சுமை இல்லாதது போலவும், நல்ல சந்தோஷமாக இருப்பதையும் உணர்வாய்.

மேலும், முதன் முறையாக நீ உனது சொந்த தனித்தன்மையில் சந்தோஷப்பட ஆரம்பிப்பாய். ஏனெனில், நீ இப்போது விடுதலை பெற்ற விஷயங்களால் உனது தனித்தன்மையானது இதுவரை மூடப்பட்டு இருந்தது.

ஆனால், இந்த விடுதலை ஒரு பாதி மட்டுமே. அதன் பிறகு உனக்கு துக்கம் வந்துவிடும். ஏனெனில், விடுதலையின் அடுத்த பக்கம் அங்கே இல்லை. ஏதோ ஒன்றிலிருந்து விடுதலை பெறுவது என்பது நிறைவேறிவிட்டது. ஆனால், அந்த விடுதலை எதற்காக? ஏதோ ஒன்றிற்காக, இல்லாத விடுதலை என்பதில் எந்த அர்த்தமும் இருக்காது. ஏதோ ஒன்றினைப் படைப்பதற்கான சுதந்திரம், அதாவது சிற்பம் செதுக்குவதற்கான சுதந்திரம், நடனமாடுவதற்கான சுதந்திரம், இசை, கவிதை, ஓவியம் இவற்றைப் படைப்பதற்கான சுதந்திரம் ஆகியவை இல்லையென்றால், நீ துக்கப்படுவாய். ஏனெனில், அப்போது நீ சுதந்திரமானவனாக இருப்பதைக் கண்டு கொள்வாய். அதாவது, உனது விலங்குகள் உடைக்கப்பட்டு, நீ ஒருபோதும் சிறையில் இல்லாமல், இப்போது முற்றிலும் சுதந்திரமாக இந்த நட்சத்திரங்கள் நிறைந்த இரவில் அவைகளுக்கு அடியில் நின்று கொண்டிருப்பாய். ஆனால், எங்கே போவது?

அதன்பிறகு, உனக்கு திடீரென துக்கம் வந்துவிடும். எந்த வழியைத் தேர்ந்தெடுப்பது? இதுவரை நீ எங்கு செல்ல வேண்டும் என்கிற கேள்வியே எழவில்லை. ஏனெனில், நீ சிறைவாசத்தில் இருந்தாய். இதுவரை உனது முழு தன்னுணர்வும், எப்படி இதிலிருந்து விடுதலை பெறுவது என்பதிலேயே குவிந்திருந்தது. அது மட்டுமே உனது கவலையாக இருந்தது. ஆனால், இப்போதோ நீ விடுதலை அடைந்துவிட்டதால், ஒரு புதிய வகையான பிரச்சனையை எதிர்கொள்ள வேண்டியதிருக்கும். இப்போது சுதந்திரமாக இருந்து கொண்டு நீ என்ன செய்வாய்?

நீ ஒரு படைப்பாற்றல் மிக்கதொரு வழியினைப் பின்பற்றவில்லையெனில், விடுதலை பெற்றதில் எந்த அர்த்தமும் இருக்காது. ஒன்று, நீ உன்னை அறிந்து கொள்வதற்காக தியானத்தில் ஆழ்ந்து செல்ல வேண்டும். அல்லது, இதுவரை உனக்கு விதிக்கப்பட்டிருந்த தடையினால் உனக்குள் உள்ள, வெளிப்படுத்த முடியாமல் போன ஏதாவது ஒரு குறிப்பிட்ட திறமையை வளர்த்துக் கொள்ள முயற்சி செய்ய வேண்டும். உனது கைகளுக்கு விலங்கு மாட்டப்பட்டிருந்தால், உன்னால் இசைக்கருவிகளை இயக்க முடியாமல் போயிருக்கும். உனது கால்களில் விலங்குகள் மாட்டப்பட்டிருந்தால், உன்னால் நடனமாட முடியாமல் போயிருக்கும். எனவே, உன்னிடம்

ஒரு நடன மேதை ஆவதற்கான திறமை இருந்தால், அதன்பிறகு நீ ஒரு நடனமேதையாக ஆகு. அப்போது தான், உனது விடுதலை முழுமை பெறும், ஒரு வட்டம் முழுமை பெறும்.

ஏதோ ஒன்றிலிருந்து விடுதலை, ஏதோ ஒன்றிற்கான விடுதலை - இந்த தடுமாற்றமானது, முதலாவதாக விடுதலைக்காகப் போராடுகிற ஒவ்வொரு மனிதராலும் எதிர்கொள்ளப்படுகிறது. அதன்பின்னர் அவன், "இப்போது நான் விடுதலை பெற்றுவிட்டேன். நான் என்ன செய்யப் போகிறேன்?" என்று தடுமாற்றம் அடைகிறான். இதுவரையில், விடுதலை பெற வேண்டும் என்று அவன் முழுமையாகத் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு, சுறுசுறுப்பாக இருந்தான். அவனது கனவிலும் கூட, அவன் விடுதலை அடைவதைப் பற்றி மட்டுமே எண்ணி வந்தான். ஆனால், அந்த விடுதலையைப் பெற்ற பின்னர், தான் என்ன செய்யப் போகிறோம் என்று அவன் ஒருபோதும் சிந்தித்ததில்லை.

எனவே, விடுதலையோடு சேர்ந்து இன்னும் ஏதோ கொஞ்சம் செய்ய வேண்டியது அவசியமாகிறது. நீ ஒரு படைப்பாளி ஆக வேண்டும். உனது விடுதலையை நிறைவு செய்கின்ற ஏதோ ஒரு படைப்பாற்றலை நீ கண்டு கொள்ள வேண்டும். அப்படி இல்லையெனில், அந்த விடுதலையானது ஒன்றுமில்லாததாகிவிடும். ஒன்று, நீ ஏதோ ஒன்றினைப் படைக்க வேண்டும். அல்லது, உனக்குள் உன்னைக் கண்டு கொள்வதற்காக செல்ல வேண்டும். ஆனால், நீ கண்டிப்பாக உனது விடுதலையை வைத்துக் கொண்டு ஏதாவது ஒன்றைச் செய்தாக வேண்டும். விடுதலை உனக்கு ஒரு சந்தர்ப்பத்தை மட்டுமே உருவாக்கித் தருகிறது. அதுவே லட்சியமாகிவிடாது. நீ எதை விரும்புகிறாயோ அதைச் செய்வதற்கான சந்தர்ப்பத்தை அது வெறுமனே உனக்கு கொடுக்கிறது. எனவே, நீ விடுதலை அடைந்த பிறகும் நீ துக்கத்தை உணர்ந்தால், அது உனக்கு கிடைத்த அந்த சந்தர்ப்பத்தை நீ இன்னமும் பயன்படுத்தவில்லை என்று தான் அர்த்தம்.

தியானம் செய்யலாம், இசை அமைக்கலாம், சிற்பம், நடனம் அல்லது காதல் செய்யலாம். ஆனால், உனது விடுதலையோடு ஏதாவது ஒன்றைச் செய்; நீ இப்படி சோம்பேறியாக இருந்தால், நீ துக்கத்தில் தான் இருப்பாய்.

விடுதலை என்பது உனது வாழ்க்கையில் படைப்பாற்றல் மிகுந்த சக்தியாக இருக்க வேண்டும். அது வெறும் எதிர்மறையான ஒன்றாக இருக்கக் கூடாது. இப்போது, நீ சிறைவாசத்தில் இல்லை; நீ இந்த வானத்தின் அடியில் சுதந்திரமாக நின்று கொண்டிருப்பதையும், அதேசமயம் எல்லாவற்றையும் இழந்துவிட்டவன் போல் நிற்பதையும்

காணலாம். சிறைவாசத்தில் இருக்கும் மனிதன், அந்த சிறைவாசத்தில் இருப்பதற்கான காரணத்தை, ஒருவேளை ஒருபோதும் அறியாமல் இருந்துவிடலாம். அதனால் தான், லட்சக்கணக்கான மக்கள் இந்த உலகில் மதம், ஜாதி, இனம், நாடு, நிறம் ஆகியவற்றின் சிறைக் கைதிகளாகவே இன்னமும் இருக்கின்றனர். ஏனெனில், அவர்கள் சிறைப்படுத்தப்பட்ட போது, அவர்களுக்கு எந்தவிதமான பொறுப்புணர்ச்சியும் இல்லை. அவர்களிடம் எந்தவிதமான படைப்பாளியும் இல்லை. அவர்கள், தங்களின் விடுதலையில் எந்தவிதமான நேர்மறையான விஷயத்தையும் காணவில்லை. அவர்கள், அப்படியே சிறைவாசத்தில் இருந்து விடுகின்றனர். ஏனெனில், அப்போது அவர்களுக்கு வேண்டியதையெல்லாம் மற்றவர்கள் செய்து கொண்டே போகின்றனர்.

மக்கள் ஏன் கிறிஸ்தவனாகவும், இந்துவாகவும், அல்லது முகமதியராகவும் இருக்கின்றனர்? ஏனெனில், இயேசு உன்னைக் காப்பாற்றுவார். நீ கவலைப்பட வேண்டியதில்லை. நீ வெறுமனே அந்த கிறிஸ்தவ திருச்சபையில் அடிமையாக இருந்துவிட்டால் மட்டும் போதுமானது; அந்த திருச்சபை உனது பாவங்களையும் மற்ற எல்லாத் தேவைகளையும் கவனித்துக் கொள்ளும். நீ முற்றிலும் பாரம் அற்றவனாக உணர முடியும்; உனக்கு எந்தப் பொறுப்பும் இருக்காது.

ஆனால், இந்த 'விடுதலை' என்கிற கேள்வியின் ஒரு அடிப்படையான விஷயத்தை நினைவில் கொள். அது பொறுப்புணர்ச்சியும், விடுதலையும் ஒன்றாகத்தான் கிடைக்கும் என்பது தான். நீ எந்தப் பொறுப்பையும் ஏற்றுக் கொள்ள விரும்பவில்லை யென்றால், உன்னால் விடுதலை என்பதைப் பெறவும் முடியாது. ஒன்று, அவைகள் சேர்ந்து வரும் அல்லது அவைகள் சேர்ந்து போகும். நீ உனது பொறுப்புணர்ச்சியை விட்டுவிட்டால், அதன்பின்னர் நீ உனது அடிமைத்தனத்தை ஏதோ ஒரு வழியில் ஏற்றுக் கொள்ளத் தான் வேண்டும்.

இதுவரை, உனது விடுதலைக்குப் பிறகு அதனைத் தொடர்ந்து வருகின்ற பொறுப்புணர்வைப் பற்றி சிந்திக்காமலேயே, நீ உனது விடுதலையைப் பற்றி கனவு கண்டு வந்திருக்கிறாய். இப்போது உன்னிடம் விடுதலை உள்ளது. ஆனால், நீ இன்னமும் பொறுப்புணர்ச்சியை நிறைவேற்றவில்லை. அதனால் தான், உன்னைச் சுற்றிலும் ஒரு துக்கம் ஒட்டிக் கொண்டுள்ளது. இந்த துக்கத்தை அழித்துவிடுகின்ற திறன் உன்னிடம் உள்ளது. உனது அடிமைத்தனத்திலிருந்து எப்படி நீ திறமையுடன் வெளியேறி வந்தாயோ, அதே போன்று உன்னால் நிச்சயமாக படைப்புத் திறனுடனும்

இருக்க முடியும். உன்னால், உனது சிறையை அழிக்க முடிகின்ற போது, நிச்சயமாக உன்னால் அழகான ஏதோ ஒன்றினைப் படைக்கவும் முடியும்.

எனது சொந்த அனுபவம் என்னவென்றால், நீ ஏதாவது ஒரு வழியில் படைப்பாளியாக ஆகவில்லையென்றால், உனது வாழ்க்கையானது வெறுமையானதாகவும், துக்கமானதாகவும் தான் இருக்கும். படைப்பாளிகள் மட்டுமே பேரானந்தம் மிக்கவர்கள். அது வெறுமனே நீ உனக்குள் அதிக தன்னுணர்வைப் படைப்பதாகக் கூட இருக்கலாம். உனக்குள் சத்தியம், தன்னுணர்வு, பேரானந்தம் ஆகியவற்றை அதிகமாக அனுபவிக்கின்ற முயற்சியாகவும் இருக்கலாம். அது, உனது அக உலகத்தில் ஏதோ ஒன்றினைப் படைப்பதாக இருக்கலாம். அல்லது, இந்த புறவுலகில் ஏதோ ஒன்றினைப் படைப்பதாகவும் இருக்கலாம். ஆனால், விடுதலை என்பது பொறுப்புணர்ச்சியாக, நேர்மறையானதாக ஆகவேண்டும். உனது விடுதலை இன்னமும் எதிர்மறையாகத் தான் உள்ளது. நீ சிறையை விட்டு வெளியே இருப்பது நல்லது தான். ஆனால், இது மட்டுமே போதாது. இப்போது நீ, உனது உணவை சம்பாதித்தாக வேண்டும். இதுவரை, சிறை அதிகாரிகள் உனக்கு உணவைக் கொடுத்து வந்தார்கள். அவர்கள், உனக்கு விலங்குகளைக் கொடுத்ததோடு சேர்த்து தங்குமிடத்தையும், உடைகளையம் கொடுத்தனர்.

தேவாலயங்களையும், கோவில்களையும், யூத ஆலயங்களையும் சேர்ந்தவர்களாக அநேக மக்கள் உள்ளனர். கிட்டத்தட்ட, நாம் ஒவ்வொருவரும் ஒரு மதம், ஒரு நாடு, ஒரு குடும்பம், ஒரு அமைப்பு, ஒரு அரசியல் கட்சி அல்லது ரோட்டரி அல்லது லயன்ஸ் சங்கம் இவற்றில் அங்கத்தினராக இருக்கிறோம். மக்கள் தங்களை கட்டிப் போட்டுக் கொள்ள அநேக அநேக சங்கிலிகளை போய் தேடிக் கொண்டே இருக்கிறார்கள். அது, அவர்களுக்கு சௌகரியமானதாகத் தெரிகிறது. மேலும், இதில் உனக்கு எந்தப் பொறுப்பும் கிடையாது. ஆனால், அதிக பாதுகாப்பு உள்ளது. இப்படி இல்லையென்றால், நீ உனது ஒவ்வொரு செயலுக்கும், உனது ஒவ்வொரு மூச்சிற்கும், நீ எதைச் செய்தாலும் அல்லது செய்யாவிட்டாலும், நீ தான் அதற்கு பொறுப்பாளி ஆக இருக்க வேண்டும்.

மக்கள், விடுதலை என்பதைப் பற்றி பேசினாலும் கூட, அவர்கள் ஆழத்தில் உண்மையில் விடுதலையைப் பற்றி பயப்படுகின்றனர். எனது சொந்த அனுபவம் என்னவென்றால், ஒரு சிலர் தான் உண்மையிலேயே விடுதலை என்பதை விரும்புகின்றனர். ஏனெனில், இந்த விடுதலையானது, அவர்கள் சந்திக்கத் தயாராக இல்லாத அநேக பிரச்சனைகளைத் கொண்டு வரும் என்பதை அவர்கள் ஆழ்மனதில்

அறிவார்கள். அதைவிட, அவர்கள் சௌகரியமாக சிறைவாசத்தில் இருந்துவிடுவார்கள். அதற்கு மாற்றுவழி என்னவென்றால், நீ உனது விடுதலையைக் கொண்டு ஏதாவது செய்ய வேண்டும். நீ ஒரு படைப்பாளியாக, ஒரு ஆன்மீக சாதகனாக, ஆன்மீக தேடுதல் உள்ளவனாக ஆவதற்குத் தயாராக இருக்க வேண்டும். ஆனால், ஒரு சிலர் தான் இந்த புனிதப் பயணம் போவதற்கு, அவர்களின் உள்ளத்தில் ஆழ்ந்த மௌனத்திற்குள் செல்வதற்கு, அல்லது அன்பு செய்கின்ற பொறுப்புணர்ச்சியை ஏற்றுக் கொள்வதற்கு விரும்புகின்றனர். அதில் உள்ள சங்கடங்கள் மிகப் பெரியவை.

இந்த துக்கம் என்னும் இருளை நீ விலக்க வேண்டும். இல்லையெனில், கூடிய விரைவில் நீ ஏதோ ஒரு சிறைக்குள் நுழைந்துவிடுவாய். நீ உனது துக்கத்தின் சுமையை தூக்கிக் கொண்டே போக முடியாது. இந்த சுமை அதிகமானதாகி, உன்னை மீண்டும் ஒரு அடிமைத்தனத்திற்கோ அல்லது சிறைவாசத்திற்கோ கட்டாயப்படுத்துவதற்கு முன்பு, நீ ஒரு படைப்பாற்றல் மிக்கவனாக ஆவதற்கு உனது சூழ்நிலைகளை எல்லாம் மாற்று. உனக்கு வாழ்க்கையில் சந்தோஷத்தைக் கொடுப்பது எது என்றும், நீ என்னவாக இருக்க விரும்புகிறாய் என்றும், நீ எதனைப் படைக்க விரும்புகிறாய் என்றும், வாழ்க்கையைப் பற்றி உனது விவரிப்பு என்னவாக இருக்க வேண்டும் என்றும், நீ கண்டுகொள்.

விடுதலை என்பது உனது வாழ்க்கையின் வரையறையைக் கண்டுபிடிக்கின்றதொரு சந்தர்ப்பமாகும். ஒரு உண்மையான, உறுதியான தனி மனிதத் தன்மையைக் கொண்டு உன்னைச் சுற்றி இருக்கின்ற இந்த உலகத்தினை கொஞ்சம் சிறந்ததாகவும், கொஞ்சம் அழகானதாகவும், அதில் இன்னும் சில ரோஜாக்களையும், அதிக பசுமையையும், இன்னும் சில பாலைவனச் சோலைகளையும் உருவாக்குவதில் உள்ள சந்தோஷத்தினையும் கண்டு கொள்வதற்கான சந்தர்ப்பமாகும்.

பிரம்ம ஞான சபையை நிறுவிய பிளாவட்ஸ்கி அம்மையாரின் நினைவு எனக்கு வருகிறது. அவர்கள் எப்போதும் கையில் இரண்டு பைகளை எடுத்துக் கொண்டு செல்வது வழக்கம். அவர்கள், காலையில் நடைப்பயிற்சி செய்தாலும் சரி, அல்லது இரயிலில் பிரயாணம் செய்தாலும் சரி, அந்த இரண்டு பைகளும் அவரது கைகளில் இருக்கும். மேலும், இரயிலில் உட்கார்ந்திருக்கும் போதே, அவர்கள் அந்தப் பைகளில் இருந்து ஏதோ ஒன்றினை எடுத்து, இரயிலின் ஜன்னல் வழியாக இரயிலுக்கு வெளியே உள்ள நடைபாதையில் வீசி எறிந்து கொண்டு வருவார்.

மக்கள் அவரிடம், "நீங்கள் ஏன் இது போன்று செய்கிறீர்கள்?" என்று கேட்பது வழக்கம்.

அதற்கு அவர் சிரித்துக் கொண்டு, "இது எனது வாழ்நாள் முழுவதுமான ஒரு பழக்கமாக ஆகிவிட்டது. இவைகள் எல்லாம் பருவ காலங்களில் முளைக்கின்ற மலர்ச் செடிகளின் விதைகள். நான் இந்த வழியில் மீண்டும் வரமுடியாமல் போகலாம் - அவர் உலகம் முழுவதும் சுற்றுபவர் - ஆனால், அதைப் பற்றி கவலையில்லை. பருவ காலம் வரும் போது, இந்த மலர்ச் செடிகள் பூத்துக் குலுங்கும் போது, ஒவ்வொரு நாளும் இதைக் கடந்து செல்பவர்கள் இந்த மலர்களையும், இந்த நிறங்களையும் பார்ப்பார்கள். அவர்களுக்கு என்னைத் தெரியாது. ஆனால், அதைப் பற்றி கவலை இல்லை.

ஒரு விஷயம் மட்டும் நிச்சயம். நான் எங்கோ சில மக்களைச் சந்தோஷமடையச் செய்கிறேன். அவர்களுக்கு என்னைத் தெரியுமா அல்லது தெரியாதா என்பது ஒரு பொருட்டல்ல. இதில் உள்ள கருத்து என்னவென்றால், யாரோ ஒருவரை சந்தோஷமடையச் செய்கின்ற, ஏதோ ஒரு காரியத்தை நான் செய்கிறேன் என்பது தான். சில குழந்தைகள் வந்து இந்தப் பூக்கள் சிலவற்றைப் பறித்துக் கொண்டு, அவர்கள் வீட்டிற்கு எடுத்துச் செல்லலாம். சில காதலர்கள் வந்து இந்தப் பூக்களைப் பறித்து தங்கள் இருவருக்கும் மாலைகள் செய்யலாம். இதனால், அவர்களுக்குத் தெரியாமலேயே நானும் அவர்களது காதலில் ஒரு அங்கமாக இருப்பேன். மேலும், குழந்தைகள் அடைகின்ற அந்த சந்தோஷத்தின் ஒரு அங்கமாகவும் இருப்பேன். இந்தப் பாதையின் வழியாக நடந்து செல்பவர்கள் இந்த மலர்களைப் பார்த்து அடையும் சந்தோஷத்தின் ஒரு பகுதியாகவும் இருப்பேன்," என்று பதில் கூறுவார்.

எனவே, யாரொருவர் விடுதலை என்பதை இந்த உலகினை இன்னும் கொஞ்சம் அழகானதாக ஆக்குவதற்கு கொடுக்கப்படுகின்ற ஒரு சந்தர்ப்பம் தான் என்பதையும், இன்னும் கொஞ்சம் அதிக தன்னுணர்வுடன் இருப்பதற்கான சந்தர்ப்பம் தான் என்பதையும் தவிர வேறு ஒன்றும் இல்லை என்று புரிந்து கொள்கிறார்களோ அவர்கள் துக்கமாக இருக்க மாட்டார்கள்.

இந்தக் கேள்வியை நீ கேட்பது மிகவும் நல்லது. ஏனெனில், நீ இந்தக் கேள்வியைக் கேட்கவில்லையென்றால், நீ இந்த துக்கத்தை சுமந்து கொண்டே தான் சென்றிருப்பாய். அது உனது விடுதலையை மெதுவாக விஷமானதாக ஆக்கிவிடும். ஒரு எதிர்மறையான விடுதலை என்பது உறுதியானது அல்ல. அது மறைந்து போகும். விடுதலை என்பது நேர்மறையானதாக இருக்க வேண்டும்.

**சத்தியத்தின் பாதையைத் தேடிச் செல்வதன் மூலம், ஒருவன் தனது சொந்த நாட்டினை கொடுங்கோல் ஆட்சியிலிருந்து விடுதலையடையச் செய்வது சாத்தியப்படுமா?**

நீ சத்தியத்தைத் தேடுவதற்கும், உனது ஆன்மீக விடுதலைக்கும், அரசியல் கொடுங்கோல் ஆட்சிக்கு எதிரான உனது போராட்டத்திற்கும், இந்த விஷயங்கள் ஏதோ கொஞ்சம் சிக்கலானவை ஆக இருந்தாலும் கூட, இவைகளுக்கு இடையே எந்தவிதமான சச்சரவும் இல்லை.

ஆனால், இதில் நீ ஆன்மீக விடுதலை அடைவதற்குத் தான் முன்னுரிமை கொடுக்க வேண்டும். ஏனெனில், அரசியல் கொடுங்கோல் ஆட்சிகள் வரும், போகும். மேலும், நீ ஒரு கொடுங்கோல் ஆட்சியை தூக்கி எறிந்தால், அதன்பிறகு அந்த இடத்தில் மற்றொரு கொடுங்கோல் ஆட்சி வராது என்று நீ நிச்சயத்துடன் இருக்க முடியாது.

எந்த கொடுங்கோல் ஆட்சியும் எப்போதும் இருப்பதில்லை. அதன் நாட்கள் வரையறைக்குட்பட்டவை. யாராலும், மக்களின் உறுதிப்பாட்டை அழிக்க முடியாது. கொடுங்கோல் ஆட்சியாளர்கள் மக்களை கொன்று போடலாம் அல்லது சிறையில் அடைக்கலாம். ஆனால், ஒருநாள் அவர்கள், தங்களது ராஜ்ஜியத்தை காப்பாற்றுவதற்கும், மக்களை அடிமைப்படுத்துவதற்கும் எடுத்துக் கொண்ட அந்த முயற்சிகளே, அந்த மக்களை அவர்களுக்கு எதிரானவர்களாக ஆக்கிவிடும்.

ஆனால், புதிதாக வரும் கொடுங்கோல் ஆட்சிக்கு என்ன செய்வாய்? நீ ஒரு கொடுங்கோல் ஆட்சியில் இருந்து மற்றொரு ஆட்சியின் கைகளில் மாறி இருப்பாய். நிச்சயமாக, அதே மக்கள் கொல்லப்படவோ அல்லது தூக்குத் தண்டனை விதிக்கப்படவோ செய்யப்பட மாட்டார்கள். இப்போது குற்றவாளிகளாக மாட்டிக் கொள்பவர்கள், கடந்த ஆட்சியில் ஈடுபட்டவர்களாகத் தான் இருப்பார்கள். அவர்கள் தான் கொல்லப்படுவார்கள்; அவர்களுக்குத் தான் தூக்குத் தண்டனை விதிக்கப்படும். ஆனால், யார் கொல்லப்படுகிறார்கள், யாருக்குத் தூக்குத் தண்டனை அளிக்கப்படுகிறது என்பது ஒரு பொருட்டல்ல. அவர்கள் எல்லோரும் மனிதர்கள் தான். மேலும், அவர்கள் அனைவரும் உனத சகோதர சகோதரிகள் தான். மேலும், இதிலுள்ள விநோதமான ஒரு விஷயம் என்னவென்றால், முந்தைய ஆட்சியை நீக்குவதற்குப் போராடியவர்களும் கூட, இந்தப் புதிய ஆட்சியால் சுட்டுக் கொல்லப்படுவார்கள்.

இது ஒரு விநோதமான விதி. ஆனால், இதில் ஒரு கண்ணுக்குத் தெரியாத தர்க்கவாதம் உள்ளது. யாரெல்லாம் புரட்சியாளர்களாக இருந்தார்களோ, அவர்களெல்லாம் புரட்சியாளர்களாக இருப்பதற்கு பழக்கப்பட்டவர்கள் ஆகிவிடுவார்கள். மேலும், எந்த ஆட்சியானாலும் அதுவும் புரட்சிக்கு எதிராகத்தான் இருக்கும். அந்த ஆட்சியானது புரட்சியாளர்களால் உருவாக்கப்பட்டதாகக் கூட இருக்கலாம். ஆனால், அவர்களே ஆட்சிக்கு வந்தவுடன், புரட்சிக்கு எதிரானவர்கள் ஆகிவிடுவார்கள். ஏனெனில், இப்போது புரட்சி என்பது அவர்களின் ஆட்சி அதிகாரத்தைக் எதிர்த்துத் தான், அவர்கள் அதற்கு ஆதரவாக இருந்தனர். இது ஒரு எளிமையான வாதம். மேலும், அந்த புரட்சியாளர்களால் இந்த விடுதலைக்காகத் தானா நாம் போராடினோம் என்பதை நம்ப முடியாது. ஆட்சியில் மக்கள் மட்டுமே மாறி உள்ளனர். ஆனால், எல்லாம் அப்படியே தான் உள்ளது. அதே அதிகாரவர்க்கம், அதே அசிங்கமான அரசியல்வாதிகள் தான்.

மேலும், இந்தப் புரட்சியாளர்கள் எல்லோரும், அவர்களின் புரட்சிக்கு ஆதரவு அளித்த மக்களுக்குக் கொடுத்த வாக்குறுதிகளை எல்லாம் மறந்துவிடுவார்கள். அவர்கள், அந்த மக்களையே சுரண்ட ஆரம்பித்துவிடுவார்கள். இயற்கையாகவே, கடந்த காலங்களில் உள்ள அநேகப் புரட்சியாளர்கள், ஆட்சி அதிகாரத்திற்கு வந்தவர்களிடமிருந்து விலகிச் செல்ல ஆரம்பித்துவிடுவார்கள். ஒருகாலத்தில், அவர்கள் தோளோடு தோள் நின்று எதிரியோடு போரிட்டார்கள். ஆனால், இப்போது அவர்கள் பிரிந்து சென்று விடுவார்கள். ஏனெனில், இப்போது அந்த புரட்சியானது அவர்களை காட்டிக் கொடுத்துவிட்டது. மேலும், இப்போது ஆட்சிக்கு வந்துள்ள புரட்சியாளர்கள் யாராக இருந்தாலும், அவர்கள் மீதமுள்ள புரட்சியாளர்களை கொல்ல ஆரம்பித்துவிடுவார்கள். ஏனெனில், அதிகாரம் என்பது எல்லா புரட்சிகரமான கருத்துக்களையும் அழித்துவிடும். மேலும், புரட்சியாளர்கள் மிகவும் ஆபத்தானவர்கள், அவர்கள் தான் முந்தைய ஆட்சியை தூக்கி எறிந்தார்கள்; அவர்களால் இந்த ஆட்சியையும் கூட தூக்கி எறிய முடியும்.

இது இது சிக்கலான விளையாட்டு. இதற்கு நீ முன்னுரிமை கொடுக்கக் கூடாது. உனது முன்னுரிமை, உனது சொந்த வளர்ச்சிக்கானதாகத் தான் இருக்க வேண்டும். எந்தவிதமான கொடுங்கோல் ஆட்சி என்பது ஒரு பொருட்டல்ல. கொடுங்கோல் ஆட்சி வெறுமனே கொடுங்கோல் ஆட்சி தான். அது கொலையும், குற்றமும் நிறைந்தது.

எனவே, ஒரு அழகான எதிர்காலத்தில் அதிக நம்பிக்கை கொள்ளாதே. சரித்திரம் நமக்கு வேறு ஒன்றைக் கற்பிக்கிறது. மக்கள் இன்னும் அந்த அசிங்கமான சூழ்நிலையில் தான் இருப்பார்கள். இந்த புதிய ஆட்சியிலும் அதே பயங்கரங்களில் தான் ஈடுபடுவார்கள். இப்போது, கொலை செய்பவர்கள் மட்டுமே மாறி இருப்பார்கள்.

உனது நாட்டின் விடுதலைக்காக போராடுவதற்கு நான் எதிரானவன் அல்ல; ஆனால், அதை நீ ஒரு முன்னுரிமையாக ஆக்கி விடாதே. உனது முன்னுரிமை, உனது ஆன்மீக விடுதலைக்கான முன்னுரிமையாகத் தான் இருக்க வேண்டும். ஏனெனில், அதை வேறு யாராலும் எடுத்துச் சென்றுவிட முடியாது. அதோடு சேர்ந்து கொண்டு, உன்னால் கொடுங்கோல் ஆட்சிக்கு எதிராகப் போராட முடியும் என்றால், அதன்பின்னர் நான் அதை முழுமையாக ஆதரிக்கிறேன். ஆனால், அது சுலபமானதாக இருக்கும் என்று நான் நினைக்கவில்லை. உண்மையில், அது மிகவும் கடினமானதாக இருக்கும். அரசாங்கங்களை எதிர்த்து போராட ஆரம்பிக்கின்ற அந்த நொடியிலேயே நீ அதில் அதிக ஈடுபாட்டுடன் இருப்பதால், நீ உன்னை முற்றிலும் மறந்துவிடுவாய்.

எந்த ஒரு அடிமைத்தனத்திலும் இருப்பது அசிங்கமானது தான். ஆனால், மிகப்பெரிய அடிமைத்தனம் உனது ஆன்மாவினுடையது தான். (உனது ஆன்மாவை அதன் கடந்த காலங்களில் இருந்து விடுதலை செய், அதை இந்த நாட்டில் இருந்து விடுதலை செய். நீ வளர்த்து வரப்பட்ட அந்த மதத்திலிருந்து அதை விடுதலை செய். சத்தியத்திற்கான உனது தேடுதல் தான் அடிப்படையானதாகவும், முடிவான கவலையாகவும் இருக்க வேண்டும்.) உன்னிடம் ஏதாவது சக்தி மிச்சம் இருந்தால், நீ அரசியல் கொடுங்கோல் ஆட்சிக்கு எதிராக போராடலாம். ஆனால், அதில் நீ ஏமாற்றம் தான் அடைவாய். காலம் காலமாக, "நாங்கள் சுதந்திரமானவர்களாக இருப்போம்," என்கிற கொள்கையுடையவர்கள் யாராக இருந்தாலும், அவர்கள் ஏமாந்து தான் போயிருக்கிறார்கள்.

இந்தியாவில், நான் சிறு குழந்தையாக இருந்த போது விடுதலைப் போராட்டம் நடந்து கொண்டிருந்தது. எனவே, எனது குடும்பம் முழுவதும் அதில் ஈடுபட்டிருந்தது. எனது சித்தப்பாக்கள் சிறைச்சாலைகளில் இருந்தனர். எனது குடும்பமே, கிட்டத்தட்ட எப்போதும் வீட்டுக்காவலில் இருந்தது. எனது சித்தப்பாக்கள், அவர்களின் கல்வியை முடிக்க முடியாமல் போயிற்று. ஏனெனில், அவர்கள் பல்கலைக் கழகங்களில் காலத்தைக் கழிப்பதற்குப் பதிலாக, அவர்கள் சிறைச்சாலைகளில் காலம் கழித்தனர். மேலும், அவர்கள் எல்லாவிதமான கொடுமைகளுக்கும் ஆளானார்கள். ஆனால்,

எவ்வளவு தான் நெடியதாக இருந்தாலும், அன்று இரவோடு அது முடிந்துவிடும் என்கிற மிகப்பெரிய நம்பிக்கை இருந்தது.

அது முடிந்துவிட்டது. ஆனால், புதியது இன்னும் வரவில்லை. இதுதான் அதிசயம். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் போய்விட்டனர். மேலும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கு எதிராகவும், அது மக்களுக்குச் செய்த மனிதாபிமானமற்ற செயல்களுக்கு எதிராகவும் போராடியவர்கள், இப்போது ஆட்சி அதிகாரத்திற்கு வந்துவிட்டனர். ஆனால், இப்போது ஆட்சியில் இருப்பவர்களும் அதையே தான் செய்து கொண்டிருக்கிறார்கள். நிச்சயமாக, இது போன்ற சுதந்திரத்தை மக்கள் எதிர்பார்த்துக் கொண்டிருக்கவில்லை.

எனது குழந்தைப் பருவத்து நாட்களை என்னால் நினைவு கூற முடிகிறது. அப்போது எல்லோரிடமும் என்ன ஒரு நம்பிக்கை இருந்தது. ஏதோ ஒரு பொன்னான யுகத்திற்கு அருகில் நாம் வந்துவிட்டது போன்ற உணர்வு இருந்தது. ஆனால், வெறும் ஏமாற்றத்தைத் தவிர, வேறு எதுவும் நடக்கவில்லை. இப்போது ஆள்பவர்கள் இந்தியர்கள் தான், பிரிட்டிஷ்காரர்கள் அல்ல. ஆனால், அவர்களின் உபாயங்கள் ஒன்று தான். ஆட்சியைப் பிடித்து தொங்கிக் கொண்டிருப்பதும் அதே போன்று தான் உள்ளது. மக்களைச் சுரண்டுவதும் அதே போன்று தான் உள்ளது. இந்த அதிகாரவர்க்கம் மிகவும் பலம் மிக்கதாக ஆகிவிட்டது. மேலும், இந்த நாடு அதிர்ச்சி அடைந்து உள்ளது. "நாம் போராடிப் பெற்ற விடுதலைக்கு என்னவாயிற்று? நமது இளைஞர்கள் எதற்காக சிலுவையில் அறையப்பட்டார்கள்? எதற்கு ஆயிரக்கணக்கான மக்கள் சிறையில் அடைக்கப்பட்டார்கள், கொல்லப்பட்டார்கள்? இப்படிப்பட்ட தியாகங்கள் எல்லாம் செய்தது இத்தகைய விடுதலையைப் பெறத்தானா?" என்று அதிர்ச்சி அடைந்துள்ளனர்..

நிச்சயமாக இது விடுதலை அல்ல. ஒருவேளை, இந்த அரசியல் உலகில் ஒரு புரட்சியாளனுக்கு பதிலாக ஒரு எழுச்சியாளன் பிறக்காத வரையில், அந்த வகையான விடுதலை ஒருபோதும் வர முடியாது. புரட்சியாளர்கள் தோற்றுப் போய்விட்டனர். மேலும், ஒருமுறை மட்டுமல்ல, ஆயிரக்கணக்கான முறை தோற்றுப் போய்விட்டனர். இப்போது அதை ஒரு விதியாக ஏற்றுக் கொள்ளலாம். புரட்சியாளன் ஒருவன் மிகப்பெரிய விஷயங்களைப் பற்றி பேசுவான், சொர்க்கம் போன்ற வாழ்விற்கு வாக்குறுதி கொடுப்பான். ஆனால், அவன் ஆட்சி அதிகாரத்திற்கு வந்தவுடன், அவன் முந்தைய கொடுங்கோலனை விடவும், தான் மிகப்பெரிய கொடுங்கோலன் என்று நிரூபித்துவிடுவான்.

இந்த புரட்சியாளர்களின் வாக்குறுதிகளில் எனக்கு எப்போதும் நம்பிக்கை இல்லை. எனது நம்பிக்கை, எழுச்சியாளன் ஒருவன்

பிறப்பதில் தான் உள்ளது. மேலும், (ஒரு எழுச்சியாளனுக்குத் தேவையான அடிப்படை மாற்றம், முக்கியமான மாற்றம் என்னவென்றால், உனது சொந்த கடந்த காலம், உனது சொந்த மதம், உனது சொந்த நாடு ஆகியவற்றிலிருந்து நீ விடுதலை பெறுவது தான் ஆகும். தியானம் உன்னை ஒரு தனிமனிதன் ஆக்குவதற்கு உதவும்; மேலும், யாரெல்லாம் ஆன்மீக விடுதலையுடன் இருக்கிறார்களோ, கடந்த காலத்திற்குள் செல்கின்ற எல்லாப் பாலங்களையும் உடைத்துவிட்டார்களோ, தொலைதூரத்தில் உள்ள நட்சத்திரங்களின் மீது தங்கள் கண்களை நிலையாக நிறுத்துகிறார்களோ, அவர்கள் எல்லோரும் சேர்ந்த ஒரு கம்யூனின் மூலமாக மட்டுமே உண்மையான மாற்றத்தை கொண்டுவர முடியும்.)

அவர்கள் எல்லோரும் ஒருவகையில், கவிஞர்களாகவும், கனவு காண்பவர்களாகவும், ஞானிகளாகவும், தியானம் செய்பவர்களாகவும் இருப்பார்கள். மேலும், இந்த உலகினை நாம் இப்படிப்பட்ட மனிதர்களால் நிரப்பவில்லையெனில், இந்த உலகில் ஒரு கொடுங்கோல் ஆட்சியை மாற்றிவிட்டு வேறு ஒரு கொடுங்கோல் ஆட்சி தான் வரும். அந்த வேலை முழுதும் பயனற்றதாகத் தான் இருக்கும்.

(நீ தான் உனக்கு முன்னுரிமை. உனத வேர்களைத் தேடிச் செல், உன்னை நீ கண்டுகொள், ஒரு எழுச்சியாளனாக மாறு. மேலும், உன்னால் எத்தனை எழுச்சியாளர்களை உருவாக்க முடியுமோ, அத்தனை பேரை உருவாக்கு. எதிர்கால மனித இனம் ஒரு பொன்னான எதிர்காலத்தை உருவாக்குவதற்கு, அந்த ஒரு வழி மட்டுமே உதவ முடியும்.)

**எனது பயிற்சியை வடிவமைத்த பாதிரியார்களும், கன்னியாஸ்திரிகளும், எனது உறவினர்களும் இப்போது வயதானவர்களாகி, சக்தியற்றவர்களாக ஆகிவிட்டனர். அவர்களில் பெரும்பாலானோர் இறந்துவிட்டனர். அப்படிப்பட்ட ஆதரவற்ற வயதான மக்களுக்கு எதிராக கிளர்ச்சி செய்வது மதிப்பற்றது போல் தெரிகிறது.**

**நான் இப்போது பாதிரியாராகவும், கொள்கைகளோடும் இருக்கிறேன். எனக்கு வெளி உலகத்தின் எதனோடும் போராடுவது, வெறுமனே காலத்தை வீணடிப்பதாகும் என்பதையும், அதில் முக்கிய கருத்து ஒன்றும் இல்லை என்பதையும் என்னால் உணர முடிகிறது. இது , சூழ்நிலையை மேலும் விரக்தியானதாகவும், சிக்கலானதாகவும் ஆக்குகிறது. இது ஆன்மாவே, ஆன்மாவிற்கு எதிராக கிளர்ச்சி செய்வது போன்று தெரிகிறது. அந்த கிளர்ச்சியைச் செய்ய இருப்பது, எனது முக்கிய ஆன்மா அல்ல என்றும், அது எனது அசல் முகம் அல்ல என்பதையும் நான் ஏற்றுக் கொள்கிறேன். கிளர்ச்சி செய்ய இருப்பது இந்த பயிற்சி அளிக்கப்பட்ட**

**ஆன்மா தான். இந்த போலி ஆன்மாவாகவுள்ள தப்பிக்கும் தந்திரம் தான். ஆனால், நான் அறிந்த அல்லது கொண்டிருக்கிற ஆன்மா இது ஒன்று மட்டும் தான். இதைக் கொண்டு தான் கிளர்ச்சி செய்ய வேண்டும். எனவே, ஒரு தப்பிக்கும் தந்திரம், இன்னொரு தப்பிக்கும் தந்திரத்திற்கு எதிராக எப்படி செய்வதா கிளர்ச்சி?**

நான் பேசுகின்ற எழுச்சி என்பது, யாருக்கும் எதிராக செய்யப்பட வேண்டியதில்லை. உண்மையில், அது கிளர்ச்சி அல்ல; ஒரு புரிதல் மட்டுமே. நீ, வெளியில் உள்ள பாதிரியார்கள், கன்னியாஸ்திரிகள், பெற்றோர் இவர்களோடு போராட வேண்டாம். மேலும், நீ உனக்குள் உள்ள அந்த பாதிரியார், கன்னியாஸ்திரிகள் மற்றும் பெற்றோர் ஆகியவர்களோடும் கூட போராட வேண்டாம். ஏனெனில் உள்ளே, வெளியே என்பது ஒரு பொருட்டல்ல; அவைகள் இரண்டும் உன்னிலிருந்து தனியானவை. வெளியே இருப்பதும் தனியானது; உள்ளே என்பதும் தனியானது. உள்ளே உள்ளது வெறுமனே வெளியே உள்ளதன் பிரதிபலிப்பு தான்.

நீ, "இப்படிப்பட்ட ஆதரவற்ற வயதான மக்களுக்கு எதிராக கிளர்ச்சி செய்வது மதிப்பற்றது," என்று கூறுவது முற்றிலும் சரியானது தான். நானும் அவர்களுக்கு எதிராக கிளர்ச்சி செய் என்று கூறவில்லை. மேலும், அவர்கள் உனக்குள்ளே போட்டு வைத்துள்ள விஷயங்களுக்கு எதிராகவும் கிளர்ச்சி செய் என்றும் கூட நான் கூறவில்லை. நீ உனது சொந்த மனதோடு எதிர்த்துப் போராடினால், அது ஒரு எதிர்ச் செயல் ஆகுமே தவிர, அது எழுச்சி அல்ல. வித்தியாசத்தைக் குறித்துக் கொள். எதிர்ச் செயல் என்பது கோபத்தால் வருகிறது! எதிர்ச் செயல் என்பது வன்முறையானது. எதிர்ச் செயல் ஆற்றும் போது, நீ கோபத்தில் குருடனாக ஆகிவிடுகிறாய். நீ எதிர் முனைக்கு நகர்ந்து செல்ல ஆரம்பித்துவிடுகிறாய்.

உதாரணமாக, உனது பெற்றோர் நீ தினமும் குளித்து சுத்தமாக இருக்க வேண்டும் என்று உனக்கு கற்றுக் கொடுத்திருப்பார்கள். சுத்தம் என்பது கடவுள் தன்மைக்கு அடுத்தபடியாக இருப்பது என்று ஆரம்பத்திலிருந்தே உனக்குக் கற்றுக் கொடுத்திருப்பார்கள். அப்படியிருக்கும் போது, ஒருநாள் நீ கிளர்த்து எழுகிறாய். அப்போது நீ என்ன செய்வாய்? நீ குளிப்பதை நிறுத்திவிடுவாய். நீ அழுக்குடன் வாழ ஆரம்பித்துவிடுவாய். இப்போது, சுத்தத்தின் எதிர்முனைக்கு நீ நகர்ந்து சென்றிருப்பாய். சுத்தமாக இருத்தல் கடவுள் தன்மைக்கு அடுத்தபடியாக இருப்பது என்று உனக்கு கற்றுக் கொடுக்கப்பட்டுள்ளது. ஆனால், இப்போது நீயோ அழுக்குடன் இருப்பது கடவுள் தன்மைக்கு

அடுத்தபடியாக இருப்பது என்று நினைத்துக் கொண்டிருப்பாய். நீ ஒரு முனையில் இருந்து அடுத்த முனைக்கு நகர்ந்து சென்றிருப்பாய். இது கிளர்ச்சி அல்ல. இது கோபம், பழி வாங்குதல்.

மேலும், இப்படி நீ உனது பெற்றோர்களின் கொள்கையான சுத்தமாக இருக்க வேண்டும் என்பதற்கு எதிராக செயல்படுவதால். நீ இன்னமும் அந்தக் கொள்கையோடு அதீத பற்று கொண்டவனாகத் தான் இருப்பாய். அது இன்னமும் உனது மனதைவிட்டு அகலாமல் இருக்கிறாய். அது இன்னமும் உன்னைவிட பலம் மிக்கதாகவும், உன் மீது ஆதிக்கம் செலுத்துவதாகவும் இருக்கும். நீ அதற்கு எதிரான அசுத்த வாழ்க்கையை தேர்ந்தெடுத்திருந்தாலும் கூட, அது இன்னமும் உனது வாழ்க்கையில் ஆட்சி செய்யும். நீ சுலபமாக குளித்துவிட முடியாது; உன்னை தினந்தோறும் குளிக்கச் சொன்ன அந்த பெற்றோர்களை எப்போதும் நினைவில் வைத்திருப்பாய். இப்போது நீ குளிப்பதே இல்லை.

இப்போதும் உன்னிடம் ஆதிக்கம் செலுத்துவது யார்? இன்னமும் உனது பெற்றோர்கள் தான். அவர்கள், உனக்கு என்ன செய்தார்களோ அதை நீ செய்யாமல் இருக்க முடியாது. இது எதிர்ச் செயல், இது கிளர்ச்சி அல்ல.

அதன் பிறகு எழுச்சி என்றால் என்ன? எழுச்சி என்பது சுத்தமாகப் புரிந்து கொள்ளுதல். நீ வெறுமனே அந்தச் செயல் என்ன என்பதை புரிந்து கொள்வாய். அதன்பிறகு, நீ ஒருபோதும் அந்த சுத்தமாக இருக்க வேண்டும் என்பதில் ஒரு மனநோயாளி போல நடந்து கொள்ள மாட்டாய். அவ்வளவு தான். இப்போது நீ சுத்தம் இல்லாதவனாக இருக்க மாட்டாய். சுத்தம் என்பது, அதனளவில் அழகானது. ஆனால், ஒருவர் அதில் அதீத பற்று வைக்கக் கூடாது; ஏனென்றால், அதீத பற்றானது நோய் போன்றது.

உதாரணமாக, நாள் முழுவதும் தனது கைகளைக் கழுவிக் கொண்டே இருக்கின்ற ஒருவன் மனநோயாளியாவான். கைகளைக் கழுவுவது கெட்ட செயல் அல்ல. அதற்காக நாள் முழுவதும் கைகளைக் கழுவிக் கொண்டே இருப்பது பைத்தியக்காரத்தனம். மேலும், அதற்காக ஒரே அடியாக கைகளைக் கழுவுவதே இல்லை என்று நிறுத்திவிட்டாலும், மீண்டும் நீ அந்த பைத்தியக்காரத்தனத்தின் பொறியில் மாட்டிக் கொள்வாய்.

புரிந்து கொண்ட ஒருவன், தனது கைகளை எப்போது கழுவ வேண்டுமோ அப்போது மட்டுமே கழுவுவான். தேவைப்படாத போது,

அந்தப் பழக்கத்தால் அவன் அதிதீவிரமான உணர்வுடன் இருக்க மாட்டான். அவன், அதைக் குறித்து வெறுமனே இயல்பாகவும், தானாக நடந்தேறும்படியும் இருப்பான். அவன் புத்திசாலித்தனத்துடன் வாழ்வான். அவ்வளவு தான்.

அதிதீவிர பற்றிற்கும், புத்திசாலித்தனத்திற்கும் வேறுபாடு அதிகம் கிடையாது. உதாரணமாக, ரோட்டில் நடந்து செல்லும் போது, குறுக்கே ஒரு பாம்பு வந்தால், நீ உடனே தாவிக் குதிக்கிறாய். இயல்பாகவே, நீ பயத்தில் தாவிக் குதிக்கிறாய். ஆனால், இந்த பயம் புத்திசாலித்தனமானது. நீ இப்படி புத்திசாலியாக இல்லாமல் முட்டாளாக இருந்தால், நீ தாவிக் குதிக்க மாட்டாய். அப்போது நீ உனது வாழ்க்கையில் தேவையில்லாமல் ஆபத்தினை வரவழைத்துக் கொள்வாய். புத்திசாலி மனிதன், உடனே தாவிக் குதிப்பான். ஏனெனில், அங்கே பாம்பு உள்ளது. நீ பயத்தினால் தாவிக் குதிக்கிறாய். ஆனால், இந்த பயம் புத்திசாலித்தனமானது, நேர்மறையானது, வாழ்க்கைக்குச் சேவை செய்வது.

ஆனால், இதே பயம், உனது அதிதீவிர உணர்வாகவும் இருக்க முடியும். உதாரணமாக, வீடு எங்கே நம் மேல் இடிந்து விழுந்துவிடுமோ என்று பயந்து கொண்டு, நீ வீட்டில் வசிக்காமல் போகலாம். வீடுகள் இடிவது தெரிந்தது தான். அது உண்மைதான். நீ அதைக் குறித்து எந்த தவறான எண்ணமும் கொள்ளவில்லை. நீ இப்போது, "மற்ற வீடுகள் எல்லாம் இடிந்து விழும் போது, இதுவும் ஏன் இடிந்து விழக் கூடாது?" என்று வாதாடலாம். ஆனால், இப்போது உனது பயத்தால் நீ எந்த வீட்டிலும் வசிக்க முடியாது. ஏனெனில், அந்த வீடு இடிந்து விழுந்து விடுமோ என்று பயப்படுவாய். இப்போது, இந்த பயமானது புத்திசாலித்தனம் இல்லாதது.

ஒருவன், எதன் மீதும் தீவிர உணர்வு கொள்ளலாம். எல்லைகளுக்குட்பட்டு புத்திசாலித்தனமான எது ஒன்றாக இருந்தாலும், நீ அதை அதன் எல்லை தாண்டி அதிகம் இழுத்தால், நீ மனநோயாளி ஆகிவிடுவாய். எதிர் செயல் என்பது ஒரு செயலின் எதிர்முனைக்கு நகர்ந்து செல்வது போன்றது. எழுச்சி என்பது ஒரு விஷயத்தை ஆழ்ந்து புரிதல், ஒரு விஷயத்தை தர்க்கமாகப் புரிதல். மேலும், எழுச்சி என்பது, உன்னை எப்போதும் நடுநிலையில் வைத்திருக்கும், அது உனக்கு சமநிலையைக் கொடுத்துவிடும்.

எனவே, நீ யாரோடும் போராட வேண்டாம். கன்னியாஸ்திரிகள், பாதிரியார்கள், பெற்றோர்கள், வெளியில் உள்ளவை, உனக்கு உள்ளே உள்ளவை ஆகிய எதனோடும் போராட வேண்டாம். நீ போராடக் கூடாது. ஏனெனில், அந்த போராட்டத்தை எப்போது நிறுத்துவது என்று

உனக்குத் தெரியாது. போராட்டத்தில், ஒருவன் தனது விழிப்புணர்வை இழந்துவிடுகிறான். போராட்டத்தில், ஒருவன் எல்லைக்கோடு வரை செல்ல ஆரம்பித்துவிடுகிறான். இதை நீயே கவனிக்க முடியும்.

உதாரணமாக, நீ உனது நண்பர்களோடு உட்கார்ந்திருக்கும் போது, நீ சாதாரணமாக, "நேற்று நான் பார்த்த அந்த திரைப்படம் நல்ல படம் இல்லை," என்று கூறுகிறாய். நீ அப்படி போகிற போக்கில் சொல்லி வைப்பாய். ஆனால் அதன்பிறகு, யாராவது ஒருவர், "நீ சொல்வது தவறு. நானும் அந்தப் படத்தைப் பார்த்தேன். இது வரை வந்த படங்களிலேயே இதுதான் நல்ல படம்," என்று கூறுவார். இப்போது நீ தூண்டப்படுவாய், சவால் விடப்படுவாய். எனவே, நீ விவாதம் பண்ண ஆரம்பித்து விடுவாய். உடனே நீ, "அது ஒரு குப்பை படம். ஒன்றுக்கும் உதவாத படம்," என்று கூறி விமர்சனம் செய்வாய். உனது நண்பன் மேலும் மேலும் தனது கருத்தை வலியுறுத்த ஆரம்பித்தால், நீ மேலும் மேலும் கோபம் கொள்வாய். அந்த கோபத்தில் நீ நினைத்தும்கூட பார்த்திராத சில விஷயங்களைப் பேசி விடுவாய். மேலும் இறுதியில், இந்த முழு விஷயத்தையும் நீ திரும்பிப் பார்த்தால், ஆரம்பத்தில் நீ "இந்தப் படம் பார்க்கக் கூடிய ஒரு படம் அல்ல" என்று லேசாகத் தான் கூறியிருப்பாய். ஆனால், நீ உனது வாதத்தை இப்போது முடித்துவிட்ட போது, நீ கோபம் என்கிற எதிர் முனைக்குச் சென்றிருப்பாய். நீ உன்னிடம் உள்ள அசிங்கமான வார்த்தைகளை யெல்லாம் கட்டவிழ்த்து விட்டிருப்பாய். நீ ஏதாவது ஒரு வழியில் கண்டனம் செய்ய வேண்டியதிருக்கும். எனவே, நீ கண்டனம் செய்கிற உனது முழுத் திறமையையும் காட்டிவிடுவாய். ஆனால், நீ இதை ஆரம்பத்தில் செய்வதற்குத் தயாராக இல்லை. நீ கூறியதற்கு யாரும் மறுப்புத் தெரிவித்திருக்கவில்லையென்றால், நீ அதைப் பற்றி முற்றிலும் மறந்து போயிருப்பாய். மேலும், இது போன்று காரசாரமான வாக்குவாதங்களை நீ ஒருபோதும் செய்திருக்க மாட்டாய். நீ சண்டை போடும் போது, நீ கோபம் என்னும் எதிர்முனைக்குச் சென்றுவிடுவதால் தான் இப்படி நிகழ்கிறது.

---

**எதிர் செயல் என்பது ஒரு செயலின் எதிர்முனைக்கு நகர்ந்து செல்வது போன்றது. எழுச்சி என்பது ஒரு விஷயத்தை ஆழ்ந்து புரிதல், ஒரு விஷயத்தை தர்க்கமாகப் புரிதல். மேலும், எழுச்சி என்பது, உன்னை எப்போதும் நடுநிலையில் வைத்திருக்கும், அது உனக்கு சமநிலையைக் கொடுத்துவிடும்.**

---

உனது கட்டுதிட்டங்களுக்கு எதிராக நீ போராடு என்று நான் கற்பிக்கவில்லை. அவைகளைப் புரிந்து கொள். அவைகளைப் பற்றி புத்திசாலித்தனத்துடன் இரு. அவைகள் உன்னிடம் எப்படி ஆதிக்கம் செலுத்துகின்றன என்றும், உனது நடத்தையை அவைகள் எப்படி பாதிக்கிறது என்பதையும், உனது தனிமனிதப் பண்பை அவைகள் எப்படி வடிவமைக்கின்றன என்றும், அவைகள் எப்படி உன்னை பாதிப்புக்கு உள்ளாக்கி விடுகின்றன என்றும் வெறுமனே பார். வெறுமனே கவனி! தியானத்துடன் இரு. மேலும், ஒருநாள் நீ உனது கட்டுதிட்டங்கள் உனக்குள் எப்படி வேலை செய்கின்றன என்பதைக் கண்டு கொண்டால், திடீரென்று உன்னிடம் ஒரு சமநிலை வந்துவிடும். அப்படி நீ புரிந்து கொள்கின்ற அந்த நொடிப் பொழுதே, நீ சுதந்திரமானவன் ஆகிவிடுவாய்.

புரிந்து கொள்ளுதல் தான் விடுதலை. மேலும், அந்த விடுதலையைத் தான் நான் எழுச்சி என்று அழைக்கிறேன்.

உண்மையான எழுச்சியாளன், ஒரு போராடுபவன் அல்ல. அவன், ஒரு புரிந்து கொள்கின்ற மனிதன். அவன் கோபத்தில் வளராமல், வெறுமனே புத்திசாலித்தனத்தில் வளர்வான். உனது கடந்த காலங்களோடு நீ கோபமாக இருந்தால், நீ உன்னை மாற்றிக் கொள்ள முடியாது. நீ கோபத்துடன் இருந்தால், அதன்பிறகு உனது கடந்த காலம் தான் உன்மீது ஆதிக்கம் செலுத்தும். அது தான் உனது உயிரின் மையமாக இருக்கும். அது தான் உனது மனமானது குவிகின்ற விஷயமாக இருக்கும். மேலும், உனது கடந்த காலத்தோடு ஒட்டிக் கொண்டு, நீ அங்கேயே இருந்துவிடுவாய். நீ எதிர்முனைக்கு மாறிப் போயிருக்கலாம். ஆனாலும் கூட, நீ இன்னமும் உனது கடந்த காலத்தோடு தான் பற்றுக் கொண்டிருப்பாய்.

இதைக் குறித்து ஜாக்கிரதையாக இரு. தியானம் செய்கின்ற ஒருவனின் வழி இதுவல்ல. புரிந்து கொள்வதன் மூலம் எழுச்சி கொள்கின்ற வழி இதுவல்ல. வெறுமனே புரிந்து கொள்.

நீ ஒரு தேவாலயத்தின் அருகில் செல்லும் போது, உனக்குள், அந்த தேவாலயத்திற்குள் சென்று பிரார்த்தனை செய்ய வேண்டும் என்கிற ஆழ்ந்த ஆசை எழுகிறது. அல்லது நீ ஒரு கோவிலைக் கடந்து செல்லும் போது, உன்னையும் அறியாமல், நீ அந்த கோவில் உள்ள தெய்வத்திற்கு தலைவணங்குகிறாய். இவைகளைக் கவனித்துப் பார். இப்படிப்பட்ட விஷயங்களை நீ ஏன் செய்கிறாய்? நான் உன்னைப் போராடச் சொல்லவில்லை. நான், உன்னை கவனிக்கத் தான் சொல்கிறேன். நீ ஏன் கோவிலுக்கு முன்பு தலை வணங்குகிறாய்? ஏனெனில், அந்தக் கோவில்

தான் சரியான கோவில் என்றும், அந்தக் கோவிலில் உள்ள தெய்வம் தான் உண்மையான கடவுளின் உருவம் என்றும் உனக்கு கற்பிக்கப்பட்டு இருக்கிறது. நிச்சயமாக அது உனக்குத் தெரியுமா? அல்லது வெறுமனே அது உனக்கு சொல்லிக் கொடுக்கப்பட்டதால், நீ அதைப் பின்பற்றி நடக்கிறாயா? கவனி!

நீ அந்தக் கோவிலைப் பார்த்தாலே போதும், உடனே நீ உனக்கு சொல்லிக் கொடுக்கப்பட்டுள்ள திட்டத்தின்படி, நீ அதை வெறுமனே செய்து விடுவாய். உனது தலைக்குள் ஒரு ஒலிநாடாவை வெறுமனே ஓட விடுவாய். ஒரு மனித இயந்திரம் போல் நடந்து கொள்வாய். இப்போது நீ இதைப் புரிந்து கொண்டால், அதன்பிறகு நீ தானாகவே, தலை வணங்குவதை நிறுத்திவிடுவாய். நீ அதற்காக எந்த முயற்சியும் செய்ய வேண்டாம். நீ வெறுமனே அதை மறந்துவிடுவாய். அந்த திட்டம் மறைந்து போய்விடும். அதன் தடம் கூட தெரியாத அளவுக்கு, அது உன்னை விட்டுப் போய்விடும்.

நீ எதிர்ச் செயல் ஆற்றும் போது, அதன் தடம் அங்கே இருக்கும். எழுச்சியில், அதன் தடம் அங்கே இருக்காது. அது முழுமையான விடுதலையாகும்.

மேலும், நீ என்னிடம், "யார், யாருடன் போராடுவது?" என்று கேட்கிறாய். அங்கே போராட்டம் என்று ஒன்று இருப்பதால் தானே, இந்தக் கேள்வி எழுகிறது. அங்கே போராட்டம் என்பது இல்லாமல் போய்விடும் போது, இந்தக் கேள்வியே எழாது. நீ வெறுமனே ஒரு காட்சியைப் போன்று இருந்தால் போதும். மேலும், காட்சியாக இருப்பது தான் உனது மூல முகம்; சாட்சியாக இருக்கின்ற அந்த ஒருவன் தான், உனது உண்மையான தன்னுணர்வு. சாட்சி பாவனையோடு நீ பார்க்கும் பொருள், உன்மீது திணிக்கப்பட்ட கண்டிப்புகள், சாட்சியாக இருந்து பார்க்கின்ற அந்த ஒருவன் தான், உனது இருப்பின் மூலமாகும்.

**தாங்கள் தயவுசெய்து இந்த விடுதலையின் பயத்தைப் பற்றி மேலும் கொஞ்சம் அதிகமாக கூற முடியுமா? விடுதலை அடைவதற்கான ஏக்கம் இருக்கிறது, என்றாலும்கூட, சமீபகாலமான எனக்கு அதிக பயம் வருவதையும் நான் காண்கிறேன். இது எனது தனிமையையும், பொறுப்புணர்வையும் தவிர்க்கின்ற காரியம் தானே வேறு ஒன்றும் இல்லையா?**

இது இயல்பானது தான்; ஏனெனில், உனது குழந்தைப் பருவத்தின் ஆரம்பத்திலிருந்தே நீ மற்றவர்களையும், அவர்களின் புத்திமதியையும், அவர்களின் வழிகாட்டுதல்களையும் சார்ந்தே இருக்கும்படி கூறப்பட்டிருக்கிறாய். நீ வயதானவனாக ஆகிவிட்டால். ஆனால், நீ

வளர்ச்சி அடையவில்லை. எல்லா மிருகங்களுக்கு வயதாகிறது. மனிதனுக்கு மட்டும் தான் இரண்டு சாத்தியங்கள் உள்ளன. ஒன்று, அவன் மற்ற விலங்குகளைப் போல் வயதானவன் ஆகலாம். அல்லது, அவன் வளர்ச்சி அடையலாம். வளர்ச்சி அடைதல் என்பதற்கு, எல்லாவற்றையும் சார்ந்து இருப்பதை விட்டு ஒழிப்பதாகும். எனவே, இயல்பாகவே ஆரம்பத்தில் அது பயத்தை உருவாக்கும்.

நீ உனது சொந்த எண்ணங்களின் திரையிடலினால் சூழப்பட்டு இருக்கிறாய். அதை வைத்துக் கொண்டு நீ பாதுகாப்பாக இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறாய். உதாரணமாக, ஆரம்பத்திலிருந்தே கடவுள் உன்னை காப்பாற்றி வருவதாக உனக்குச் சொல்லப்பட்டுள்ளது. சின்னக் குழந்தைகளிடமும் கூட, இரவில், "பயப்படாதே, தூங்கச் செல். கடவுள் உன்னைப் பாதுகாப்பார்," என்று கூறப்படுகிறது.

அந்தக் குழந்தை இன்னமும் உனக்குள் இருக்கிறது. மேலும், நான், "கடவுள் இல்லை. நீ இருளில் பத்திரமாகத் தூங்கலாம். உன்னை யாரும் பாதுகாக்கவில்லை," என்று உன்னிடம் கூறுகிறேன். ஆனால், அப்படிக் கூறினாலும் உன்னால் தூங்க முடியாது. நீ பயப்படுவாய். உன்னைக் காப்பாற்றுவதற்கு யாரோ ஒருவர் தேவை. அந்த கடவுள் என்னும் கருத்து ஏமாற்று வித்தை. ஆனால், அது உனக்கு உதவுகிறது. அது, ஹோமியோபதி மருந்து போன்றது - வெறுமனே இனிப்பு மாத்திரையாக இருப்பது.

ஆனால், உனக்குள்ள அந்த நோயானது, வெறும் ஒரு கொள்கையினால் ஆனதாக இருக்குமெனில், தங்களை அறியாமலேயே எந்தச் சிறிய விஷயத்தையும் பெரிதுபடுத்தி கொள்கைகளை உருவாக்குகின்ற அநேக மக்கள் உன்னைச் சுற்றி உள்ளார்கள். அவர்களின், அந்த கற்பனையான நோய்களுக்கு, உண்மையான எந்த மருந்தும் தேவையில்லை. அதற்குத் தேவை, ஒரு கற்பனை மருந்து.

முதல் விஷயமாக, இந்த இருள் என்பது மிகவும் ஆழமானது. அதில், அபரிமிதமான ஆழம் உள்ளது. அமைதி, எல்லையில்லா தன்மை ஆகியவை உள்ளன. வெளிச்சம் வருகிறது, போகிறது. ஆனால், இருள் எப்போதும் இருப்பது. அது, வெளிச்சத்தை விடவும் எப்போதும் இருப்பது. வெளிச்சத்திற்கு ஏதாவது எரிபொருள் தேவை. ஆனால், இருட்டிற்கு எந்த எரிபொருளும் தேவையில்லை. அது வெறுமனே அங்கே இருக்கிறது. மேலும், நீ ஓய்வுடன் இருப்பதற்கு வெளிச்சம் என்பது சரியான தேர்வாக இருக்க முடியாது. வெளிச்சம், உனக்கு எரிச்சலை உருவாக்கும், உன்னை விழிப்புடன் இருக்கச் செய்யும். இருள், உன்னை ஓய்வுடன், காரியங்கள் அதன் போக்கிலேயே நடந்தேற அனுமதிக்கும்.

இருள் என்பதில் பயம் என்பது இல்லை. ஆகவே, இருளில் பயம் என்கிற கருத்தானது உங்களால் உருவாக்கப்பட்டது. அதன்பின்னர், அந்த பயத்தைப் போக்க, உனக்கு ஒரு கடவுள் தேவைப்படுகிறார் - அதுவும் கூட, ஒரு அடுத்த உருவாக்கம் தான். உன்னை இருட்டில் பாதுகாப்பது யார்? ஒரு பொய்யைச் சமாளிக்க, மற்றொரு பொய் தேவைப்படுகிறது. மேலும், இப்படியே போய் கொண்டிருந்தால், அதற்கு ஒரு முடிவு இருக்காது. நீ பொய் சொல்லிக் கொண்டே போக வேண்டியது தான்.

நிச்சயமாக, விடுதலை என்பது உனக்கு அநேக விஷயங்களில் பயத்தை உண்டாக்கும். ஜாக்கிரதையாக இரு. உனக்கு பயத்தை உண்டாக்குகின்ற எந்த விஷயத்தையும் ஆழ்ந்து கவனித்துப் பார். மேலும், இதில் ஆச்சரியம் என்னவென்றால், (உனக்கு பயத்தை உண்டாக்குகிற எந்த ஒன்றின் மீதும், நீ ஆழ்ந்து பார்த்தால், பயம் மறைந்து போய்விடும். இந்த உலகில் பயப்பட வேண்டியது எதுவும் இல்லை. அதன்பின்னர், நீ உனது விடுதலையில் சந்தோஷமாகவும் இருக்கலாம். மேலும், அது கொண்டு வருகிற பொறுப்புணர்விலும் நீ மகிழ்ச்சி அடையலாம்.)

பொறுப்புணர்வு, உன்னை வளர்ச்சி அடையச் செய்கிறது. நீ, உனது ஒவ்வொரு செயலுக்கும், ஒவ்வொரு எண்ணத்திற்கும், ஒவ்வொரு உணர்விற்கும் மேலும் மேலும் பொறுப்புடன் இருப்பாய். அது, உன்னைக் கெட்டிப்படுத்திவிடும். உன்னையும், உனது மனதையும் இதுவரை கட்டிப் போட்டு வைத்திருந்த எல்லாச் சங்கிலிகளையும் அது எடுத்துவிடும்.

நான் ஒரு நண்பருடன் தங்கி இருந்தேன். நான் பேச வேண்டிய ஒரு கூட்டத்திற்காக, நாங்கள் போய்க் கொண்டிருந்தோம். அந்த நண்பர் காரை ஓட்டி வந்தார். அவர் தனது மனைவியை அழைப்பதற்கு ஹாரன் அடித்தார். ஏனெனில், நாங்கள் தாமதமாக கிளம்பினோம். மேலும், நானும் தாமதத்தை விரும்பவில்லை. ஏனெனில், அங்கே அநேகம் பேர் காத்துக் கொண்டிருப்பார்கள். அது மரியாதை இல்லை, நல்ல பண்பாக இருக்காது.

இறுதியாக, அவரது மனைவி ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்துக் கொண்டு, "நான் ஒரு நிமிடத்தில் வந்து விடுகிறேன் என்று உங்களிடம் ஆயிரம் தடவை கூறினேனே?" என்றார். ஆனால், அவள் என்ன கூறுகிறாள் என்பதை அவளே அறிந்திருக்கவில்லை.

நீ உனது பயங்களை பெரிதுபடுத்திவிட்டாய். வெறுமனே அதைப் பார். அதை உற்றுப் பார். அப்படி நீ உற்றுப் பார்ப்பதன் மூலம்,

அவைகள் குறைந்து போய்விடும். நீ இதற்கு முன்பு ஒருபோதும் அவற்றை உற்று கவனித்ததில்லை. அதற்குப் பதிலாக, நீ அவைகளில் இருந்து தப்பிச் செல்வதற்கு தான் முயற்சி செய்தாய். உங்களது பயத்தின் கண்களை உற்றுப் பார்ப்பதற்குப் பதிலாக, நீ அவைகளுக்கு எதிராக கற்பனைகளை உருவாக்கிக் கொண்டு வந்துவிட்டாய்.

இங்கே பயப்பட ஒன்றும் இல்லை. உனக்குத் தேவை, கொஞ்சம் விழிப்புணர்வு தான். எனவே, உனது பயம் எதுவாக இருந்தாலும் சரி, அதை பிடித்து வைத்துக் கொண்டு, அதை கூர்மையாக உற்றுப் பார். ஒரு விஞ்ஞானி, ஏதோ ஒரு பொருளை உற்றுப் பார்ப்பதைப் போன்று உற்றுப் பார். அது ஒரு பனிக்கட்டி உருகுவதைப் போல் உருகிவிடுவதைக் கண்டு, நீ ஆச்சரியப்படுவாய். நீ அந்த பயத்தை முழுமையாக ஆராய்ந்து பார்ப்பதற்குள்ளாகவே, அது உன்னிடமிருந்து போயிருக்கும்.

மேலும், பயம் இல்லாத விடுதலை இருக்கும் போது, அது வார்த்தைகளால் விவரிக்க முடியாததொரு வரப்பிரசாதத்தைக் கொண்டு வரும்.

**நமது சொந்தக் கருத்துக்களை அவர்கள் மீது திணிக்காமலும், அவர்களின் சுதந்திரத்தில் தலையிடாமலும், நமது குழந்தைகள் அவர்களின் முழுத்திறனுடன் வளர்வதற்கு நம்மால் எப்படி உதவ முடியும்?**

குழந்தைகள் வளர்ச்சி அடைவதற்கு உதவுவது எப்படி என்று நீ நினைக்க ஆரம்பித்த அந்த நொடிப் பொழுதிலேயே, நீ ஒரு தவறான பாதையில் செல்ல ஆரம்பித்துவிட்டாய். ஏனெனில், நீ என்னவெல்லாம் அந்தக் குழந்தைக்கு செய்யப் போகிறாயோ, அது அந்தக் குழந்தைக்கு ஒரு குறிப்பிட்ட செயல்முறைத் திட்டத்தைக் கொடுத்துவிடுகிறது. நீ உனது குழந்தைப் பருவத்தில் பெற்றுக் கொண்ட திட்டத்தைவிட, இது வேறுபட்டதாகக் கூட இருக்கலாம். ஆனால், இந்த உலகத்தின் நல்ல நோக்கத்திற்காக, நீ அந்தக் குழந்தைகளிடம் ஒருவிதமான கட்டுதிட்டத்தை ஏற்படுத்தி விடுகிறாய்.

எப்படி வளர வேண்டும் என்று யாரும் கற்றுக் கொடுக்காமலேயே, இந்த மரங்கள் வளர்ந்து கொண்டே போகின்றன. இந்த மிருகங்கள், பறவைகள், இந்த இயற்கையில் உள்ள எல்லாவற்றிற்கும், எந்தவிதமான செயல்முறைத் திட்டமும் தேவையில்லை. செயல்முறைத் திட்டம் என்கின்ற அந்த கருத்தே, அடிப்படையாக உனக்கு அடிமைத்தனத்தை உருவாக்குகிறது. மேலும், மனிதன் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக, பல்வேறு பெயர்களைப் பயன்படுத்தி, அடிமைகளை உருவாக்கிக்

கொண்டு வந்திருக்கிறான். மக்களுக்கு ஏதாவது ஒரு பெயர் சலிப்பை உண்டாக்கிவிட்டால், உடனடியாக அதற்குப் பதில் வேறு ஒரு பெயர் இடம் பெற்றுவிடும். கொஞ்சம் திருத்தி அமைக்கப்பட்டதொரு செயல்முறைத் திட்டம், அந்த கட்டுதிட்டத்தில் இங்கும் அங்கும் சில மாற்றங்களை ஏற்படுத்துதல் ஆகியவை தான் நடக்கிறது. ஆனால், அடிப்படையான செயல்கள் அப்படியே தான் இருக்கிறது. அதாவது, அந்த பெற்றோர்களும், பழைய தலைமுறையினரும் தங்களின் குழந்தைகள் ஒரு குறிப்பிட்ட விதத்தில் நடந்து கொள்ள வேண்டும் என்று தான் விரும்புகின்றனர். அதனால் தான் நீயும் "எப்படி?" என்று கேட்கிறாய்.

என்னைப் பொருத்தவரையில், குழந்தைகளுக்கு உதவுவது எப்படி என்பது பெற்றோர்களின் வேலை அல்ல. நீ இல்லாமலேயே அவர்கள் வளர்ச்சி அடைவார்கள். உனது வேலை என்னவென்றால், எது ஏற்கனவே வளர்ந்து கொண்டிருக்கிறதோ அதை ஆதரிப்பதும், அதற்கு ஊட்டமளிப்பதும் தான் ஆகும். அவர்களுக்கு கட்டளைகளையும், கொள்கைகளையும் கொடுக்காதே. அவர்களிடம் எது சரி, எது தவறு என்று சொல்லாதே. அவர்கள், தங்களின் சொந்த அனுபவத்தில் அதைக் கண்டு கொள்ளட்டும்.

நீ ஒரே ஒரு காரியத்தை மட்டுமே செய்ய முடியும். அது என்னவென்றால், உனது சொந்த வாழ்க்கையை நீ அவர்களோடு பகிர்ந்து கொள்வது தான் அது. நீ அவர்களிடம், உனது பெற்றோர்களால் கண்டிப்புடன் வளர்க்கப்பட்டதையும், ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் நீ வாழ்ந்ததையும், ஒரு குறிப்பிட்ட கொள்கைகளுக்குள் நீ வாழ்ந்ததையும், மேலும் அப்படிப்பட்ட அந்த எல்லைக்கோடுகளாலும், கொள்கைகளாலும் நீ உனது வாழ்க்கையை இழந்ததையும், எனவே நீ அவர்களின் வாழ்க்கையை அழிக்க விரும்பவில்லை என்றும் கூறு. அவர்கள் முழுமையாக விடுதலை அடைந்தவர்களாக இருக்க நீ விரும்புவதாக, அதாவது நீ இல்லாமல் அவர்கள் சுதந்திரமாக இருக்க விரும்புவதைக் கூறு. ஏனெனில், நீ தான் அவர்களுக்கு கடந்த காலத்தின் பிரதிநிதியாக இருக்கிறாய்.

"நாங்கள் இல்லாமல் நீ சுதந்திரமாக இருக்க வேண்டியது அவசியம். எங்களுக்கு கீழ்ப்படியாதே - உனது சுய புத்திசாலித்தனத்தை சார்ந்து இரு. நீ வழி தவறிப் போனாலும் கூட, நீ ஒரு அடிமையாக இருப்பதைவிடவும், எப்போதும் சரியானதையே செய்வதை விடவும், நீ வழி தவறிப் போவது மிகவும் சிறந்தது. நீயே சுயமான தவறுகளைச் செய்வதும், அதிலிருந்து நீ கற்றுக் கொள்வதும், மற்றவர்களைப் பின்பற்றி நடந்து கொண்டு தவறுகளே செய்யாமல் இருப்பதை விடவும்

சிறந்தது. ஏனெனில், மற்றவர்களைப் பின்பற்றுவதால், நீ அப்படி பின்பற்றுவதைத் தவிர வேறு எதையும் நீ ஒருபோதும் கற்றுக் கொள்ளப் போவதில்லை. மேலும், அப்படிப் பின்பற்றுவது விஷம் போன்றது, சுத்தமான விஷம் போன்றது," என்று தனது குழந்தைகளிடம் சொல்வதற்கு ஒரு தந்தைக்கு, ஒரு தாய்க்கு தைரியமும், அளவுக்கு அதிகமான அன்பும் தேவைப்படும்.

அன்பு செலுத்துவது மிகவும் சுலபம். எனவே, "எப்படி" என்று கேட்காதே. ஏனெனில், இந்த "எப்படி" என்று கேட்பதற்கு, ஒரு வழிமுறையை, ஒரு செயல்முறையை, ஒரு தொழில்நுட்பத்தை நீ கேட்கிறாய் என்று தான் அர்த்தம். ஆனால், அன்பு என்பது ஒரு தொழில்நுட்பம் அல்ல.

உனது குழந்தைகளை நேசி. அவர்களின் சுதந்திரத்தில் சந்தோஷப்படு. அவர்கள் தவறுகளைச் செய்யட்டும். அவர்கள் எங்கு தவறு செய்து இருக்கிறார்கள் என்பதை, அவர்கள் கண்டு கொள்ள நீ அவர்களுக்கு உதவு. அவர்களிடம் "தவறுகளைச் செய்வது தவறானது அல்ல. உன்னால் எவ்வளவு தவறுகளைச் செய்ய முடியுமோ அவ்வளவு தவறுகளைச் செய். ஏனெனில், நீ அதிகம் கற்றுக் கொள்வதற்கு அது தான் வழி. ஆனால், செய்த தவறையே மீண்டும் மீண்டும் செய்யாதே. ஏனெனில், அது உன்னை முட்டாள் ஆக்கிவிடும்," என்று அவர்களிடம் கூறு.

எனவே, நான் உனக்கு ஒரு எளிதான படிலைக் கொடுக்க முடியாது. நீ உனது குழந்தைகளோடு நொடிக்கு நொடி வாழ்ந்து கொண்டு, சின்ன விஷயங்களிலும் கூட அவர்களுக்கு சாத்தியப்படுகின்ற எல்லா சுதந்திரத்தையும் அனுமதித்துக் கொண்டு, நீ தான் அதற்கான வழியைக் கண்டுபிடிக்க வேண்டும்.

உதாரணமாக, எனது குழந்தைப் பருவத்தில் - மேலும் பல நூற்றாண்டுகளாக இதுதான் மற்ற குழந்தைகளிடமும் நடந்துள்ளது - எனக்கு, "சீக்கிரம் தூங்கச் சென்று அதிகாலைப் பொழுதில் எழுந்திரு. அது உன்னை புத்திசாலியாக்கும்," என்று கற்பிக்கப்பட்டது.

நான் எனது தந்தையிடம், "இது விநோதமாக உள்ளது. எனக்கு தூக்கம் வராத போது, மாலையில் என்னைத் தூங்கச் சொல்லி என்னை நீங்கள் கட்டாயப்படுத்துகிறீர்கள்," என்று கூறினேன். ஜைனர்களின் குடும்பத்தில் மாலை என்பது உண்மையில் மிகவும் முன்பே வந்துவிடும். ஏனெனில், இரவு உணவு என்பது மாலை ஐந்து மணிக்கோ அல்லது அதிகபட்சம் ஆறு மணிக்கோ முடிந்துவிடும். மேலும், அதற்குப் பிறகு செய்வதற்கு எதுவும் இருக்காது. எனவே, குழந்தைகளை தூங்கச் செல்லுமாறு கேட்டுக் கொள்வார்கள்.

நான் எனது தந்தையிடம், "எனது சக்தியானது தூங்குவதற்கு தயாராக இல்லாத போது, நீங்கள் என்னைத் தூங்கும்படி கட்டாயப்படுத்துகிறீர்கள். மேலும், அதிகாலை வேளையில் நான் தூக்கத்தில் இருக்கும் போது நீங்கள் என்னை படுக்கையை விட்டு இழுக்கிறீர்கள். என்னைப் புத்திசாலியாக ஆக்குவதற்கு இது ஒரு விநோதமான வழி போன்று தெரிகிறது! இதில் எந்த தொடர்பையும் என்னால் கண்டு கொள்ள முடியவில்லை. நான் தூங்குவதற்கு விரும்பாத போது, என்னைத் தூங்குவதற்கு வற்புறுத்துவதன் மூலம் நான் எப்படி புத்திசாலியாக ஆக முடியும்? மேலும், நான் படுக்கையில் தூக்கம் வராமல், வெறுமனே இருளில் படுத்துக் கிடக்கிறேன். அந்த நேரத்தை வேறு எதற்காகவாவது பயன்படுத்தலாம். அதை படைப்பாற்றலுக்கு பயன்படுத்தலாம். ஆனால், நீங்களோ என்னை தூங்குவதற்கு கட்டாயப்படுத்துகிறீர்கள். ஆனால், தூக்கம் என்பது உங்களின் கைகளில் உள்ள விஷயம் அல்ல. நீங்கள் வெறுமனே கண்களை மூடிக்கொண்டால், தூங்கிப் போய்விட முடியாது. தூக்கம் வரும்போது தான் அது வரும். அது உங்களது ஆணையையோ அல்லது எனது கடடளையையோ பின்பற்றுவதில்லை. எனவே, மணிக்கணக்கான இப்படி நான் எனது நேரத்தை வீணாக்கிக் கொண்டிருக்கிறேன். மேலும், அதிகாலையில் நான் தூங்கிக் கொண்டிருக்கும் போது காலை ஐந்து மணிக்கு என்னை எழுந்திருக்கும்படி கட்டாயப்படுத்துகிறீர்கள். அப்போது என்னை காட்டுக்குள் காலை நடைப்பயணம் செல்வதற்க இழுத்துக் கொண்டு போகிறீர்கள். நான் தூங்கிக் கொண்டிருக்கிறேன். ஆனால், என்னை நீங்கள் இழுத்துக் கொண்டு போகிறீர்கள். இவைகள் எல்லாம் என்னை எப்படி புத்திசாலியாக மாற்றும் என்று எனக்கு ஒன்றும் தெரியவில்லை. நீங்கள் தயவுசெய்து அதை எனக்கு விளக்குங்கள்! என்றேன்.

இப்படிப்பட்ட இந்த செயல்முறைகள் மூலம் எத்தனை பேர் புத்திசாலியாக மாறி உள்ளனர்? நீங்கள் ஒருசில புத்திசாலிகளை மட்டும் எனக்கு வெறுமனே காட்டுங்கள். என்னைச் சுற்றிலும் யாரையும் என்னால் கண்டு கொள்ள முடியவில்லை. மேலும், நான் எனது தாத்தாவிடம் பேசிய போது அவர் இதெல்லாம் முட்டாள்தனம் என்கிறார். இந்த வீட்டில் இருப்பவர்களிலேயே அவர் மட்டும் தான் நேர்மையானவர். மற்றவர்கள் என்ன சொல்வார்களோ என்று அவர் கவலைப்பட்டதில்லை. ஆனால், அவர் இதெல்லாம் முட்டாள்தனமாது என்று கூறுவார். 'சீக்கிரமே தூங்கப் போய்விடுவதால் புத்திசாலித்தனம் வந்துவிடாது. நான் எனது வாழ்நாள் முழுவதும், கிட்டத்தட்ட எழுபது ஆண்டுகள் சீக்கிரமாக தூங்கப் போயிருக்கிறேன். ஆனால், எனக்கு ஞானம் வரவில்லை. மேலும், இனிமேலும் அது எனக்கு வரும் என்று

நினைக்கவும் இல்லை! இப்போது எனக்கு மரணத்திற்கான நேரம் தான் வரும், ஞானம் வராது. எனவே, இந்தப் பழக்கங்களால் முட்டாளாக்கப்படாதே," என்று எனது தாத்தா கூறுவதாக எனது தந்தையிடம் கூறுவேன்.

மேலும், நான் எனது தந்தையிடம், "நீங்கள் இதைக் கொஞ்சம் சிந்தித்துப் பார்த்து தயவுசெய்து என்னிடம் நல்லபடியாக நடந்து கொள்ளுங்கள். இந்த அளவுக்காவது எனக்கு சுதந்திரம் கொடுங்கள். அதாவது, எனக்குத் தூக்கம் வரும் போது நான் தூங்குவதற்கும், மேலும் தூக்கம் போய்விட்டது, இனிமேல் எழுந்திருக்கும் நேரம் வந்துவிட்டது என்று நான் உணரும் போது எழுந்திருக்கவும் எனக்குச் சுதந்திரம் கொடுங்கள்," என்று கேட்டேன்.

அவர் இதை ஒருநாள் முழுவதும் யோசித்தார். மேலும், அடுத்த நாள் என்னிடம், "சரி, ஒருவேளை நீ சொல்வது சரிதான். நீ உனது தேவைக்கு ஏற்றாற் போல் செய்து கொள். நான் சொல்வதைக் கேட்பதைவிட, உனது உடல் உனக்குச் சொல்வதைக் கேள்," என்று கூறினார்.

இதுதான் கொள்கையாக இருக்க வேண்டும். அதாவது, குழந்தைகள் அவைகளின் உடம்பு கூறுவதைக் கேட்பதற்கு உதவி செய்யப்பட வேண்டும். அவர்களின் சுயதேவைகளைக் கவனிப்பதற்கு உதவி செய்யப்பட வேண்டும். பெற்றோர்களுக்கான ஒரு அடிப்படை விஷயம் என்னவென்றால், குழந்தைகள் ஒரு குழியில் விழுந்தவிடாமல் பாதுகாப்பது தான். அவர்களின் கட்டுப்பாடு எதிர்மறையாகத் தான் வேலை செய்யும்.

'எதிர்மறை' என்கிற வார்த்தையை நினைவில் கொள். நீ ஒரு நேர்மறையானதற்கு பதிலாக கொடுக்கிறாய். எதிர்மறை பாதுகாப்பை தான். ஏனெனில், குழந்தைகள் எப்போதும் குழந்தைகள் தான். மேலும் அவர்கள், அவர்களுக்கு கேடு விளைவிக்கின்ற அல்லது அவர்களை முடக்கிப் போடுகின்ற ஏதோ ஒன்றில் மாட்டிக் கொள்வார்கள். அப்போதும்கூட, போகாதீர்கள் என்று அவர்களுக்கு உத்தரவு போடாதீர்கள். ஆனால், சூழ்நிலையை அவர்களுக்கு விளக்குங்கள். கீழ்ப்படிதலுக்கான ஒரு முக்கிய கருத்தாக அதை ஆக்கிவிடாதீர்கள். மேலும், அவர்களைத் தேர்வு செய்யும்படி விட்டுவிடு. நீ வெறுமனே சூழ்நிலையை மட்டும் விளக்கு.

குழந்தைகள் அதிகம் கிரகித்துக் கொள்வார்கள். மேலும், நீ அவர்களுக்கு மரியாதை கொடுத்தால், அவர்கள் அதை கவனமாகக் கேட்கத் தயாராக இருப்பார்கள். அதைப் புரிந்து கொள்ளத் தயாராக

இருப்பார்கள். அதன்பிறகு, அவர்களின் அந்தப் புரிதலோடு அவர்களை விட்டுவிடுங்கள். ஆரம்பத்தில் கொஞ்சம் வருடங்களுக்கு தான் அது கேள்வியாக மட்டும் இருக்கும். விரைவில் அவர்கள், அவர்களது சுயபுத்திசாலித்தனத்தில் நிலை பெற்றுவிடுவார்கள். அதன்பிறகு, உங்களது பாதுகாப்பு அவர்களுக்குத் தேவைப்படாது. விரைவில் அவர்கள் சுயமாகவே வாழ ஆரம்பித்துவிடுவார்கள்.

பெற்றோர் தங்கள் குழந்தைகள் தாங்கள் விரும்பாத திசையில் சென்றுவிடுவார்களோ என்று பயப்படுவதை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால், அது உனது பிரச்சனை. உங்களது விருப்பு வெறுப்புகளை பின்பற்றுவதற்காக உங்கள் குழந்தைகள் பிறக்கவில்லை. அவர்கள், அவர்களின் சொந்த வாழ்க்கையைத் தான் வாழ வேண்டும். மேலும், அவர்கள் அப்படிச் செய்வதற்கு நீ மகிழ்ச்சி கொள்ள வேண்டும். அது எப்படிப்பட்ட வாழ்க்கையாக இருந்தாலும் சரி, அவர்கள் வெறுமனே ஏழை சங்கீத வித்துவானாகக்கூட ஆகலாம் ... ...

தனது மகன் பட்டப்படிப்பை முடித்தவுடன், ஒரு டாக்டராக வரவேண்டும் என்று விரும்பியதொரு மிகவும் பணக்கார மனிதர் ஒருவரை நான் அறிவேன். ஆனால், அவரது மகனுக்கோ இசையில் தான் ஆர்வம் இருந்தது. அவர் இன்பப் பொழுது போக்கிற்றாக கலையை விரும்புவராக இல்லை. அவர் அந்தப் பகுதியில் பிரபலமானவர். மேலும், அங்கு எங்காவது ஏதாவது நிகழ்ச்சிகள் நடந்தால், அதில் அவர் சிதார் வாசிப்பதைக் காணலாம். அவர் அதில் மேலும் மேலும் புகழ் பெற்று வந்தார். அவர் சங்கீதம் கற்றுக் கொடுப்பதற்காகவே உள்ள ஒரு பல்கலைக் கழகத்திற்குப் போக அவர் விரும்பினார். ஆனால், அவரது தந்தை அதற்கு முற்றிலும் எதிர்ப்பாக இருந்தார். அவர் என்னை அழைத்தார். ஏனெனில், நான் அவரது மகனிடம் நெருங்கிப் பழகி வந்தேன். எனவே, என்னை அழைத்து அவர் என்னிடம், “அவன் வாழ்நாள் முழுவதும் ஒரு பிச்சைக்காரனைப் போல் தான் இருக்க வேண்டும்,” என்றார். ஏனெனில், இந்தியாவில் சங்கீத வித்வான்கள் அதிகம் சம்பாதிக்க முடியாது. மிஞ்சி மிஞ்சிப் போனால், அவன் ஒரு பள்ளிக்கூடத்தில் சங்கீத ஆசிரியராக போகத் தான் முடியும். அப்படியானால் அவருக்கு சம்பாத்தியம் என்ன இருக்கும்? “எங்களது வீட்டில் வேலைக்காரர்களுக்கே கூட நாங்கள் அந்த அளவு சம்பளம் கொடுக்கிறோம். மேலும், அவன் தவறான மனிதர்களுடன் சேர ஆரம்பித்துவிடுவான்,” என்றார். ஏனெனில், இந்தியாவில் சங்கீதம் என்பது தேவதாசிகள் என்கிற விபச்சாரம் செய்பவர்களோடு ஆழமாக தொடர்புடையதாக இருந்தது.

உலகத்தில் வேறு எங்கும் நடக்கின்ற விபச்சாரத்தை விடவும், இந்திய விபச்சாரம் வேறுபட்ட ஒன்றாக இருந்தது. 'விபச்சாரி' என்கிற அந்த வார்த்தை இந்தியாவில் உள்ளவர்களுக்கு சரியானதாக இருக்காது. ஏனெனில், இந்திய விபச்சாரி உண்மையிலேயே ஆடல், பாடல்களில் தேர்ச்சி பெற்றவளாக இருப்பாள். மேலும், இந்தியா பல்வேறு பிரிவுகளாக கொண்டுள்ளது. உண்மையிலேயே நீ சங்கீதம், ஆடல், பாடல் இவற்றின் அடித்தள அடுக்குகளைக் கற்றுக் கொள்ள விரும்பினால், நீ ஏதோ ஒரு புகழ் பெற்ற தேவதாசியிடம் தான் சேர்ந்து கற்றுக் கொள்ள வேண்டும். அதில் புகழ் பெற்ற குடும்பங்கள் உள்ளன. அவைகள் 'கரானாக்கள்' என்று அழைக்கப்பட்டன. கரானா என்றால் குடும்பம் என்று அர்த்தம். அதற்கும் சாதாரண குடும்பத்திற்கும் எந்த சம்பந்தமும் கிடையாது; அது குரு சீடர் குடும்பம் போன்றது. எனவே, தங்களுக்கென்று குறிப்பிட்ட விதத்திலான வழிகளை வைத்திருக்கின்ற புகழ் பெற்ற கரானாக்கள் இங்கே உண்டு. அதே வாத்தியக் கருவிகள் தான், அதே நடனம் தான். ஆனால், அவற்றை வெவ்வேறு கரானாக்கள் வெவ்வேறு விதமான வழிகளில் மக்களுக்கு அளிப்பார்கள். எனவே, சங்கீத உலகில் ஈடுபட விரும்புகின்ற ஒருவர் உண்மையில் அந்த சரானாவில் சேர்ந்தாக வேண்டும். ஆனால், அது நல்ல தொடர்பாக இருக்காது. அந்தப் பணக்காரரைப் பொருத்தமட்டில், நிச்சயமாக அது ஒரு கெட்ட தொடர்பாகத் தான் இருக்கும்.

ஆனால், அவரது மகனும் கூட அப்படிப்பட்ட கெட்ட தொடர்பு வைப்பதில் ஆர்வமுடையவராக இல்லை. அவர் தந்தை கூறியதைப் பின்பற்றாமல், அவர் ஒரு சங்கீதப் பல்கலைக் கழகத்திற்குப் போனார். ஆனால், அவரது தந்தை அவரைத் தனது மகன் இல்லை என்று கூறிவிட்டார். ஏனெனில், அவர் அந்த அளவுக்கு கோபம் கொண்டார். அவரது தந்தை கைவிட்டு விட்டதாலும், அவருக்கு வேறு வழிகளும் தெரியாததாலும், அவரது அந்தப் பல்கலைக் கழகம் மலைப்பகுதியில் இருந்ததாலும், அவரால் அங்கு வேறு ஏதாவது வேலை பார்க்க முடியாததாலும், அவர் திரும்பி வரநேர்ந்தது அவரது தந்தை, முன்பே சரியாக கணித்துக் கூறியபடி அவர் ஒரு பள்ளி ஆசிரியராகச் சேர்ந்தார்.

அவரது தந்தை என்னை அழைத்து, "இப்போது பார். நான் கூறியபடி சரியாக நடந்துவிட்டது," என்று கூறினார். எனது பையன்களில் ஒருவன் இஞ்சினியராக இருக்கிறான். ஒருவன் பேராசிரியராக இருக்கிறான். ஆனால், இந்த முட்டாள் நான் கூறியதைக் கேட்கவில்லை. எனவே, நான் அவனை எனது பிள்ளை இல்லை என்று ஒதுக்கி வைத்துவிட்டேன். அவன் என்னிடமிருந்து ஒரு சென்ட் நிலத்தைக் கூட தர முடியாது. அவன் இனிமேல் ஒரு பள்ளி ஆசிரியராக, வெறுமனே

ஒரு ஏழை உத்தியோகஸ்தனாகத் தான் இருக்க வேண்டும்," என்று கூறினார்.

ஆனால் எனது நண்பரே மிகவும் சந்தோஷமாக இருந்தார். அவர் தனது குடும்பத்தினரால் கைவிடப்பட்டதைப்பற்றி கொஞ்சம்கூட கவலைப்படவில்லை. அவர் ஏழையின் வாழ்க்கையை வாழ்வதைப் பற்றியும், அவரது பரம்பரை சொத்துக்களை பெறமுடியாமல் போனது பற்றியும் கவலைப்படவில்லை. இந்த விஷயங்கள் அவரைக் கவலைப்பட வைக்கவில்லை. அவர் சந்தோஷமாக இருந்தார். அவர்கள் இப்படியெல்லாம் செய்தது நல்லதுதான். நான் இப்போது கரானாவின் ஒரு அங்கமாக ஆகிவிட முடியும். நமது குடும்பத்தினர் தர்ம சங்கடத்திற்கு உள்ளாவார்களே என்று நான் கவலைப்பட்டேன். ஆனால் இப்போது அவர்கள் என்னை ஒதுக்கி வைத்து விட்டதால் நான் அவர்கள் குடும்பத்தில் ஒருவன் அல்ல. நான் கரானாவின் ஒரு அங்கமாக ஆகிவிட முடியும்.

ஒரு பள்ளியல் கற்றுக் கொடுத்துக் கொண்டே, அவர் ஒர கரானாவின் அங்கமாக ஆகிவிட்டார். மேலும், இப்போது இந்தியாவில் மிகச் சிறந்த சங்கீத மேதைகளில் அவரும் ஒருவராக இருக்கிறார். இதில் முக்கியமானது என்னவென்றால், அவர் தனக்குள் என்ன திறமை உள்ளது என்று அறிந்து, அதில் புகழ் பெற்றது தான். எனவே,(நீ உனக்குள் உள்ள ஆற்றலைப் பின்தொடர்ந்து சென்றால், நீ எப்போதும் சிறந்தவனாக ஆக முடியும். நீ உனது உன் திறமையிலிருந்து விலகிச் சென்றால், நீ ஒரு இரண்டும்கெட்டானாக இருக்க வேண்டியது தான்.)

இந்த சமுதாயத்தில் யாரும், அவர்கள் என்னவாக இருக்க வேண்டுமோ அதுவாக இல்லாமல், வேறு ஒன்றாக இருப்பதால் தான், இந்த சமுதாயம் அநேக இரண்டும்கெட்ட மக்களைக் கொண்டுள்ளது. மேலும், அவர்கள் என்னதான் செய்தாலும் அவர்கள் அதில் சிறந்தவர்களாக ஆகவும் முடியாது. மேலும், ..... நிறைவடையவும் முடியாது; அவர்களால் மகிழ்ச்சியுடனும் இருக்க முடியாது.)

பெற்றோர்களின் வேலை மிகவும் மென்மையானது. மேலும், அது விலை மதிப்பற்றது. ஏனெனில், அந்தக் குழந்தையின் முழு வாழ்க்கையும் அவர்களைச் சார்ந்து தான் உள்ளது. எனவே, எந்தவிதமான நேர்மறையான செயல் வழித் திட்டத்தையும் கொடுக்காதே. அந்த குழந்தை, அது அவனோ அல்லது அவளோ, அவர்கள் விரும்பியதைச் செய்வதற்கு எல்லா வழிகளிலும் அதற்கு உதவி செய்.

உதாரணமாக,க நான் மரங்களில் ஏறுவது வழக்கம். சில மரங்களில் ஏறுவது மிகவும் பாதுகாப்பானதாக இருக்கும். அவைகளின் கிளைகள் பலம் வாய்ந்ததாகவும், அடிமரம் மிகவும் பலம் வாய்ந்ததாகவும் இருக்கும். நீ அந்த மரத்தின் உச்சிக்குச் சென்றாலும்கூட, அந்தக் கிளை ஒடிந்து விடுமோ என்று பயப்படத் தேவையில்லை. ஆனால், மிகவும் மென்மையான சில மரங்கள் உள்ளன. நான் மரங்களின் மீது மாங்காய் பறிப்பதற்கோ அல்லது வேறு சுவையான பழங்கள் பறிப்பதற்கோ ஏறுவதுண்டு. இதனால், எனது குடும்பத்தினர் மிகவும் கவலைப்படுவார்கள். மேலும், அவர்கள் என்னைத் தடுத்து நிறுத்துவதற்கு யாரையாவது அனுப்புவார்கள்.

நான் எனது தந்தையிடம், “என்னைத் தடுத்து நிறுத்துவதற்கு முன்பு, எந்தெந்த மரங்கள் ஆபத்தானவை என்று தயவுசெய்து விளக்குங்கள். அப்போது, நான் அவைகளைத் தவிர்த்துவிட முடியும். மேலும், ஆபத்தில்லாத மரங்களில், நான் ஏற முடியும். ஆனால், நீங்கள் அதைச் செய்யாமல் என்னைத் தடுத்து நிறுத்தினால் தான் ஆபத்து ஏற்படும். நான் ஒரு தவறான மரத்தில் ஏறிவிடலாம். எனவே, முழுப் பொறுப்பும் உங்களுடையது தான். நான் மரம் ஏறுவதை விடப் போவதில்லை. நான் அதை நேசிக்கிறேன்,” என்று கூறினேன்.

உண்மையிலேயே, ஒரு மரத்தின் உச்சியில் வெயிலுடனும், வேகமான காற்றுடனும் உட்கார்ந்து கொண்டு, அந்த மரம் முழுவதும் ஆடி அசைவதையும் ரசிப்பது மிகவும் அழகான அனுபவங்களில் ஒன்றாகும். மேலும் இது மிகவும் ஊட்டமளிக்கின்ற ஒரு அனுபவமாகும்.

எனவே, நான் அவரிடம், “நான் மரம் ஏறுவதை நிறுத்தப் போவதில்லை. நான் எந்த மரத்தில் ஏறக்கூடாது என்று சொல்வது தான் உங்கள் வேலை. ஏனெனில், அவைகளில் இருந்து நான் கீழே விழ நேரிடலாம். அப்போது அடிப்பட்டு, எலும்பு முறிந்து, எனது உடலை நாசமாக்கிக் கொள்ளலாம். ஆனால், வெறுமனே நான் மரம் ஏறக்கூடாது என்று கட்டளை இடாதீர்கள். அதை நான் செய்யப் போவதில்லை,” என்றுகூறுவேன். எனவே, எனது தந்தை என் கூடவே வந்து, அந்த நகரைச் சுற்றிலும் உள்ள மரங்களில் எந்தெந்த மரங்கள் ஆபத்தானவை என்று காட்டுவார். அதன்பிறகும், நான் அவரிடம், “இப்படிப்பட்ட ஆபத்தான மரங்களிலும் கூட ஏறுவதற்கு எனக்கு கற்றுக் கொடுக்கக்கூடிய யாராவது நல்ல மரம் ஏறுபவரை உங்களுக்குத் தெரியுமா?” என்று இரண்டாவதாகக் கேள்வி கேட்டேன்.

உடனே அவர், “நீ செய்வது கொஞ்சம் அதிகம்! இது மிகவும் ஆபத்தானது. முதலில் நீ கூறியதை, புரிந்து கொண்டு, நானும் அதை செய்யப்படுத்திவிட்டேன்” என்றார்.

நான் அவரிடம், "நான் உங்களது வழிகாட்டுதலைத் தான் பின்பற்றுவேன். நான் தான் இதை உங்களிடம் கூறுகினேன். ஆனால், இந்த மரங்களில் ஏறுவது ஆபத்தானது என்று நீங்கள் கூறுகின்ற, அந்த மரங்களில் ஏறுவது தவிர்க்க முடியாத ஒன்றாக தெரிகிறது. ஏனெனில் 'நாவல்' என்கிற இந்தியப் பழம் அந்த மரங்களில் ஒன்றுக்குத்தான் உள்ளது. அது உண்மையிலேயே ருசி மிகுந்தது. மேலும், அவைகள் பழுத்து விட்டதைப் பார்த்தால், எனக்குள் ஏற்படுகின்ற தூண்டுதலை என்னால் தவிர்க்க முடியாது. நீங்கள் எனது தந்தை, எனக்கு உதவ வேண்டியது உங்களது கடமை. எனக்கு உதவக்கூடிய யாராவது ஒருவரை உங்களுக்கு கண்டிப்பாகத் தெரியும்," என்று கூறினேன்.

அதற்கு அவர், "ஒரு தந்தையாக இருப்பது இவ்வளவு கடினமானதாக இருக்கும் என்று எனக்குத் தெரிந்திருந்தால், நான் ஒரு தந்தையாக ஒருபோதும் ஆகியிருக்க மாட்டேன். அதிலும், உனக்கு தந்தையாக ஆகியிருக்கவே மாட்டேன்! ஆம், எனக்கு ஒரு மரம் ஏறுபவனைத் தெரியும்," என்று கூறினார். இறுதியாக, அவர் மிகவும் அசாதாரணமாகவும், சிறப்பாகவும் மரம் ஏறுக்கூடிய ஒரு வயதானவரை எனக்கு அறிமுகம் செய்து வைத்தார். அவர், மரங்களை அதன் வேண்டாத கிளைகளை ஒடித்து, அதை ஒழுங்குபடுத்துபவர். அவரால் அந்தச் செயலை இப்போது செய்ய முடியுமா என்று சந்தேகம் கொள்ளும் அளவிற்கு, அவர் மிகவும் வயதானவராக இருந்தார். அவர் மரம் ஏறுவது மிகவும் அபூர்வமானது. யாரும் ஏறுவதற்குத் தயாராக இல்லாத அதேசமயம் மரங்களில் உள்ள, வீட்டிற்கு இடைஞ்சலாக உள்ள பெரிய மரங்களின் கிளைகளை அவர் வெட்டுவார். அதில் அவர் நிபுணர். அவர் அந்த மரங்களின் வேர்களுக்கும், அந்த வீட்டிற்கும் எந்தவிதமான பாதிப்பும் இல்லாமல் அதைச் செய்வார் - முதலில், வேண்டாத கிளைகளை மற்ற கிளையோடு சேர்த்து கயிற்றால் கட்டுவார். அதன்பிறகு, அவர் அந்தக் கிளைகளை வெட்டுவார். அதன்பிறகு, கயிற்றின் மூலம் அந்தக் கிளைகளை வீட்டின் மேல் படாதபடி கீழே தரையில் விழும்படி இழுப்பார். ஆனால், அவர் மிகவும் வயதானவராக இருந்தார். ஆனால், வேறு யாராலும் வெட்ட முடியாததொரு சூழ்நிலை ஏற்பட்டால், அப்போது அவர் அதை செய்ய தயாராக இருந்தார்.

எனவே, எனது தந்தை அவரிடம், "இந்தப் பையனுக்கும் ஏதாவது சொல்லிக் கொடு. குறிப்பாக, ஆபத்து நிறைந்த, ஒடிந்துவிடக் கூடிய மரங்களைப் பற்றி சொல்லிக் கொடு," என்றார். கிளைகள் ஒடிந்துவிடும் ... ... நான் இரண்டு மூன்று முறை அப்படி கீழே விழுந்து இருக்கிறேன். அதன் அடையாளங்கள் இன்னமும் எனது கால்களில் உள்ளன. அந்த வயதான மனிதர் என்னைப் பார்த்து, என்னிடம், "இப்படி யாரும்

என்னிடம் வந்து கேட்டதில்லை. குறிப்பாக, ஒரு தந்தை தனது மகனை அழைத்து வந்து கேட்பது ஆச்சரியமாக உள்ளது. இது ஒரு ஆபத்தான காரியம். ஆனால், அவன் அதை விரும்பினால் எனக்கும் அவனுக்கு அதைக் கற்றுக் கொடுக்க ஆசைதான்," என்றார். ஆபத்தான மரங்களை எப்படி சமாளித்து ஏறுவது என்று அவர் எனக்குக் கற்றுக் கொடுத்தார். நீங்கள் உங்களை எப்படிப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்பதற்கான எல்லா தந்திரங்களையும் அவர் எனக்கு கற்றுக் கொடுத்தார். நீங்கள் ஒரு மரத்தின் உச்சிக்குச் செல்ல விரும்பினால், மேலும் கீழே தரையில் விழுந்து விடாமல் இருக்க விரும்பினால், அதன் பிறகு நீங்கள் உங்களை அந்த மரத்தின் பலம் வாய்ந்த பகுதி ஒன்றில் ஒரு கயிற்றைக் கட்டிக் கொண்டு, அதே கயிற்றினால் உங்களையும் கட்டிக் கொண்டு, அதன்பிறகு உச்சிக்கு ஏறுங்கள். அப்படியே கிளைகள் ஒடிந்து விழுந்தாலும் கூட, நீங்கள் கயிற்றில் தொங்கிக் கொண்டு தான் இருப்பீர்களே தவிர, நீங்கள் தரையில் விழ மாட்டீர்கள். மேலும், அது எனக்கு மிகவும் உதவிகரமாக இருந்தது. அதிலிருந்து நான் ஒருபோதும் கீழே தரையில் விழவில்லை.

ஒரு தந்தை அல்லது தாயாரின் வேலை மிகப்பெரியது. ஏனெனில், அவர்கள் இந்த உலகிற்கு ஒரு புதிய விருந்தாளியைக் கொண்டு வருகின்றனர். அவனுக்கு ஒன்றும் தெரியாது. ஆனால் அவனோடு, கொஞ்சம் திறமையை அவன் கொண்டு வருகிறான். எனவே, அந்தக் குழந்தையின் திறமை வளர்ச்சி அடையவில்லையென்றால், அவன் சந்தோஷம் இல்லாமலே இருப்பான். எந்தப் பெற்றோரும் தனது குழந்தை சந்தோஷமில்லாமல் இருப்பதை விரும்ப மாட்டார்கள். அவர்கள், அவன் சந்தோஷமாக இருப்பதைத் தான் விரும்புவார்கள். வழக்கமான அவர்களது சிந்தனை தான் தவறாக உள்ளது. தங்களது குழந்தைகள் மருத்துவராக ஆனால் தான், அவர்கள் பேராசிரியர்கள் ஆனால் தான், பொறியாளராகவோ அல்லது விஞ்ஞானியாகவோ ஆனால் தான் சந்தோஷமாக இருப்பார்கள் என்று பெற்றோர்கள் நினைக்கிறார்கள். அவர்களுக்குத் தெரியாது! குழந்தைகள், தாங்கள் எதுவாக ஆகவேண்டும் என்பதற்காக இங்கு வந்து இருக்கிறார்களோ, அதுவாக அவர்கள் ஆனால் மட்டுமே அவர்கள் சந்தோஷமாக இருக்க முடியும். அவர்கள், தங்களுக்குள் சுமந்து கொண்டு வந்திருக்கிற, அந்த விதைக்கு ஏற்ற விருட்சமாக தான் ஆக முடியும்.

எனவே, அவர்களுக்குச் சுதந்திரம் கொடுப்பதற்கான எல்லா வழிகளிலும், அவர்களுக்கு சந்தர்ப்பங்களை கொடுப்பதிலும் உதவி செய். சாதாரணமாக, ஒரு குழந்தை தனது தாயாரிடம் ஏதாவது கேட்டால், அந்த குழந்தை என்ன கேட்கிறது என்று கூட கவனிக்காமல்,

அந்தத் தாயார் வெறுமனே 'கூடாது' என்று சொல்லி வருகிறார். 'கூடாது' என்பது தான் அதிகாரப்பூர்வ வார்த்தை : சரி என்பது அல்ல. எனவே, அதிகாரம் படைத்த ஒரு தந்தையோ அல்லது ஒரு தாயாரோ அல்லது வேறு யாரோ, சாதாரண விஷயங்களுக்குக் கூட 'சரி' என்று கூற விரும்புவதில்லை.

ஒரு குழந்தை, வீட்டிற்கு வெளியில் சென்று விளையாட விரும்புகிறது. அதற்கு 'கூடாது' என்கிறோம். ஒரு குழந்தையானது, மழை பெய்யும் போது அந்த மழையில் ஆட விரும்புகிறது. அதற்கும் 'கூடாது, உனக்கு ஜலதோஷம் பிடித்துவிடும்' என்கிறோம். ஜலதோஷம் என்பது புற்றுநோய் அல்ல. ஆனால், மழையில் ஆட்டம் போடுவதற்கு தடுக்கப்பட்ட ஒரு குழந்தையானது, திரும்பவும் ஒரு போதும் நடனமாட முடியாது. அது மிகப்பெரிய ஏதோ ஒன்றை, அழகான ஏதோ ஒன்றை இழந்து போயிருக்கும். ஜலதோஷம் பிடித்திருந்தால், அதுவும் கூடதவறில்லை. மேலும், குழந்தைக்கு கண்டிப்பாக ஜலதோஷம் பிடிக்கும் என்கிற கட்டாயம் இல்லை. உண்மையில், நீ எந்த அளவுக்கு அவனைப் பாதுகாப்பாக வைத்திருக்கிறாயோ, அந்த அளவுக்கு அவன் எளிதில் நோய் தொற்றக்கூடியவனாக ஆகிவிடுவான். நீ அவனை எந்த அளவுக்கு அதிகம் அனுமதிக்கிறாயோ, அந்த அளவுக்கு அவன் எதிர்ப்பு சக்தி மிக்கவனாக இருப்பான்.

பெற்றோர்கள் 'சரி' என்று சொல்வதற்குப் பழக்கப்படுத்திக் கொள்ள வேண்டும். நூறில் தொண்ணூற்றி ஒன்பது தடவை அவர்கள் 'கூடாது' என்று தான் சாதாரணமாகக் கூறுகின்றனர். அது தங்களின் அதிகாரத்தை காட்ட வேண்டும் என்பதற்குத் தானே தவிர, வேறு எதற்கும் அல்ல. எல்லோரும், பல லட்சம் மக்களிடம் அதிகாரம் செய்கின்ற இந்த நாட்டின் ஜனாதிபதி ஆக முடியாது. ஆனால், ஒவ்வொருவரும் ஒரு கணவான ஆகி, தனது மனைவியிடம் அதிகாரம் செய்யலாம். ஒவ்வொரு மனைவியும் தாயாராக ஆகி தனது குழந்தையிடம் அதிகாரம் செலுத்தலாம். ஒவ்வொரு குழந்தையும் ஒரு கரடி பொம்மையை வைத்துக் கொண்டு, அதன் மீது தனது அதிகாரத்தைக் காட்டலாம். இந்த மூலையில் இருந்து அந்த மூலைக்கு அதை உதைக்கலாம். அதற்கு கன்னத்தில் அடி கொடுக்கலாம். உண்மையில், தனது தாயாரின் அல்லது தந்தையின் கன்னத்தில் அறைய விரும்பியதை அந்த கரடி பொம்மையிடம் காட்டலாம். ஆனால், அந்த ஒன்றுமறியாத கரடி பொம்மை தனக்கு கீழ் யாரிடமும் அதிகாரம் காட்ட முடியாது.

இது ஒரு அதிகாரம் நிறைந்த சமுதாயம். மேலும், விடுதலை பெற்ற குழந்தைகளை உருவாக்குவதன் மூலம், 'சரி' என்பதையே

அதிகம் கேள்விப்பட்ட, 'கூடாது' என்பதை அபூர்வமாக கேள்விப்பட்ட ஒரு குழந்தையை உருவாக்குவதன் மூலம் தான் இந்த அதிகாரமுள்ள சமுதாயம் மறையும். அப்போது நாம், அதிக மனிதகுணம் நிறைந்த சமுதாயத்தைப் பெற்றுவிட முடியும். எனவே, இந்தக் கேள்வி குழந்தைகளுக்கானது மட்டுமல்ல, இந்தக் குழந்தைகள் தான் நாளைய சமுதாயமாக ஆகப் போகிறார்கள். குழந்தை தான் மனிதனின் தந்தை.

# முடிவுரை

## உண்மையான விடுதலை, ஆன்மீக விடுதலை தான்

உண்மையான விடுதலைக்கு இந்த வெளியுலகத்தோடு எந்த விதமான சம்பந்தமும் இல்லை.

உண்மையான விடுதலை, அரசியலோ அல்லது பொருளாதாரம் சார்ந்தோ இல்லை; அது ஆன்மீகம் சார்ந்தது. அரசியல் சுதந்திரத்தை எந்த தருணத்தில் வேண்டுமானாலும் பறித்துவிட முடியும்; பொருளாதார விடுதலையானது வெறுமனே காலைக் கதிரவனைக் கண்ட பனித்துளி போல் மறைந்து போய்விட முடியும். அவைகள், உங்களின் கைகளில் இல்லை. மேலும், உங்கள் கைகளில் இல்லாத ஒன்றினை உண்மையான விடுதலை என்று அழைக்க முடியாது.

> விடுதலை என்பதற்கு, சரியான பொருள் என்ன? அது என்னவென்றால், நீங்கள் கடந்த காலத்திலிருந்து விடுதலை பெற்று விடுவீர்கள். எதிர்காலத்திலிருந்தும் விடுதலை பெற்றுவிடுவீர்கள்.

உண்மையான விடுதலை என்பது எப்போதும் ஆன்மீக விடுதலைதான். அது உங்களுக்குள் உள்ள அந்த ஆன்மாவுடன் தொடர்புடையது. அதை சங்கிலியால் பிணைக்கவோ, கைவிலங்கு மாட்டவோ அல்லது சிறைச் சாலையில் போடவோ முடியாது.

ஆம், உங்களது உடல் இப்படிப்பட்ட விஷயங்களால் கஷ்டப் படலாம். ஆனால், உங்களது ஆன்மா அதனளவில் உள்ளார்ந்து சுதந்திரமானது. நீங்கள் அதைக் கேட்டுப் பெற வேண்டியதில்லை. நீங்கள் அதற்காகப் போராட வேண்டியதில்லை. அது, ஏற்கனவே அங்கே உள்ளது. இந்த நொடிப் பொழுதிலேயே உள்ளது. நீங்கள் உங்களுக்குள் திரும்பிப் பார்த்தால் போதும், உங்களது எல்லா அடிமைச்

சங்கிலிகளும், எல்லாச் சிறைகளும், எல்லா வகையான அடிமைத் தனங்களும் மறைந்து போகும். மேலும், இப்படிப்பட்ட அடிமைத்தனங்கள் அநேகம் உள்ளன. விடுதலை என்பது ஒன்றே ஒன்று தான். அடிமைத்தனங்கள் அநேகம் உள்ளன. உண்மை என்பது ஒன்று மட்டுமே இருக்க முடியும். ஆனால், பொய்கள் அநேகம் இருக்க முடியும் என்பதைப் போல.

விடுதலை என்பதற்கு, உள்ளே உள்ள சரியான பொருள் என்ன? அது என்னவென்றால், நீங்கள் கடந்த காலத்திலிருந்து விடுதலை பெற்று விடுவீர்கள். நீங்கள் எதிர்காலத்திலிருந்தும் விடுதலை பெற்று விடுவீர்கள். கடந்த காலத்தோடு உங்களை பிணைத்து வைத்துள்ள நினைவுகள் உங்களுக்கு இருக்காது. உங்களை எப்போதும் பின்னோக்கி இழுக்கின்ற அவைகள் இருக்காது. அப்படி பின்னோக்கி இழுப்பது இயற்கைக்கு எதிரானது; இயற்கையில் எதுவும் பின்னோக்கிச் செல்வதில்லை. மேலும் கற்பனை, ஆசை, ஏக்கம் இவற்றிலிருந்தும் கூட உங்களுக்கு விடுதலை வந்துவிடும். அவைகள் உங்களை எதிர்காலத்தை நோக்கி இழுக்கின்றன.

கடந்த காலமும் இருப்பதில்லை, அதோடு எதிர்காலமும் இருப்பதில்லை. உங்கள் கைகளில் இருப்பதெல்லாம் நிகழ்காலம் தான். கடந்த காலம் மற்றும் எதிர்காலம் இவற்றின் சுமைகள் இல்லாமல், நிகழ்காலத்தில் வாழ்கின்றவன் யாரோ, அவன் தான் விடுதலையின் ருசியை அறிவான். அங்கே அடிமைச் சங்கிலிகள் இருப்பதில்லை. அதாவது நினைவுச் சங்கிலிகளும், ஆசைச் சங்கிலிகளும் இருப்பதில்லை. உங்களது ஆன்மாவைக் கட்டிப் போடுகின்ற, உண்மையான சங்கிலிகள் இவை தான். மேலும், இவைகள் உங்களை உங்களுக்கே ஆன அந்தத் தருணத்தில் நீங்கள் வாழ்வதற்கு ஒருபோதும் அனுமதிக்காது.

என்னைப் பொருத்தவரையில், தியானம் செய்கின்ற மனம் இல்லாமல், ஒருவன் விடுதலை பெற்றவனாக இருக்க முடியும் என்பதை எண்ணிப் பார்க்க முடியவில்லை.

மேலைநாடுகளில் சொர்க்கம் என்று அழைக்கப்படுவது, இந்தியாவில் மோட்சம் என்று அறியப்படுகிறது. மோட்சம் என்றால் **'விடுதலை'** என்று அர்த்தம். சொர்க்கம் என்பதற்கு விடுதலை என்று அர்த்தம் கிடையாது. சொர்க்கம் என்பதற்கான ஆங்கில வார்த்தையாகிய **'Paraiase'** என்பது பிராடஸ் (Phiradus) என்னும் பெர்ஷிய மொழியின் மூலத்திலிருந்து வருகிறது. அதற்கு, சுற்றுச்சுவர் எழுப்பப்பட்டதொரு

தோட்டம் என்று அர்த்தமாகும். ஆனால், அது சுற்றுச்சுவருடன் கூடிய தோட்டம் தான் என்பதை மறந்துவிடாதீர்கள். அது ஒரு தோட்டமாக இருக்கலாம். ஆனாலும் கூட, அது ஒரு சிறை தான்.

ஆதாம், ஏவாள் இவர்கள் மீது கோபம் கொண்டு கடவுள் அவர்களை ஏதேன் தோட்டத்தை விட்டு வெளியேற்றியதாக பைபிள் கதை கூறுகிறது. வெளியே எங்கு அனுப்பினார்? நீங்கள் என்னிடம் கேட்டால், தோட்டம்தான் அவர்களின் விடுதலையை மறைத்து வந்த சாபக்கேடு என்றும், வெளியேற்றியதுதான் மிகப்பெரிய ஆசீர்வாதம் என்றும் கூறுவேன். ஆதாமும் ஏவாளும் சிறையிலிருந்து வெளியேற்றப்பட்டார்கள். மேலும், அதுதான் இந்த மனித இனத்தின் ஆரம்பமாக இருந்தது. இப்போது அவர்களுக்கு இந்த முழுவானமும், இந்த முழு பூமியும் சொந்தமாயிற்று. மேலும், இதிலிருந்து கொண்டு அவர்கள் எதை உண்டாக்குவார்கள் என்பது அவர்களைப் பொருத்தது. ஆனால், அவர்களாலும் கூட, ஒரு சுதந்திரமான உலகை உருவாக்க முடியாமல் போனது துரதிருஷ்டவசமானது. பின்னாட்களில் ஒவ்வொரு நாடும் சுவர்கள் சூழ்ந்த தோட்டமாகக் கூட இல்லாமல், சுவர்கள் சூழ்ந்த சிறைச்சாலையாக மீண்டும் ஆகிவிட்டது.

ஒரு சிறிய பள்ளிக்கூடத்தில், ஒரு மத ஆசிரியர் குழந்தைகளுக்கு, இந்த உலகம் எப்படி ஆரம்பித்தது என்கின்ற பைபிள் கதையைப் பற்றி கூறிக் கொண்டிருந்தார். ஒரு சிறு பையன் கேள்வி ஒன்று கேட்பதற்காகத் தனது கையை உயர்த்தினான். அந்த ஆசிரியர் அவனிடம், "உனது கேள்வி என்ன?" என்று கேட்டார்.

அதற்கு அவன், "எனது கேள்வி என்னவென்றால், கடவுள் ஆதாம், ஏவாளை ஓட்டிவிட்டதாக பைபிள் கூறுகிறது. அப்போது கடவுள் அவர்கள் ஓட்டிக் கொண்டுவிட பயன்படுத்தியது எந்த மாடல் கார்?" என்று கேட்டான்.

அது ஒரு ஃபோர்டு காராகத் தான் இருந்திருக்க வேண்டும். முதல் மாடல் ஃபோர்டு காராகத் தான் இருந்திருக்க வேண்டும். மேலும், அந்தக் கடவுள் இன்னமும் அந்த மாடல் ஃபோர்டு காரைத் தான், எந்தவிதமான மெக்கானிக்குகளும் இல்லாமல் ஓட்டிக் கொண்டிருக்கிறார் என்று நான் நினைக்கிறேன். ஏனெனில், அவரது மகனாகிய இயேசு கிறிஸ்துவும் ஒரு மெக்கானிக் கிடையாது. பரிசுத்த ஆவியும் மெக்கானிக் கிடையாது அவரும் ஒரு மெக்கானிக் கிடையாது.

கடவுள் மனிதனை தண்டித்துவிட்டார் என்று கிறிஸ்துவ மதம் நினைக்கிறது. ஆனால் எனது புரிதலும், என்னுடைய உண்மை

கண்டறிதலும் கூறுவது என்னவென்றால், கடவுள் வேண்டுமானால் மனிதர்களைத் தண்டித்துவிட்டதாக நினைத்துக் கொண்டிருக்கலாம். ஆனால், உண்மை என்னவென்றால், கடவுள் இன்னமும் அந்த சுவர்கள் சூழ்ந்த தோட்டத்தில் சிறைவாசத்தில் தான் இருக்கிறார். அவர் செய்த கெட்ட காரியத்தில் உள்ள நல்ல காரியம் என்னவென்றால், அவர் மனிதனை விடுதலை செய்தது தான் ஆகும். அவரது நோக்கம் சரியானது அல்ல. ஆனால், அதன் விளைவு இந்த மனித இனத்தின் பரிணாம வளர்ச்சி ஆகிவிட்டது. மேலும், மனிதனின் இந்த பரிமாண வளர்ச்சியின் வேகம் எந்த அளவுக்கு இருக்க வேண்டுமோ, அந்த அளவு வேகம் இல்லாமல் இருப்பதற்கு காரணம், மீண்டும் இந்த கடவுளின் மத குருக்களும், எல்லா மதங்களின் மத குருக்களும் அதை தடுத்துக் கொண்டிருப்பது தான்.

கலிலியோ, சூரியன் பூமியைச் சுற்றவில்லை, உண்மையில் அதற்கு மாறாக பூமி தான் சூரியனைச் சுற்றுகிறது என்றும், சூரியன் பூமியைச் சுற்றவது போல் தெரிவது ஒரு தோற்றம் தானே தவிர, உண்மையல்ல என்றும் கண்டுபிடித்தார். அவர் அதற்கான காரணங்கள், சான்றுகள், நிருபணங்கள், வாதங்கள் இவையெல்லாம் அடங்கிய நூல் ஒன்றை எழுதினார். அப்போது அவர் சுமார் 70 அல்லது 75 வயதானவராகவும், நோயுற்றவராகவும், படுக்கையிலே கிடப்பவராகவும், கிட்டத்தட்ட இறந்துவிட்டார் போலும் இருந்தார். ஆனால், இந்த கிறிஸ்த அன்பு எப்படிப்பட்டதென்றால், அப்போது கிறிஸ்தவ திருச்சபையின் பிரதிநிதிகளாக இருந்தவர்கள், அவரை படுக்கையிலிருந்து வெளியே இழுத்து வந்து போப்பாண்டவரின் நீதிமன்றத்தில் நிறுத்தினர்.

போப்பாண்டவர் அவரிடம், "நீ மிகப்பெரிய குற்றத்தை செய்திருக்கிறாய். ஏனெனில், சூரியன் தான் பூமியைச் சுற்றி வருகிறது என்று பைபிள் கூறுகிறது. மேலும், நாம் எல்லோரும் அதை அறிவோம். ஒன்று, நீ உனது கருத்தை மாற்றிக் கொள்ள வேண்டும். இல்லையென்றால், மரணம் தான் உனக்குத் தண்டனையாக இருக்கும்," என்றார்.

ஆனால், கலிலியோ அந்த வயதான காலத்தில், நோயுற்று, சாகும் தருவாயில் இருந்தாலும் கூட, ஒரு அழகான மனிதராகவும், நகைச்சுவை உணர்வு மிகுந்தவராகவும் இருந்திருக்க வேண்டும். அவர், போப்பாண்டவரிடம், "புனிதமானவரே, அதில் பிரச்சனையே இல்லை. நீங்கள் என்ன கூறுகிறீர்களோ, அதையே நான் எழுதிவிட முடியும். ஆனால், அதில் உள்ள ஒரு விஷயத்தை உங்களுக்கு நான் தெளிவுபடுத்த விரும்புகிறேன். நான் அப்படி எழுதிவிட்டதை, இந்த

சூரியனாலேயோ அல்லது இந்த பூமியினாலேயோ ஒரு போதும் படிக்க முடியாது. அவைகள் எப்போதும் செய்து கொண்டிருப்பது போலவே, இப்போதும் தொடர்ந்து செயல்படும். பூமி தான் சூரியனைச் சுற்றிக் கொண்டிருக்கும். நீங்கள் எனது புத்தகத்தை எரித்துவிட முடியும் அல்லது நான் அந்தப் பத்தியையே மாற்றி விடவும் முடியும்," என்று கூறினார்.

அதற்கு போப்பாண்டவர், "நீ அந்த பத்தியை மாற்றிவிடு," என்றார்.

கலிலியோ, தனது புத்தகத்தில் அந்தப் பத்தியை மாற்றிவிட்டு, "பைபிளுக்குத் தக்கபடி, போப் ஆண்டவருக்குத் தக்கபடி, மேலும் இந்த சாதாரண மனித இனத்திற்குத் தக்கபடி, இந்த சூரியன் பூமியைச் சுற்றி வருவது போல் தோன்றுகிறது," என்று எழுதினார். மேலும், அதில் அடிக்குறிப்பாக அவர், "உண்மை என்பது இதற்கு நேர் எதிராக உள்ளது. ஆனால், என்னால் ஒன்றும் செய்ய இயலாது. பைபிளில் கூறியுள்ளதைப் பின்பற்றும்படி இந்த சூரியனையும், இந்த பூமியையும் என்னால் சமரசம் செய்ய முடியாது. அந்த இரண்டும் கிறிஸ்தவர்கள் அல்ல," என்று எழுதினார். இந்த அடிக்குறிப்பு அவர் இறந்த பிறகு தான் கண்டுபிடிக்கப்பட்டது. இல்லையென்றால், இயேசுவை சிலுவையில் அறைந்ததைப் பற்றி இவ்வளவு அமளி செய்கின்ற இந்த கிறிஸ்தவர்கள், கலிலியோவை தாங்களே சிலுவையில் அறைந்திருப்பார்கள்.

இந்தியாவில் பிரபலமான கிறிஸ்தவ மத அமைப்பைச் சார்ந்த ஸ்டேன்லி ஜோன்ஸ் என்பவரிடம், நான் பேசிக் கொண்டிருந்தேன். அப்போது நான் அவரிடம், "இதைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள். ஏன் போப்பாண்டவர் இந்த அளவுக்கு வலியுறுத்தினார்? விஞ்ஞானம் இதைக் கண்டுபிடித்துவிட்டது என்றால், அவர்கள் பைபிளை அல்லவா திருத்தியிருக்க வேண்டும்," என்று கேட்டேன்.

அதற்கு ஸ்டேன்லி ஜோன்ஸ் என்னிடம், "அது மிகப்பெரிய சிக்கலை ஏற்படுத்திவிடும். பைபிளில் கூறியுள்ள ஒரு வாக்கியம் தவறு என்றாகிவிட்டால், அதன் பின்னர் பைபிளில் உள்ள மற்ற வாக்கியங்கள் எல்லாம் தவறானவை அல்ல, சரியானவை என்பதற்கு எந்தவிதமான உத்திரவாதமும் இருக்காது," என்றார். பைபிள் ஒரு புனித நூல். அது கடவுளிடமிருந்து நேரடியாக வந்தது. அதில் எதையும் மாற்றவும் முடியாது, அதில் எதையும் சேர்க்கவோ அல்லது அதில் உள்ளதை வெட்டிச் சுருக்கவோ முடியாது. மேலும், கடந்த முந்நூறு ஆண்டுகளில் பைபிளில் கூறியுள்ளதற்கு எதிராக அநேக விஷயங்களை மனிதன் கண்டு கொண்டுள்ளான்.

உண்மையில், நீங்கள் உங்களது தன்னுணர்வில் வளர்ச்சி பெற்றால், அதன் பின்னர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்போ அல்லது ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்போ என்ன எழுதப்பட்டுள்ளதோ, அதைத் தொடர்ந்து மாற்றத் தான் வேண்டியதிருக்கும். புதிய பதிப்புகள் உண்டாக்கப்பட வேண்டும். ஆனால், இந்த மதங்களிடம் இல்லாதது என்னவென்றால், அது தைரியம் தான். உண்மையின் பக்கம் நிற்கின்ற தைரியம். இது கிறிஸ்தவ மதத்தோடு மட்டும் உள்ள கதை அல்ல, இதே கதை இந்துக்களிடமும், முகமதியர்களிடமும், யூதர்களிடமும், பௌத்தர்களிடமும், சமணர்களிடமும் உள்ளது. அவர்களின் மனநிலையில் எந்தவிதமான வேறுபாடும் கிடையாது.

விடுதலை பெற்ற ஒரு மனிதன், தனது கடந்த காலத்திலிருந்தும் விடுதலை பெற்றவனாக இருப்பான். மேலும், விடுதலை பெற்ற ஒருவன் தனது எதிர்காலத்திலிருந்தும் விடுதலை பெற்றவனாக இருப்பான். ஏனெனில், அடுத்த நொடியில் என்ன நடக்கப் போகிறது என்பதை நீங்கள் அறிந்திருக்க மாட்டீர்கள். எனவே, நீங்கள் எப்படி ஆசைப்பட்டுக் கொண்டே போக முடியும்?

வயதான ஒருவர் மரணப்படுக்கையில் இருந்தார். வெவ்வேறு வீடுகளில் வசித்து வந்த அவரது நான்கு மகன்களும், மிகப்பெரிய பணக்காரர்களாக இருந்தனர். தங்களது தந்தை இறக்கும் தருவாயில் இருப்பதைக் கேள்விப்பட்ட அவர்கள் உடனே ஓடி வந்தனர்.

தந்தையோ இறக்கும் தருவாயில், தனது கடைசி மூச்சை பிடித்து கொண்டு படுக்கையில் கிடந்தார். அப்போது அவரது படுக்கைக்கு அருகே உட்கார்ந்து கொண்டு அவரது மகன்கள் அவரது உடலை எப்படி கல்லறைத் தோட்டத்திற்கு எடுத்துச் செல்வது என்று விவாதிக்க ஆரம்பித்தனர். அவர்களது கவலை தந்தையைப் பற்றியதாக இல்லை. இன்னும் கொஞ்ச நேரத்தில் அவர் போய்விடுவார். அதன்பிறகு அவர்கள் அவரைப் பார்க்கவோ, ஒருவரை ஒருவர் அடையாளம் கண்டு கொள்ளவோ முடியாது. ஆனால், அவர்களின் கவலை அது அல்ல. அவர்களது கவலை எல்லாம், "அவர் இறந்துவிட்டால், அவரது உடலை நாம் எப்படி எடுத்துக் கொண்டு போவது?" என்பதாகத் தான் இருந்தது.

அவர்களில் கடைசி பையன் மற்றவர்களிடம், "அவர் எப்போதும் ரோல்ஸ் ராய்ஸ் காரைத்தான் விரும்புவார். மேலும், அவரிடமும் பணம் உள்ளது, நம்மிடமும் போதுமான பணம் உள்ளது. அவர் மனம் கஷ்டப்படவோ அல்லது அவரது வெள்ளை உள்ளத்தின் ஆசையை

அடக்கவோ வேண்டிய அவசியம் இல்லை. எனவே, அவர் வாழும் போது அனுபவிக்கத் தவறிவிட்ட அந்த ரோல்ஸ் ராய்ஸ் காரை, அவர் இறக்கும் போதாவது அனுபவிப்பதற்கு, நாம் உடலை எடுத்துச் செல்ல ஒரு ரோல்ஸ் ராய்ஸ் காரை வாங்குவோம்," என்றான்.

அதைக் கேட்ட இரண்டாவது பையன், "நீ சின்னப் பையன். பணம் பற்றி நீ புரிந்து கொள்ளாதவன். அது வீணான செலவு. அவரே இறந்துவிட்டார். அதன்பிறகு அவரை நீ ரோல்ஸ் ராய்ஸ் காரில் கொண்டு செல்கிறாயா அல்லது ஒரு சாதாரண டிரக்கில் கொண்டு செல்கிறாயா என்பது அவருக்கு ஒரு பொருட்டல்ல. அவரால் அதை அறிந்து கொள்ள முடியாது. எனவே, பணத்தை ஏன் வீணாக்க வேண்டும்? மேலுட், இதற்கு ஒரு ரோல்ஸ் ராய்ஸ் காரை வாடகைக்கு எடுத்துக் கொள்வதற்கு அதிக பணமும் ஆகாது. அதை விலைக்கு வாங்க வேண்டும் என்கிற கேள்விக்கே இடமில்லை. ஆனால், எனது கருத்து என்னவென்றால், ஒரு மலிவான டிரக் வண்டியே இந்த ரோல்ஸ் ராய்ஸுக்கு இணையாக போதும். ஏனெனில், இறந்து போனவருக்கு அதில் எந்த வேறுபாடும் கிடையாது," என்று கூறினான்.

அப்போது அந்த மூன்றாவது மகன், "நீ இன்னும் பக்குவப்படவில்லை. இந்த நகராட்சியில் உள்ள குப்பை வண்டி, இறந்து போகின்ற எந்த ஒரு பிச்சைக்காரனையும் காசில்லாமல் எடுத்துக் கொண்டு போகும் போது, நீங்கள் ஏன் ஒரு டிரக் வண்டியைப் பற்றி யோசிக்கிறீர்கள்! அவரை வெறுமனே ரோட்டில் போட்டு விடுங்கள். அதிகாலையில் வருகின்ற அந்த நகராட்சி குப்பை வண்டியானது, இங்கு உள்ள எல்லாக் குப்பைகளோடு இவரையும், காசில்லாமல் எடுத்துக் கொண்டு போய்விடும். அவர் காசில்லாமல் பயணம் செய்யட்டும். மேலும், இறந்து போய்விட்ட ஒருவருக்கு அது நகராட்சி குப்பை வண்டியாக இருந்தால் என்ன அல்லது வாடகை வண்டியாக இருந்தால் என்ன அல்லது ரோல்ஸ் ராய்ஸ் காராக இருந்தால் என்ன, இறந்து போன ஒருவருக்கு இவை எல்லாம் ஒன்று தான்," என்று கூறினான்.

அந்த நேரத்தில், அந்த வயதானவர் தனது கண்களைத் திறந்து, "என்னுடைய செருப்புகள் எங்கே?" என்று கேட்டார். அவர்கள் ஆச்சரியமடைந்தார்கள். அவர்கள், அவரிடம், "செருப்புகளை வைத்துக் கொண்டு நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? நீங்கள் சாகப் போகிறீர்களே," என்று கூறினார்கள்.

அதற்கு அவர், "நான் இன்னமும் உயிரோடு தான் இருக்கிறேன். ஒருவேளை, நான் இன்னும் கொஞ்சம் கூட சுவாசிக்கலாம். எனது

செருப்புகளை மட்டும் கொண்டு வாருங்கள். நான் வெறுமனே கல்லறைத் தோட்டத்திற்கு நடந்தே சென்று விடுகிறேன். அது தான் புத்திசாலித்தனமான, காசு செலவில்லாத வழி. நீங்கள் அனைவரும் ஊதாரித்தனமாக செலவு செய்பவர்கள்," என்று கூறினார்.

மக்கள், பணத்தை வைத்திருக்கலாம். அப்போது பணம் அவர்களுக்குத் தடையாக ஆகிவிடும். மக்கள் புகழை வைத்திருக்கலாம். அந்தப் புகழே அவர்களுக்கு தடையாகிவிடும். இந்த மனித இனம், தனது கடந்த காலம் முழுவதும் மிகவும் சிறந்த அடிமைச் சங்கிலிகளை உருவாக்குவது எப்படி என்பதில் மாற்றங்கள் செய்து கொண்டு வந்துள்ளதாகத் தான் தெரிகிறது. ஆனால், அந்த அடிமைச் சங்கிலி தங்கத்தினால் செய்யப்பட்டிருந்தாலும்கூட, அது அடிமைச் சங்கிலி தான். வெளி உலக விடுதலை என்பது இந்த மனித இனம் முழுவதையும் இந்த அரசியல்வாதிகள் தொடர்ந்து ஏமாற்றிக் கொண்டு வருவது தான் ஆகும்.

விடுதலை என்பது உங்களது தனிப்பட்ட வேலை. அது, முழுவதும் உங்களைச் சார்ந்தது. நீங்கள் உங்களது கடந்த காலக் குப்பைகளையும், எதிர்கால ஆசை மற்றும் லட்சியங்களை எல்லாம் வெளியே தூக்கி எறிந்துவிட்டால், இந்த நொடிப் பொழுதே விடுதலை பெற்றுவிடுவீர்கள். சிறகடித்துப் பறக்கின்ற ஒரு பறவையைப் போல, இந்த முழு வானமும் உங்களுடையது தான். இன்னும் சொல்லப் போனால், வானமும் கூட உங்களுக்கு எல்லையாக இருக்க முடியாது.

ஆனால், மனிதன் தனது சொந்த துக்கத்திடம் அதிக பற்றுடன் இருப்பதால், அவனால் விடுதலை என்னும் கருத்தைப் புரிந்து கொள்ள முடியாது. ஏனெனில், சுதந்திரமாக இருப்பதென்பது துக்கம் இல்லாமல் இருப்பதாகும். மேலும், மனிதன் விடுதலை அடைவதற்கு பயப்படுவது போல் தெரிகிறது. குறைந்தபட்சம், தனது குறைகளைக் கேட்பதற்கும், பிரார்த்திப்பதற்கும் வானத்தில் ஒரு தந்தை அவனுக்கு அவசியம் தேவைப்படுகிறார். அவனை கவனமாக பார்த்துக் கொள்ள, தந்தையைப் போன்றதொரு கடவுள் வானத்தில் தேவைப்படுகிறார். வானத்தில் தந்தை இல்லாமல் போய்விட்டால், அவன், தான் காணாமல் போய்விட்ட குழந்தை போல் உணர்கிறான். அது, மன இயல்படி ஒரு தந்தையை நிலை நிறுத்திக் கொள்வதாகும். உங்களுக்கு ஒரு தந்தை போன்ற உருவம் தேவைப்படுவதால், நீங்கள் உங்களை கவனமாக பார்த்துக் கொள்கிறதொரு கடவுளைக் கண்டுபிடித்து வைத்திருக்கிறீர்கள். அது, உங்களது கண்டுபிடிப்பு தான். ஒரு வகையில் பார்த்தால், நீங்கள் உங்களையே ஒரு சுற்று வழியில் வழிபடுகிறீர்கள். இதைவிட எளிதாக

இருக்க வேண்டும் என்றால், ஒரு முகம் பார்க்கும் கண்ணாடியை வைத்துக் கொண்டு அதன் முன்னால் கைகளைக் குவித்துக் கொண்டு நின்று கொண்டு, ஹீப்ரூ, சமஸ்கிருதம், அரபி, கிரேக்கம், லத்தீன் இப்படி எந்த மொழியில் வேண்டுமானாலும் உங்களது பிரார்த்தனையை மீண்டும் சொல்லுங்கள். நீங்கள் அறிந்த மொழியை பயன்படுத்தாதீர்கள். ஏனெனில், நீங்கள் மொழியை அறிந்து கொள்ளும் போது, உங்களது பிரார்த்தனை மிகவும் சாதாரணமானதாகத் தெரியும். உங்களுக்கு பாஷை தெரியவில்லை என்றால், அது புதிர் போன்று இருக்கும்.

உங்களது வழிபாடு என்பது, உங்களை மனிதனிலிருந்து அடிமைகளாக தரம் தாழ்த்திவிட்ட அந்த கொடுங்கோலர்களை அடிமைகளாகிய நீங்கள் போற்றி புகழ்வது போன்றது தான் ஆகும். மேலும், அவர்கள் உங்களை எந்த நேரத்திலும் கொன்று போடலாம். ஏனெனில், ஒரு அடிமை என்பவர் ஒரு சொத்து போன்றவர் தானே தவிர, அவர் ஒரு மனிதன் அல்ல. உங்களது பிறப்புரிமையும், உங்களது இறுதி பேரானந்தமும் ஆகிய விடுதலையைக் கண்டு நீங்கள் பயப்படும் அளவுக்கு ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அநேக விதமான அடிமைத்தனங்கள் உருவாக்கப்பட்டுவிட்டன. உங்களது இந்த கோவில்களும், மசூதிகளும், யூதக் கோவில்களும், தேவாலயங்களும் விடுதலையின் அடையாளங்கள் அல்ல. அவை தான் உங்களது அடிமைத்தனத்தின், உங்களது இறந்து போன கொடுங்கோலர்களின் அடையாளங்கள். ஆனால், புத்திசாலியான மக்களும் கூட இதைச் செய்து கொண்டு தான் இருக்கிறார்கள். மனிதனின் குருட்டுத்தனத்திற்கு எல்லையே கிடையாது என்பது போல் தெரிகிறது.

எனவே, ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக, நீங்கள் அடிமைச் சங்கிலிகளோடும், கை விலங்குகளோடும் இருந்துவிட்டதால், நீங்கள் அவைகளை உங்களது ஆபரணங்களாக நம்ப ஆரம்பித்துவிட்டீர்கள். மேலும், இதுதான் கடவுளின் விருப்பம் என்றும் நம்ப ஆரம்பித்துவிட்டீர்கள். உங்களது பெற்றோர்கள், உங்களது எதிரிகளாக இருக்க முடியாது. மேலும், அவர்கள் உங்களை தேவாலயத்திற்கோ அல்லது கோவிலுக்கோ அழைத்துக் கொண்டு செல்கிறார்கள் என்றால், அவர்கள் அழைத்துக் கொண்டு போவது, உங்கள் மீது உள்ள அன்பினால் தான் ஆகும். ஆனால், இதில் உள்ள உண்மை என்னவென்றால், அவர்கள் உங்களை அங்கு அழைத்துச் செல்வது. ஏனெனில், அவர்களது பெற்றோர்களாலும் அவர்கள் அங்கு அழைத்துச் செல்லப்பட்டனர். இது ரோபோ போன்ற, இயந்திரதனமே ஆகும். மேலும், கொஞ்சம் கொஞ்சமாக இந்த அடிமைத்தனமானது உங்களது

இரத்தத்திற்கும், உங்களது எலும்பிற்குள்ளும், உங்களது எலும்பு மஜ்ஜைகளுக்குள்ளும் ஊடுருவி விட்டது.

எனவே தான், யாராவது கிருஷ்ணருக்கு எதிராகப் பேசிவிட்டால், உடனடியாக நீங்கள் அவருடன் சண்டை போடுவதற்குத் தயாராகி விடுகிறீர்கள். அவர் உங்களது கடவுளுக்கு எதிராகப் பேசிவிட்டார். ஆனால், அந்தக் கடவுள் என்பதோ ஒரு அடிமைத்தனத்தைத் தவிர வேறு ஒன்றும் கிடையாது. யாராவது இயேசுவிற்கு எதிராகப் பேசிவிட்டால், நீங்கள் கோபம் கொள்கிறீர்கள். ஏனெனில், அவர் உங்களது கடவுளுக்கு எதிராகப் பேசிவிட்டார். ஆனால், அவர் உங்களது அடிமைச் சங்கிலியை பற்றி மட்டும் தான் பேசுகிறார்.

இந்த உலகில் உள்ள எல்லா நாடுகளாலும், இந்த உலகில் உள்ள எல்லா மதங்களினாலும் நான் கண்டனத்துக்குள்ளாவதற்கான காரணம் இதுதான். ஏனெனில், நான் அவர்களின் அடிமைத்தனத்திற்கு எதிராகப் பேசி வருகிறேன். அந்த அடிமைத்தனம் இப்போது பளபளப்பாக்கப்பட்டு, அலங்கரிக்கப்பட்டு இருக்கலாம். ஆனால், அவர்கள் எப்போதும் அதிலேயே வாழ்ந்துவிட்டனர். அவர்களின் பெற்றோர்களும், மேலும் அவர்களது பெற்றோர்களின் பெற்றோர்களும் ... ... இப்படி ஒரு அடிமைகளின் நீண்ட வரிசை உள்ளது. அவர்கள் பரம்பரை பரம்பரையாக வைத்துள்ள சொத்துக்களை எப்படி விட்டுவிட முடியும்? நீங்கள் அடிமைத்தனம் என்கிற அந்த பரம்பரைச் சொத்தைத் தான் பெறுகிறீர்கள். அதைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. மேலும், இதை நீங்கள் ஒரு கவலையளிக்கின்ற விஷயமாக எடுத்துக் கொள்ளாவிட்டாலும் கூட, இது கவலையளிக்கும் விஷயம் தான்.

நான் கேள்விப்பட்டது இது :

மூன்று யூத மதகுருக்கள் தங்களது யூத மத ஆலயங்களைப் பற்றி பேசிக் கொண்டிருந்தனர். மூதலாவது யூத மதகுரு "எனது யூதமத ஆலயம்தான் மிகவும் முன்னேற்றமடைந்த ஒன்றாகும். ஏனெனில் என்னுடைய ஆலயத்தில் நான் எனது பிரசங்கத்தை நடத்திக் கொண்டிருக்கும்போது அங்குள்ள மக்கள் புகைப்பிடிக்கவும், வம்பளக்கவும், பேசவும் அனுமதிக்கப்பட்டு இருக்கிறார்கள். நான் அவர்களுக்கு முழு சுதந்திரம் கொடுத்து இருக்கிறேன்", என்றார்.

இதைக் கேட்டு மற்ற இரண்டு மத குருக்களும் சிரித்தனர். இரண்டாவது மத குரு, "இதைக் தான் நீ முன்னேற்றம் என்று அழைக்கிறாயா? என்னுடைய ஆலயத்திற்கு வந்து பார். நான் அங்கு அவர்களுக்கு மது அருந்தவும், மேலும் மது அருந்திய பின்னர் அவர்கள்

கூச்சலிடவும், கத்தவும், அவர்கள் சண்டை போட்டுக் கொள்ளவும் அனுமதி வழங்கி இருக்கிறேன். ஆனால், நான் எனது சொற்பொழிவை தொடர்ந்து நடத்திக் கொண்டிருப்பேன். இதுதான் சுதந்திரம்," என்றார்.

யூத மத ஆலயங்களில் ஆண்களும், பெண்களும் சேர்ந்து உட்கார முடியாது. அவர்களுக்கு இடையில் ஒரு திரை இருக்கும். எனவே, அந்த இரண்டாவது மத குரு மேலும் சொன்னார், "அந்தத் திரையையும் நான் எடுத்துவிட்டேன். எனவே, இப்போது ஆண்களும் பெண்களும் சேர்ந்து உட்கார முடியும். நான் அதில் குறுக்கிடுவது கிடையாது. உங்கள் அருகில் உட்கார்ந்திருப்பது உங்களது மனைவியா அலலது வேறு யாருமா என்று நான் கவலைப்படுவதில்லை. மேலும், ஆண் நண்பர்களும், பெண் நண்பர்களும் எல்லாவிதமான காதல் சமாச்சாரங்களையும் செய்ய அனுமதிக்கப்பட்டு இருக்கிறார்கள். அவர்கள் கட்டி அணைக்கலாம், முத்தமிடலாம். ஆனால், எனது சொற்பொழிவு தொடர்ந்து நடக்கும். நாங்கள் சுதந்திர சகாப்தத்திற்குள் நுழைந்துவிட்டோம்".

அதைக் கேட்ட மூன்றாவது யூத மத குரு, "நீங்கள் இருவரும் முட்டாள்கள். நான் எனது யூத மத ஆலயத்தின் முன்பு ஒவ்வொரு யூத விடுமுறையின் போதும் இந்த மத ஆலயம் மூடப்பட்டிருக்கும் என்று ஒரு பலகையில் எழுதி வைத்திருக்கிறேன். இதான் சுதந்திரம். மக்களின் நேரத்தை ஏன் வீணடிக்கிறீர்கள்? குறைந்தபட்சம் ஒரு விடுமுறை நாளிலாவது அவர்களுக்குக் கிடைக்கின்ற எல்லாப் பொழுதுபோக்கு விஷயங்களையும் அவர்கள் அனுபவிக்கட்டுமே," என்றார்.

ஆனால், இவைகள் எல்லாம் சுதந்திரம் ஆகாது. அவைகள் எல்லாம் இன்னமும் யூதத்தனம் நிறைந்தவை தான். நீங்கள், உங்களது யூத மதத் தன்மையையும், உங்களது இந்துத் தன்மையையும், உங்களது சமணத் தன்மையையும், உங்களது முகமதியத் தன்மையையும் விடாத வரையில், உங்களது கடந்த காலத்திலிருந்து நீங்கள் முற்றிலும் சுத்தமாக்கப்படாத வரையில், உயிரற்ற கடந்த காலத்தினால் நீங்கள் இனியும் ஆதிக்கம் செலுத்தப்பட்டுக் கொண்டும், கணித்துக் கூற முடியாத எதிர்காலத்தை எண்ணி, சந்தோஷம் அடைபவராகவும் இருக்கும் வரையில், நீங்கள் சுதந்திரம் பெற்றவர்கள் அலல. விடுதலை என்பது இங்கேயே, இந்த நொடிப்பொழுதே இருப்பது. நேற்றும் அல்ல, நாளையும் அல்ல, அது இருக்கின்ற இந்த நொடிப் பொழுதில் இருப்பது.

புரிந்து கொண்டுள்ள ஒரு மனிதன், தனது சுமைகளை இறக்கி வைத்துவிடுகிறான். மேலும், அவனது இதயத்தில் பாரமாக இருந்த

எல்லா அடிமை சங்கிலிகளும், அவனது அந்த அடிமைச் சங்கிலிகள் மறைகின்ற அந்த நொடிப் பொழுதிலேயே வானத்தில் பறப்பதற்கான சிறகுகள் அவனுக்கு வளர ஆரம்பித்துவிடுகிறது. அதன்பின்னர், நட்சத்திரங்கள் நிறைந்த முழு வானமும் அவனுடையது தான்.

ஆனால், ஒன்றை மட்டும் நினைவில் கொள்ளுங்கள். விடுதலை அடைய வேண்டும் என்கின்ற அந்த ஆசையும் கூட ஒரு தடையாக ஆகிவிட முடியும். எல்லா ஆசைகளும் உங்களைத் தடுத்து விடுகின்றன. இதில் விடுதலைக்கு விதிவிலக்கு கிடையாது. அதற்கான எளிமையான காரணம் என்னவெனில், எல்லா ஆசைகளும் எதிர்காலம் என்பதில் தான் உயிர் வாழ்கின்றன. உண்மையிலேயே, விடுதலை பெற்ற ஒருவன் அடிமைத்தனத்தைப் பற்றியோ, அல்லது விடுதலை என்பதைப் பற்றியோ ஒன்றும் அறிந்திருக்க மாட்டான். அவன், சுதந்திரத்தை அனுபவிப்பான். இது அவனது இருப்பு நிலையின் தன்மை.

எல்லா லட்சியங்களும் நிச்சயமாக எதிர்காலத்தில் தான் இருந்தாக வேண்டும். மேலும், அவைகள் நிறைவேற வேண்டும் என்கிற ஆசைகளும் கூட நிகழ்காலத்தில் உங்களுக்கு இருக்கின்ற இந்த துக்கத்தை மறைப்பதற்காக, நீங்கள் வைத்துக் கொள்கின்ற ஒன்று தானே தவிர, வேறு எதுவும் அல்ல. உங்களது நாளைய தினங்கள் உங்களுக்கு வாக்குறுதிகளை கொடுத்துக் கொண்டே போகிறது. "இந்த துக்கம் இன்று ஒருநாள் மட்டும் தான். இது கடந்து போய்விடும். நாளை, நான் சுதந்திரமாக இருப்பேன்," என்று வாக்குறுதி அளிக்கும். நாளை என்பது ஒரு ஆறுதல் தான். அது உனக்கு விடுதலையைக் கொண்டு வருவதற்குப் பதிலாக, மரணத்தைத் தான் கொண்டு வரும். மேலும், இதுநாள் வரை நீங்கள் வாழ்ந்த நாட்கள் எல்லாம் ஒரு அடிமையாகத் தான் வாழ்ந்து இருக்கிறீர்கள். ஏனெனில், நீங்கள் ஒருபோதும் உங்களது நிகழ்காலத்தைப் பற்றி கவலைப்படவில்லை.

நிகழ்காலம் என்பது மட்டும் தான் இங்குள்ள ஒரே உண்மை என்பதை நான் உங்களுக்கு கூறுகிறேன். எதிர்காலம் என்பது உங்களுடைய கற்பனை. மேலும், கடந்த காலம் என்பது உங்களது நினைவு. உண்மையில், அவைகள் இருப்பில் இல்லை. இருப்பது எல்லாமே நிகழ்காலம் மட்டும் தான். இந்த நிகழ்காலத்தில் முழு விழிப்புடன் இருப்பதும், கடந்த காலம் மற்றும் எதிர்காலம் இவற்றை நோக்கிச் செல்கின்ற உங்களது தன்னுணர்வினை ஒன்று சேர்த்து, அதை இந்த நிகழ்காலத்தில் குவியச் செய்வது தான் விடுதலையின் சுவையை அறிவதாகும்.

ஆனால், மனிதன் ஒருவிதப் பொறிக்குள் சிக்கிக் கொண்டது போல் தெரிகிறது. வானத்தில் பறக்கின்ற பறவைகளைப் போலவோ அல்லது காடுகளில் திரியும் விலங்கினத்தைப் போலவோ கூட, அவன் சுதந்திரமாக இல்லை. அவனைச் சுற்றிலும் அநேக தடைகள் உள்ளன. மேலும், அவன் அந்த தடைகளையும் ஏற்றுக் கொண்டு விட்டான்.

உண்மையில், உங்களது அக்கறை இப்போது என்ன? இப்போது உங்களது கவலை என்ன? உங்களது பரபரப்பு இப்போது என்ன? இப்போதுள்ள இவ்வமைதியில், நீங்கள் முழுமையான விடுதலை பெற்றவர்களாக இருப்பீர்கள்.

நாள் முழுவதும் பகலில் நீங்கள் கலக்கத்துடனும், கவலையுடனும் இருந்தால், ஏக்கத்துடனும் ஆசையுடனும் இருந்தால், மேலும் விரக்தி அடைந்தால், உங்களது இரவுப் பொழுது கெட்ட கனவாகத் தான் இருக்கும். ஆனால், நீங்கள் உங்களது ஒவ்வொரு நொடிப் பொழுதையும் முழுமையாக, ஆழ்ந்த தீவிரத்துடன உங்களது முழு உணர்வோடு வாழ்ந்தால், அதன்பிறகு உங்களத இரவுகள் அமைதியாக, தொல்லை இல்லாமலும், ஒய்வுடனும், சமாதானத்துடனும் இருக்கும். எந்த ஒரு கனவும்கூட உங்களைத் தொந்தரவு செய்ய முடியாது. ஏனெனில், உங்களின் நிறைவேறாத வாழ்க்கையிலிருந்து தான், மற்றும் நீங்கள் அடக்கி வைத்துள்ள இந்த வாழ்க்கையில் இருந்து தான் கனவுகள் வருகின்றன.

மேலை நாட்டு மனோதத்துவ மேதைகள், குறிப்பாக மனதை அலசி ஆராய்பவர்கள், இந்த முக்கிய கருத்தை முழுவதுமாக தவற விட்டுவிட்டார்கள். அவர்கள் கனவுகள் தோன்றுகின்ற அந்த ஆரம்ப இடத்தை விட்டுவிட்டு, வெறும் கனவுகளை ஆராய்ச்சி செய்கின்றனர். உங்களது கனவுகளின் மூலமே நீங்கள் விழித்திருக்கும் நேரங்கள் தான். ஆனால், நீங்களோ கால்கள் கட்டப்பட்டு, உங்களது மதத்தில் சிறை வைக்கப்பட்டு, உங்களது நல்லொழுக்கம், உங்களது பழகும் விதம், உங்களது நடவடிக்கைகளால் சிறை வைக்கப்பட்டு இருப்பதால், உங்களால் சுதந்திரமாக வாழ முடியவில்லை. இப்படி நீங்கள் வாழாமல் விட்டுவிட்ட தருணங்கள் எல்லாம் தூக்கத்தில் நீங்கள் இருக்கும் போது உங்களிடம் திரும்பி வருகின்றன. ஏனெனில், நீங்கள் வாழாமல் விட்டுவிட்டது எதுவானாலும், அது உங்களது தன்னுணர்வு அற்ற மனதிற்குள் நழுவிச் சென்றுவிடுகிறது.

இதை அறிந்தால், பிராய்டு மிகவும் ஆச்சரியம் அடைவார். அவர் இந்தியாவிற்கு வந்து, இங்குள்ள ஆழ்ந்த காடுகளில் வசிக்கின்ற

பழங்குடி மக்களை அவர் பார்க்கச் சென்றிருந்தால், நிச்சயம் ஆச்சரியமடைவார். நான் அவர்களைப் பார்த்திருக்கிறேன். அவர்களிடம் உள்ள ஒரு ஆச்சரியமான விஷயம் என்னவென்றால், அவர்கள் எந்தவிதமான கனவுகளும் காண்பதில்லை. அவர்கள் இந்த வாழ்க்கையின் உண்மையான ஆழத்தையும், வாழ்க்கையின் இளைப்பாறுதல்களையும் அறிந்து கொண்டுள்ளனர். இயல்பாகவே, அவர்கள் காலையில் அதிக உயிர்த்துடிப்புடனும், அதிக இளமையுடனும், அதிக புத்துணர்வுடனும், அன்றைய நாளை எதிர் கொள்கின்றனர். மேலும், அன்றைய பொழுதை மீண்டும் அவர்கள் முழுமையாக வாழ்கின்றனர். ஆனால், நாகரீகம் அடைந்த ஒரு மனிதனின் வாழ்க்கை இதற்கு நேர்மாறானது. அவன் இரவில் மட்டும் கனவு காண்பதில்லை. எந்த நேரத்திலும், உங்களது நாற்காலியில் உட்கார்ந்து, இளைப்பாறிக் கொண்டு, உங்களது கண்களை மூடிக் கொண்டிருந்தால், உங்களுக்குள் ஏதாவது ஒரு கனவு மிதந்து வரும்.

நீங்கள் வாழ்வதே இல்லை. நீங்கள் வாழ்வதற்கு ஆசை மட்டுமே கொள்கிறீர்கள். என்றாவது ஒருநாள் வாழ்வோம் என்று தான் நீங்கள் நம்பிக்கையோடு, இன்றைய இந்த இரவு இப்படியே எப்போதும் இருந்துவிடாது, என்றாவது ஒருநாள் விடியும் என்று நம்பிக்கையில் தான் வாழ்கிறீர்கள். ஆனால், அடிமைக்கு விடிவு காலமே கிடையாது. அவன் இருளில்தான் வாழ்ந்தாக வேண்டும். வெளிச்சம் என்கிற ஒரு விஷயம் உண்மையில் உள்ளது என்பதை அறியாமலேயே அவன் வாழ்ந்தாக வேண்டும்.

இப்போதுள்ள உனது வாழ்க்கையை, வாழ்க்கை என்று எடுத்துக் கொள்ளாதே. இது வாழ்க்கையே அல்ல. ஒரு புரட்சியின் மூலம் தான் நீ அதைப் பெற முடியும். ஆனால், அந்தப் புரட்சிக்கும் எந்தஒரு அரசியலுக்கும், எந்தஒரு பொருளாதாரத்திற்கும் சம்பந்தம் இல்லை. அது உங்களது ஆன்மீகத்தோடு சம்பந்தமுள்ளது. மேலும், உங்களுக்குள் ஒரு விழிப்புணர்வு வந்துவிடும். உங்களுக்குள் உள்ள அந்த மையப் பகுதி முழுவதும் வெளிச்சம் வந்துவிட்டால், உங்களது வெளியில் உள்ள வெளிச்சமும் அதையே பிரதிபலிக்க ஆரம்பித்துவிடும்.

உங்களது பழைய பழக்கங்களுக்கு வயதாகிவிட்டதாலும், அவைகள் உங்களுக்கு பழைய நண்பர்களாக இருப்பதாலும், அவைகள் மீண்டும் மீண்டும் நீங்கள் விடுதலை அடையாமல் இருப்பதற்கே முயற்சி செய்யும். ஆனால், நீங்கள் அவற்றை எப்போதும் கடந்து செல்வதற்கான விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும். அவைகள்

வருவதை நீங்கள் கவனித்துக் கொண்டு, அவைகளிடம் எப்போதைக்கும் ஒரு வணக்கம் போட்டுவிட்டுச் சென்றுவிட வேண்டும். அது தான் என்னைப் பொருத்தவரையில், சந்நியாசம் என்பதன் முக்கிய அர்த்தமாகும். அதன்பிறகு, நீங்கள் இந்த அழகான மரங்களின் ஒரு அங்கமாகவும் இந்த அழகான ரோஜா மலர்களோடும், இந்த மிகப்பெரிய நட்சத்திரங்களோடும் ஒரு அங்கமாகி விடுவீர்கள். அவைகள் எல்லாமே சுதந்திரமானவை தான்.

மனிதனைத் தவிர, இந்த உலகில் வேறு எங்கும் அடிமைத்தனம் கிடையாது. மேலும், அதிலிருந்து வெளியே வருவதும் கடினமானது அல்ல. அடிமைத்தனம் உங்களைப் பற்றிக் கொண்டிருக்கிறது என்கிற கேள்வியே கிடையாது. உண்மை என்னவென்றால், நீங்கள் தான் உங்களது அடிமைத்தனத்தை பற்றிக் கொண்டு இருக்கிறீர்கள். உங்களது அடிமைச்சங்கிலிகள் தான் உங்களது பொறுப்பு. நீங்கள் அவைகளை ஏற்றுக் கொண்டதால் தான் அவைகள் அங்கு உள்ளன.

உங்களது முழு விழிப்புணர்வுடன், "மிகவும் நல்லது, போய் வாருங்கள். நீங்கள் எங்களோடு நீண்டகாலம் இருந்துவிட்டீர்கள். அது போதும். நாம் பிரிந்து செல்வோம்," என்று அவைகளிடம் கூறுங்கள். உங்களது விடுதலையைக் கொண்டு வருவதற்கு வெறுமனே எளிமையான விழிப்புணர்வு ஒன்றே போதுமானது. ஆனால், நீங்கள் உங்களது அடிமைத்தனத்தில் பற்றுக் கொண்டிருப்பதற்கு சில ஆர்வங்கள் உள்ளன.

நான் ஒரு பல்கலைக் கழகத்தில் ஆசிரியராக இருந்தேன். மேலும், ஒவ்வொரு மாதமும் கிட்டத்தட்ட இருபது நாட்கள் நான் நகரத்தைவிட்டு வெளியே, இந்த நாடு முழுவதும் சென்று கொண்டிருப்பேன். அந்த அளவுக்கு விடுமுறை எனக்கு கிடைக்காது. அப்படியிருந்தும் கூட, ஒவ்வொரு மாதத்திலும் எஞ்சியுள்ள அந்த பத்து நாட்களில் நான் மாணவர்களுக்கான அந்த பாடத்தை முடித்துவிடுவேன். நான் அவர்களிடம், "உங்களுக்கு ஏதாவது குறைகள் உள்ளதா?" என்று கேட்பேன்

அதற்கு அவர்கள், "இந்த சிறிய பாடத்திட்டத்திற்கு இரண்டு ஆண்டுகள் வீணாகின்ற அந்த உண்மையை நாங்கள் கண்டு கொண்டதற்கு, நாங்கள் உங்களுக்கு நன்றிக் கடன் பட்டிருக்கிறோம்," என்று கூறினார்கள். ஆனால், அதன் துணைவேந்தரோ மிகவும் கலக்கம் அடைந்தார். ஏனெனில், மீண்டும் மீண்டும் நான் பல்கலைக் கழகத்தில் இல்லாமல் இருப்பதை அவர் கண்டு கொண்டார்.

எனக்கே உரிய தந்திரங்களை நான் வைத்திருந்தேன். அந்த பல்கலைக் கழக வளாகத்தில் அநேக அழகான மரங்கள் இருந்தன. ஆனால், விநோதமான முறையில் எல்லா மரங்களும் பட்டுப்போய் விட்டன. அங்கு ஒரே ஒரு மரம் மட்டும் இன்னமும் பசுமையோடும், நிழலுடனும் இருந்தது. எனவே, நான் எனது வாகனத்தை அந்த மரத்தின் அமடியில் நிறுத்துவது வழக்கம். அந்த மரத்தின் அடியில் வேறு யாரும் காரை நிறுத்திவிடக் கூடாது என்று அறிந்திருந்தார்கள். ஒன்று இரண்டு முறை மக்கள் அங்கு அவர்களின் காரை நிறுத்துவதற்கு முயற்சி செய்தார்கள். ஆனால், நான் எனது மாணர்வகைள அழைத்து அந்தக் காரை வேறு இடத்திற்கு தள்ளிக் கொண்டு போய் நிறுத்தச் செய்துவிடுவேன். “அந்த கார் எங்கு வேண்டுமானாலும் போகட்டும். ஆனால் இந்த இடம் எனக்காக ஒதுக்கப்பட்டது,” என்று கூறுவேன். எனவே, நான் நகரத்தை விட்டு வெளியே போகும் போதெல்லாம், நான் எனது காரையும், ஓட்டுநரையும் மட்டும் அனுப்பிவிடுவேன். மேலும், துணைவேந்தர் அவரது ஜன்னல் வழியாக மரத்தின் அடியில் நிற்கும் எனது காரைப் பார்த்ததும், நான் பல்கலைக் கழகத்தில் இருப்பதாக எண்ணிக் கொண்டு திருப்தியாக இருப்பார்.

ஒருநாள், அவர் பல்கலைக் கழகத்தைச் சுற்றி வந்தார். அப்போது எனது வகுப்பறை காலியாக இருப்பதைப் பார்த்தார். அவர் எனது மாணவர்களிடம், “அவர் இங்கு தானே இருக்க வேண்டும்? அவரது கார் மரத்தின் அடியில் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறதே? உண்மையில் நான் சந்தேகப்பட்டேன். நான் சிலசமயம் அவரது சொற்பொழிவைப் படித்திருக்கிறேன். சிலசமயம் கல்கத்தாவிலும், சிலசமயம் அமிர்தசரஸிலும், சிலசமயம் மெட்ராஸில் அவரது சொற்பொழிவுகள் இருக்கும். ஆனால், அவரது கார் மட்டும் இங்கு இருப்பதைப் பார்த்து நான் ஆச்சரியமடைந்திருக்கிறேன்,” என்று கூறுவார்.

எனது காரை நானே ஓட்டுவது வழக்கம். ஆனால், நான் எனது ஓட்டுநரிடம், “இந்த காரை பத்திரமாகப் பார்த்துக் கொள். இந்த தோட்டத்தில் இரண்டு அல்லது மூன்று மணி நேரம் பொழுதைப் போக்கு. அதன்பிறகு அந்த காரை திரும்பவும் வீட்டிற்கு எடுத்துக் கொண்டு போய்விடு,” என்று கூறிவிடுவேன்.

அதற்கு அவன், “இது எதற்காக?” என்பான்.

நான் அவனிடம், “இதைப் பற்றி நீ கவலைப்படாதே. அது உனது பிரச்சனை அல்ல,” என்று கூறிவிடுவேன்.

எனவே, நான் மெட்ராஸில் இருந்து ஒருதடவை திரும்பி ஒருநாள் வந்த போது, துணைவேந்தர் என்னை அழைத்து என்னிடம், "நீங்களே உங்களுக்கு எஜமானாக இருப்பது போல் தெரிகிறது. நீங்கள் ஒருபோதும் விடுமுறை கேட்பதில்லை. நீங்கள் ஒருபோதும் என்னிடம் எதுவும் கூறுவதுமில்லை," என்றார்.

அதற்கு நான், "எனக்கு ஒரு துண்டுக் காகிதம் கொடுங்கள்," என்று கூறி, எனது பதவியை ராஜினாமா செய்தேன்.

உடனே அவர், "நீங்கள் என்ன செய்கிறீர்கள்?" என்று கேட்டார்.

அதற்கு நான், "இதுதான் எனது பதில். நான் வராததால் எனது மாணவர்கள் எந்த வகையிலாவது பாதிக்கப்பட்டார்களா? அவர்கள், அவர்களின் பாடத்திட்டங்கள் பூர்த்தி செய்யப்படவில்லை என்று உங்களிடம் சொன்னார்களா? அவர்களின் இரண்டு வருடங்களை வீணாக்குவது மிகவும் முட்டாள்தனமாது. அவர்கள் படிப்பு முடியும்வரை அவர்களுக்கு சொல்லிக் கொடுப்பது தான் எனது வேலை. அதைச் செய்வதற்கு நான் எத்தனை நாட்கள் எடுத்துக் கொள்கிறேன் என்பது ஒரு பொருட்டல்ல."

அன்று மாலை அவர் என்னுடைய வீட்டிற்கு வந்தார். அவர் என்னிடம், "எங்களை விட்டு போய்விடாதீர்கள்," என்று கேட்டுக் கொண்டார்.

அதற்கு நான், "என்ன நடக்க வேண்டுமோ, அது நடந்துவிட்டது. நான் எனது சான்றிதழ்களை எல்லாம் எரித்துவிட்டேன் என்கிற காரணத்திற்காக உங்களது பல்கலைக் கழகத்திற்கு என்னால் திரும்பவும் வர முடியாது. எனது கடந்த காலங்களை இணைக்கின்ற பாலங்களை நான் விரும்பவில்லை. எனக்கு ஒருபோதும் இந்த சான்றிதழ்கள் தேவையில்லை. இப்போது நான் ஒரு படிக்காதவன்," என்று பதில் கூறினேன்.

உடனே அவர், "இந்த சான்றிதழ்களைப் பற்றி நான் யாரிடமும் எதுவும் சொல்ல மாட்டேன்," என்றார். அதற்கு நான், "அது முக்கியமல்ல. உண்மையாகவே நான் ராஜினாமா செய்ய விரும்பினேன். ஆனால், அதற்காக நான் காத்திருந்தேன். அந்து செயலுக்கான காரணம் உங்களிடமிருந்துதான் வரவேண்டும், என்னிடமிருந்து வரக்கூடாது," என்றேன்.

எனது தந்தை வருத்தப்பட்டார்; எனது நண்பர்கள் வருத்தப்பட்டனர்; எனது மாணவர்கள் என்னிடம் வந்து, "உங்களது ராஜினாமாவை திரும்பப் பெறுங்கள்," என்று கூறினார்கள்.

நான் அவர்களிடம், "அது சாத்தியப்படாது. உங்களுக்கு இனிமேல் ஆசிரியராக இருக்கக் கூடிய தகுதி எனக்கில்லை," என்று கூறினேன்.

எனது தந்தை என்னிடம், "நீ ராஜினாமா செய்தாலும் கூட, உனது சான்றிதழ்களையெல்லாம் எரித்துவிட்டதில் என்ன நோக்கம் உள்ளது?" என்று கேட்டார்.

அதற்கு நான், "அவைகளை வைத்துக் கொண்டிருப்பதில் என்ன உள்ளது? அவைகளை என்னோடு வைத்திருப்பதால், எனக்குள் எங்கோ ஆழத்தில் இன்னமும் அங்கே ஆசை இருக்கும். ஒருவேளை, அது எனக்கு தேவைப்படும் என்று நான் அவற்றின் மீது பற்று கொண்டிருப்பேன். இப்போது நான் அந்த கல்விகளையெல்லாம் விட்டுவிட்டு சுதந்திரமாக இருக்கிறேன். அவைகள் எனக்கு எதையும் கொடுக்கவில்லை. அவைகள் சான்றிதழ்கள் அல்ல, அவைகள் காயங்கள். மேலும், நான் அந்தக் காயங்களையெல்லாம் என்னோடு சுமந்து கொண்டு செல்ல விரும்பவில்லை," என்று பதில் கூறினேன்.

இரண்டு ஆண்டுகள் கழித்து, அந்த துணைவேந்தர் வந்து என்னிடம், "எப்போதாவது ஒருமுறை நீங்கள் வந்து எங்களது மொத்த பல்கலைக் கழக மாணவர்களிடம் சொற்பொழிவு ஆற்றலாமே," என்றார். எனவே நானும் சென்றேன்.

அவர் என்னை அவரது அறைக்கு அழைத்துச் சென்றார். அங்கிருந்த ஜன்னல் வழியாகத்தான் எனது கார் நிற்பதை அவர் பார்ப்பதுண்டு. அவர் என்னிடம் "இது ஒரு விநோத நிகழ்ச்சியாக உள்ளது. நீங்கள் உங்களது காரை நிறுத்தும் அந்த ஒரு மரம் மட்டும்தான் பச்சை பசேல் என்று இருந்தது. இப்போது அந்த மரமும் பட்டுப் போய்விட்டது", என்றார்.

அதற்கு நான், "வாழ்க்கை என்பது புதிர் நிறைந்தது. ஒருவேளை அந்த மரம் என் மீத காதலில் விழுந்துவிட்டது போலும். ஏனெனில், ஒன்பது ஆண்டுகளாக என்னுடைய கார் அங்கே காத்துக் கொண்டிருந்தது. மேலும், நானும் அந்த மரத்தோடு மிகவும் நட்பு கொண்டுவிட்டேன். எனது காரை அந்த மரத்தின் அடியில் நிறுத்தி வைத்திருந்தது மட்டுமே கேள்வியல்ல. நான் எப்போதும் அந்த மரத்திற்கு நன்றியும் சொல்வதுண்டு. எப்போதாவது எனது கார் டிரைவர் என்னோடு காரின் பின்பக்கத்து இருக்கையில் இருக்கும் போது, அவன் என்னிடம், "நீங்கள் உண்மையிலேயே வேடிக்கையானவர் போல் தெரிகிறீர்கள். இந்த மரத்திற்கு நன்றி சொல்கிறீர்களே?" என்று கூறுவான்.

அதற்கு நான், "இந்த மரம் மிகவும் அன்பானது. இந்த வரிசையில் உள்ள மரங்களில் இது தான் அழகான மரம். இது குல்மார்க் மரம். அதன் பூக்கள் சிவப்பு நிறமானவை. வசந்தகாலம் வந்தவுடன், எங்கு பார்த்தாலும் பூக்கள் இருப்பதால் அந்த மரமே சிவப்பு நிறமாகத் தெரியும். அதே போன்ற மரங்கள் எல்லாம் பட்டுப் போய்விட்டன. ஆனால், இந்த மரம் மட்டும் என்னோடு ஒன்பது ஆண்டுகள் உயிரோடு இருந்தது. இப்போது வேறு யாராவது அங்கு தனது காரை நிறுத்தி வைத்திருக்கலாம். ஒருவேளை, அவர் அந்த மரத்திற்கு நன்றி கூற மறந்திருக்கலாம். அவர் ஒருபோதும் அந்த மரத்திற்கு தனது நன்றியைக் காட்டாமல் இருந்திருக்கலாம்," என்றேன்.

நீங்கள் கடந்த காலம் மற்றும் எதிர்காலம் ஆகியவற்றில் இருந்து விடுதலை பெற்றுவிட்ட அந்த நொடிப் பொழுதில் அந்த மரத்தின் அருகில் சும்மா உட்கார்ந்து கொண்டு, அந்த மரத்திடம் ஏதாவது விஷயத்தை மெதுவாகச் சொன்னால், விரைவில் அது உங்களுக்குப் பதில் அளிப்பதை அறிவீர்கள். ஆனால், அது பதில் அளிப்பது வார்த்தைகளில் இருக்காது. ஒருவேளை, அது உங்கள் மீது பூமாரி பொழியலாம். உங்களது முதுகுப்புறம் அந்த மரத்தினை தொட்டுக் கொண்டிருந்தால், நீங்கள் இதற்கு முன்பு பெற்றிராததொரு புதிய உணர்வினை இப்போது பெறுவீர்கள். அந்த மரம் அன்பினால் அதிர்வலைகளை அனுப்பும்.

துக்கப்படுகின்ற இந்த மனிதனைத தவிர, இந்த உலகளில் உள்ளதெல்லாம் அன்பால் நிறைந்தும், சுதந்திரத்தில் நிறைந்தும் உள்ளது. மேலும், அதற்கு உங்களைத் தவிர வேறு யாரும் காரணம் அல்ல. இப்படி உங்களை துக்கத்திற்கு உள்ளாக்குகின்ற அந்த விஷயங்களை மெதுவாக விட்டுவிடலாம் என்கிற கேள்விக்கே இடமில்லை. அநேகம் பேர் என்னிடம் வந்து, "நீங்கள் கூறுவதை நாங்கள் புரிந்து கொள்கிறோம். படிப்படியாக நாங்கள் எங்களது துக்கத்தை விட்டுவிடுகிறோம்," என்பார்கள். ஆனால், அடிமைத்தனம் என்பது ஒருபோதும் படிப்படியாக விடப்படுவதில்லை. ஒன்று, நீங்கள் புரிந்து கொண்டால், உடனே விடுதலை அடைவீர்கள் அல்லது நீங்கள் புரிந்து கொள்ளாமல் வெறுமனே புரிந்து கொண்டது போல் பாசாங்கு செய்வீர்கள்.

விடுதலை என்பதும் பகுதி பகுதியாக வராது. அல்லது, அடிமைத்தனம் என்பதும் பகுதி பகுதியாகவும் போகாது. நீங்கள் ஒரு ஒளிவிளக்கை இருட்டு இறைக்குள் கொண்டு வரும் போது, அங்கு

நடப்பதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? அங்கே இருள் கொஞ்சம் கொஞ்சமாகவா போகிறது? முதலில் கொஞ்சம், அதன்பிறகு அடுத்த பகுதி என்று ஒரு வரிசையில் நின்று கொண்டா அந்த அறை விட்டு வெளியே போகிறது? அல்லது, வெளிச்சம் என்பது பகுதி பகுதியாகவா, அதாவது முதலில் கொஞ்ச வெளிச்சம், அதன்பிறகு அதற்கு மேல் கொஞ்ச வெளிச்சம், இப்படியா வருகிறது? கிடையாது. நீங்கள் விளக்கைக் கொண்டு வந்த அந்த நொடிப் பொழுதிலேயே அங்கே இருள் இருப்பதில்லை.

விடுதலை என்றால் என்ன என்று நீங்கள் புரிந்து கொள்கின்ற அந்த புரிதலிலேயே நீங்கள் விடுதலை பெற்றுவிடுகிறீர்கள். அதில் நேரம், அல்லது படிப்படியாக என்கிற கேள்விக்கே இடமில்லை.

ஒட்டுமொத்தமாக, உங்களது அடிமைச் சங்கிலிகளை விட்டு விடுவதைத் தவிர, வேறு வழியில்லை. அந்தச் சங்கிலிகளையெல்லாம் நீங்கள் உங்களது குழந்தைப் பருவத்திலிருந்தே உங்களைச் சுற்றி உருவாக்கி விட்டீர்கள். ஒருவேளை, கீழ்ப்படிதல் என்ற பெயரில், உங்களது பெற்றோர்கள் மீதான அன்பு என்ற பெயரில், உங்களது மத குருக்களிடம் விசுவாசம் என்கிற பெயரில், உங்களது ஆசிரியர்களிடம் மரியாதை என்கிற பெயரில் இப்படி அநேக நல்ல பெயர்களால் அடிமைச் சங்கிலிகளை உருவாக்கிவிட்டீர்கள். எனவே, மேலே ஒட்டப்பட்டுள்ள அடையாளச் சீட்டை எடுத்துவிட்டு, அதனுள் என்ன பொருள் உள்ளது என்று எப்போதும் பாருங்கள். இந்த அடிமைத்தனமே அழகான பெயர்களில் ஒவ்வொரு குழந்தைக்கும் கொடுக்கப்படுவதைக் கண்டு நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். எனவே, நீங்கள் பற்றுக் கொண்டிருப்பது அந்த அடிமைத்தனத்தில் அல்ல. அதற்கு கொடுக்கப்பட்டுள்ள அந்த அடையாளத்தின் மீதுதான் நீங்கள் பற்றுக் கொண்டிருக்கிறீர்கள் என்பதை நீங்கள் கண்டு கொள்ளாத வரையில், உங்களால் அதை விட்டுவிடுவது கடினமானதாக ஆகிவிடும்.

என் தந்தையோடு அது இடைவிடாத போராட்டமாக இருந்தது. அவர் பாசமுள்ளவர் தான். புரிந்து கொள்ளக் கூடியவர் தான். ஆனாலும் கூட, அவர் என்னிடம், "நீ இதைச் செய்தாக வேண்டும்," என்று கூறுவார். ஆனால், அதற்குப் பதிலாக அவரிடம் எப்போதும், "நீ தான் இதைச் செய்ய வேண்டம் என்று நீங்கள் என்னிடம் சொல்லாதீர்கள். நீங்கள் எனக்கு எடுத்துக்கூற மட்டுமே செய்யலாம். அதாவது, 'நீ விரும்பினால் இதை நீ செய்யலர்ம். நீ விரும்பவில்லையென்றால் நீ சுதந்திரமாக இருக்கலாம்,' என்று அறிவுரை மட்டுமே கூறலாம். அடிப்படையில்

முடிவு என்னுடையதாக இருக்க வேண்டுமே தவிர, நீங்கள் முடிவெடுக்கக் கூடாது. நான் சத்தியத்துக்கு கீழ்படிபவன், விடுதலைக்கு கீழ்படிபவன். நான் சத்தியத்திற்காக, விடுதலைக்காக, அன்புக்காக எதையும் தியாகம் செய்வேன். ஆனால், அடிமைத்தனத்திற்காக அல்ல. நீங்கள் கண்டிப்பாக செய்ய வேண்டும் என்று கூறுவதில் அடிமைத்தனத்தின் துர்நாற்றம் வீசுகிறது," என்று கூறுவேன்.

எனவே, நான் கீழ்படிகின்றவனும் அல்ல அல்லது கீழ்படியாதவனும் அல்ல என்பதை அவர் விரைவில் புரிந்து கொண்டார். "நான் செய்யமாட்டேன்," என்று கூறுவதில்லை. நான் "கண்டிப்பாக செய்ய வேண்டும் என்பதை திரும்பப் பெற்றுக் கொள்ளுங்கள்," என்று தான் கூறுவேன். என்னால் முடியும் அல்லது முடியாது என்று கூறுவதற்கு எனக்கு இடம் கொடுங்கள். மேலும், நான் முடியாது என்று கூறினாலும், அதற்காக கவலைப்படாதீர்கள்.

இது என்னுடைய வாழ்க்கை. இதை நான் தான் வாழ்ந்தாக வேண்டும். மேலும், அதை நான் எனக்கே உரித்தான எனது சொந்த வழியில் வாழ்வதற்கு எனக்கு எல்லா உரிமையும் உள்ளது. நீங்கள் அதிக அனுபவம் உள்ளவர். நீங்கள் எடுத்துக் கூறலாம். நீங்கள் அறிவுரை கூறலாம். ஆனால், கட்டளைகளை நான் யாரிடமிருந்தும் ஏற்றுக் கொள்ளப் போவதில்லை. அது என்ன விலையானாலும், என்ன விளைவுகள் வந்தாலும், கட்டளைகளை நான் யாரிடமிருந்தும் ஏற்றுக் கொள்ள மாட்டேன்," என்று கூறுவேன்.

கொஞ்சம் கொஞ்சமாக அவர், "கண்டிப்பாக," என்கிறதை விட்டுவிட்டார். அவர் என்னிடம், "இங்கே இந்த பிரச்சனை உள்ளது. உனக்கு சரி என்று தோன்றினால், நீ எனக்கு உதவி செய்; நீ உதவி செய்ய வேண்டாம் என்று நினைத்தாலும் சரி. அது உனது முடிவாக இருக்கட்டும்," என்று கூறுவார்.

அதற்கு நான், "உண்மையான அன்பு என்பது இப்படித் தான் இருக்க வேண்டும்," என்பேன்.

விடுதலை என்று நீங்கள் அழைப்பது என்ன? உங்களது விடுதலைகளில் பெரும்பாலானவை அரசியல், பொருளாதாரம், இப்படி வெளி உலக விடுதலை சம்பந்தப்பட்டவை; அவைகள் உங்களது கைகளில் இல்லை. அவைகள் உங்களுக்குக் கொடுக்கப்பட்டவை. அதைத் திரும்ப பெற்றுவிட முடியும். உங்களுக்குள் வளர்ச்சி அடைந்துள்ள தன்னுணர்வைத் தான் உங்களிடமிருந்து வெளியே எடுக்க முடியாது.

மனிதனின் வாழ்க்கை சிறியது. அதைக் குறித்து ஒரு முடிவோடு இருங்கள். நீங்கள் உங்களது ஆன்மாவில் விடுதலை அடைந்தவராக இருக்க வேண்டும். ஏனெனில், இங்கே இருக்கின்ற விடுதலை அது ஒன்று மட்டும் தான் ஆகும்.

மனிதன் ஒரு ஆன்மாவோடு பிறக்கிறான். ஆனால், இந்த 'நான்' என்பதோடு பிறப்பதில்லை.

Soul (ஆன்மா), மற்றும் Self (நான்) என்னும் இரண்டு வார்த்தைகளும் அகராதியில் ஒன்று போன்றவை என்று கூறினாலும் கூட, அது உண்மையல்ல. ஆன்மா என்பதை நீங்கள் உங்களோடு கொண்டு வருகிறீர்கள். ஆனால், இந்த 'நான்' என்பதை இந்த சமுதாயம் அதற்கு பதிலாக உருவாக்கிவிட்டது. ஏனெனில், எந்த ஒரு அடையாளமும் இல்லாமல் இருக்க வேண்டிய அவசியம் உங்களுக்கு இருக்காது. ஏனெனில், எந்த ஒரு அடையாளமும் இல்லாமல் இருக்க வேண்டிய அவசியம் உங்களுக்கு இருக்காது. ஏனெனில், ஆன்மாவின் தேடுதலுக்கான புனிதப் பயணம் நீண்ட வருடங்களைக் கொண்டதாகும். அதுவரை நீங்கள் தேடிக் கண்டுபிடித்துக் கொண்டே போக வேண்டும். மேலும், அப்படி நீண்ட காலம் போகும் போது உங்களுக்கு ஒரு பெயரில்லாமை, ஒரு வெறுமை, ஒன்றுமில்லாத தன்மை என்று எதுவுவாக இருக்க முடியாது.

மனிதனின் வாழ்க்கை சிறியது. அதைக் குறித்து ஒரு முடிவோடு இருங்கள். நீங்கள் உங்களது ஆன்மாவில் விடுதலை அடைந்தவராக இருக்க வேண்டும். ஏனெனில், இங்கே இருக்கின்ற விடுதலை அது ஒன்று மட்டும் தான் ஆகும்.

இப்படி இந்த 'நான்' என்பதை உருவாக்கியதன் நோக்கம், அன்பினால் ஆனது. எனவே, ஆரம்பத்திலிருந்தே நீங்கள் யார் என்கிற உணர்வைப்பெற ஆரம்பித்து விடுகிறீர்கள்; இல்லையெனில், நீங்கள் வாழ்வது எப்படி? உங்களை எப்படி அழைப்பது? எனவே, இந்த 'நான்' என்பதை உருவாக்கிய மக்கள் முழுவதும் நல்ல நோக்கத்தில் தான் உருவாக்கிவிட்டார்கள். ஆனால், அவர்களுக்கும் கூட இந்த ஆன்மா என்பதைப் பற்றி எந்த கருத்தும் இல்லாததால், அவர்கள் இப்படிப்பட்டதொரு பொய்யான 'நான்' என்பதை உருவாக்கிவிட்டார்கள். மேலும், அவர்கள் அப்படி உருவாக்கிய அந்த

'நான்' என்பதோடேயே இறந்தும் போய்விட்டார்கள். இந்த இயற்கை தங்களை என்னவாகப் படைத்துள்ளது, எதற்காகப் படைத்துள்ளது என்பதை அவர்கள் ஒருபோதும் அறிந்திருக்கவில்லை.

உங்களது ஆன்மா இந்த இயற்கையின் ஒரு பகுதி. ஆனால், உங்களது இந்த 'நான்' என்பது ஒரு சமூக நிறுவனம். எனவே, இவற்றிற்கு இடையே உள்ள வேறுபாட்டை நிரப்பிக் கொள்ள முடியாது என்பதை முதல் விஷயமாக நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். உண்மையிலேயே, நீங்கள் யார் என்பதை தேடி அறிந்து கொள்ள விரும்பினால், நீங்கள் உங்களுக்குச் சொந்தமான இந்த 'நான்' என்பதை அழித்துவிடுகின்ற தலைகீழ் மாற்றத்தின் மூலமாக மட்டுமே முடியும். இப்படி இந்த 'நான்' என்பதை அழிக்காமல், எதிர்பாராத விதத்தில் நீங்கள் உங்களது ஆன்மாவைக் கண்டு கொண்டால், நீங்கள் ஒருவராக இருக்க முடியாது. இதைத் தான் மன இயல் வல்லுநர்கள் 'மனச்சிதைவு' என்று அழைக்கின்றனர். நீங்கள் பிளவுபட்டு இருப்பீர்கள். சில வேளைகளில் நீங்கள் 'நான்' என்பது போன்று நடந்து கொள்வீர்கள். சிலசமயம் நீங்கள் ஒரு ஆன்மா போன்று நடந்து கொள்வீர்கள். நீங்கள் எப்போதும் ஒருவித படபடப்பில் இருப்பீர்கள். உங்களது வாழ்க்கையானது வெறுமனே ஆழ்ந்த துக்கமும், கலவையும் நிறைந்ததாக இருக்கும். மேலும், இப்படிப்பட்டதொரு வாழ்க்கையை வாழ்வது சாத்தியமில்லாமல் போய்விடும். அதனால் தான் இந்த சமுதாயம், இந்த கல்விமுறை, பெற்றோர்கள், மத குருக்கள், இப்படி உங்களைச் சுற்றியுள்ள அனைவரும் எல்லா வழிகளிலும் உங்களிடம் மிகவும் பலம் வாய்ந்த இந்த 'நான்' என்பதை உருவாக்க முயற்சி செய்வதால், நீங்கள் உங்களுக்குள் மறைந்திருக்கும் அந்த ஆத்மாவைப் பற்றிய விழிப்புணர்வு கொள்வதில்லை.

அந்தப் பயணம் நெடியது அல்ல. ஆனால், மிகவும் கடினமானது. 'நான்' என்பது லேசான விஷயம் அல்ல. அது மிகவும் சிக்கலானது. நீங்கள் ஒரு பேராசிரியராக இருக்கலாம், நீங்கள் ஒரு டாக்டராக, ஒரு வக்கீலாக, ஒரு ஜனாதிபதியாக, அழகானவராக, அறிவுள்ளவராக, செல்வந்தராக, லட்சியவாதிகயாகவும் இருக்கலாம். ஆனால், இந்தப் பரிமாணங்கள் எல்லாமே இந்த 'நான்' என்பதைச் சார்ந்தது. இந்த 'நான்' என்பது மேலும் மேலும் பணம், அதிகாரம், புகழ், மரியாதை என்பதை சேர்த்துக் கொண்டே போகும். அதன் பேராசைகள் நிறைவேறாதவை. இப்படி நீங்கள் அடுக்கு அடுக்காக இந்த 'நான்' என்பதை உருவாக்கிக் கொண்டே போகிறீர்கள்.

இது தான் மனிதனின் துக்கம், அடிப்படையான துக்கம். மனிதன் 'தான்' யார் என்பதை அறியவில்லை. ஆனாலும் கூட, அவன் தான் இதுவாக இருப்பதாகவும், தான் அதுவாக இருப்பதாகவும் நம்பிக் கொண்டே போகிறான். நீங்கள் ஒரு டாக்டர் என்றால் அது உங்களது வேலை. அது உங்களது உண்மை நிலை அல்ல. நீங்கள் ஒரு ஜனாதிபதி என்றால் அது ஒரு வேலை. யாராவது ஒருவரின் வேலையானது செருப்பு தைப்பதாக இருப்பதைப் போன்று அது உங்களது லேையாக உள்ளது. செருப்பு தைப்பவரும் சரி, அல்லது ஜனாதிபதியும் சரி, இருவரும் தங்களின் உண்மையான ஆன்மாவை அறிந்தவர்கள் இல்லை. பெற்றோர்கள் ஆரம்பத்திலிருந்தே, முதல் நாளில் இருந்தே ஆரம்பித்து விடுகிறார்கள். இது ஒரு பொய்யான நான்தான். அல்லது நீங்கள். இதை எப்படி வேண்டுமானாலும் அழைத்துக் கொள்ளுங்கள். ஆனால், இதுதான் கிட்டத்தட்ட உங்களது உண்மை நிலை போல் ஆகிவிட்டது. மேலும், உண்மையான நிலை மறந்து போய்விட்டது.

'Sin' (பாவம்) என்கிற ஆங்கில வார்த்தை மிகவும் சிறப்பானது. கிறிஸ்தவர்கள் அதை உபயோகிக்கின்ற அர்த்தத்தில் அல்ல, இந்த உலகம் முழுவதும் அறியப்படுகின்ற அர்த்தத்தில் அல்ல, ஆனால் இந்த வார்த்தையின் மூலத்தை பார்த்தால், அது முற்றிலும் வேறுபட்ட அர்த்தமுடையதாக இருக்கும். அதற்கு 'மறந்துவிடுதல்' என்று அர்த்தமாகும். பாவம் என்பதற்கும், நீங்கள் செய்கின்ற காரியங்களுக்கும் சம்பந்தமில்லை. நீங்கள் மறந்து போய்விட்டதொரு உண்மை நிலைக்கும் அதற்குமே தான் சம்பந்தம் உள்ளது.

நீங்கள் உங்களது உண்மை நிலையை மறந்துவிட்டாலும், நீங்கள் அதற்குப் பதிலாக பொய்யான தன்மையுடன் வாழ்வதாலும், உங்களது எல்லா செயல்களும் பொய்யானவையாகவே ஆகிவிட்டன. நீங்கள் புன்சிரிப்பு சிரிக்கிறீர்கள். ஆனால், அந்த புன்முறுவல் உங்களது உள்ளத்தில் இருந்து வரவில்லை. நீங்கள் அழுகிறீர்கள், கதறுகிறீர்கள். ஆனால், அந்தக் கண்ணீர் மேலேழுந்தவாரியாக உள்ளது. நீங்கள் அன்பு செலுத்துபவர். ஆனால், அந்த அன்பின் வேர்கள் உங்களது உயிரில் இல்லை. உங்களின் எல்லாச் செயல்களும் தூக்கத்தில் நடக்கின்ற ஒருவன் செய்கின்ற செயல் போன்று உள்ளது.

இது நியூயார்க் நகரில் நடந்து. அங்கு தான் அநேகம் பேர் தூக்கத்தில் நடக்கிறார்கள். சொன்னால் நம்ப மாட்டீர்கள். அங்கு ஜனத்தொகையில் 10 சதவீதம் பேர் தூக்கத்தில் நடப்பவர்கள். அவர்கள் இரவில் எழுந்திருப்பார்கள். குளிர்சாதனப் பெட்டியைத் திறந்து அதில்,

டாக்டர் சாப்பிடக்கூடாது என்று கூறிய பொருட்களை எடுத்துச் சாப்பிடுவார்கள். ஏனெனில், அவர்கள் மேலும்மேலும் எடை கூடிக் கொண்டே போவதால், அவர்கள் தங்களின் மரணத்தை தாங்களே உருவாக்கி கொள்கிறார்கள். மெல்ல மெல்ல தற்கொலை செய்து கொள்கிறார்கள். பகல் பொழுதில் அவர்கள் தங்களின் ஆசைகளை எப்படியோ அடக்கி சமாளிக்கின்றனர். ஆனால், இரவில் அவர்களின் தன்னுணர்வுள்ள மனம் ஆழ்ந்து தூங்கும் போது அவர்களது தன்னுணர்வற்ற மனம் இந்த சந்தர்ப்பத்தை தவற விடுவதில்லை. அதற்கு வழி தெரியும். அப்போது அவர்கள் கண்களைத் திறந்து கொண்டே நடப்பார்கள், இருட்டிலும்கூட அவர்கள் தடுமாறுவதில்லை.

“நாங்கள் உங்களது உணவைக் குறைத்துவிட்டோம். நாங்கள் உங்களுக்கு இனிப்புகளைக் கொடுப்பதில்லை. என்றாலும்கூட, நீங்கள் குண்டாகி வருகிறீர்களே,” என்று அவர்களது குடும்பத்தினர் கவலைப்படுவார்கள். டாக்டரும் கவலைப்படுவார். அவர்களும் கவலைப்படுவார்கள். அதேசமயம், குளிர்சாதனப் பெட்டியில் வைக்கின்ற பொருட்கள் மாயமாவதையும் அவர்கள் அறிவார்கள். மேலும், நீங்கள் அந்த ஆள் தான் அதற்கு பொறுப்பாளி என்று பிடிக்கவும் முடியாது. ஏனெனில், அவருக்கு காலையில் எதுவுமே நினைவில் இருக்காது.

நியூயார்க் இந்த விஷயத்தில் உலகப் புகழ் பெற்றுவிட்டது. இந்த ஆள் அங்குள்ள ஒரு ஐம்பது மாடிக் கட்டிடத்தில் கடைசி மாடியில் வசித்து வந்தார். இரவில் அவர் எழுந்து மொட்டை மாடிக்குச் சென்று அங்கிருந்து அந்த வீட்டின் அருகில் உள்ள மற்றொரு வீட்டில் குதித்து விடுவார். ஆனால் சுயநினைவுடன் உள்ள ஒருவர், தைரியம் உள்ள ஒருவர் அந்த அடுத்த வீட்டின் மீது குதிப்பதற்கு தயங்குவார்கள். ஏனெனில், அடுத்த வீடு அந்த அளவு தூரத்தில் இருந்தது. ஆனால், இந்த மனிதருக்கோ அது அவரது தினசரி வேலை ஆகிவிட்டது.

விரைவில் இது அங்குள்ள மக்களுக்கு தெரிய ஆரம்பித்துவிட்டது. எனவே, அவர்கள் இரவில் எல்லோரும் கீழே கூடி நின்று கொண்டு இதைப் பார்க்க ஆரம்பித்து விட்டார்கள். ஏனெனில் இது கிட்டத்தட்ட ஒரு அதிசயம் போல் ஆகிவிட்டது. இப்படி கூட்டம் நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டே போனது. மேலும் ஒருநாள் அந்த மனிதன் குதிக்க போகும் போது, அங்கு கூடியிருந்த கூட்டம் இவன் பெயரைச் சொல்லி ‘வாழ்க’ என்று கோஷம் போட்டது. அந்த கோஷம் இவனை விழிப்படையச் செய்துவிட்டது. ஆனால், அவன் கொஞ்சம் தாமதமாகிவிட்டான். அவன் ஏற்கனவே குதித்துவிட்டான். ஒவ்வொரு

நாளும் இதுவரை அவன் அடுத்த வீட்டின் மொட்டை மாடிக்குச் சென்று, அதன்பிறகு திரும்பி வந்து, திரும்பவும் தனது அறைக்கு போய் தூங்குவான் ... ... ஆனால், இப்போது அவன் விழித்துவிட்டதால், தான் என்ன செய்கிறோம் என்பதை அவன் பார்த்துவிட்டான். ஏற்கனவே அவன் குதிக்க ஆரம்பித்து விட்டதால், அவன் அந்த ஐம்பதாவது மாடியில் இருந்து கீழே விழுந்து, அவனது உடல் அங்குள்ள சாலையில் துண்டு துண்டாகச் சிதறிப் போயிற்று.

உங்களது பொய்யான 'நான்' என்பது உங்களது தூக்க நிலை

ஆன்மா என்பது உங்களது விழிப்பு நிலை.

மேலும், இந்த 'நான்' என்பதை வளர்ப்பதற்கு, இந்த சமுதாயம் சில குறிப்பிட்ட விதிமுறைகளையும், கட்டுப்பாடுகளையும் கொடுத்துள்ளது. உதாரணமாக, ஒவ்வொரு சிறு குழந்தையும் லட்சியவாதிகளாக ஆக்கப்படுகிறன்ற. யாரும் யாரிடமும், "நீ நீயாக இரு," என்று கூறுவதில்லை. ஒவ்வொருவரும் அவனுக்கு மிகப்பெரிய லட்சியங்களை, அதாவது ஒரு கௌதம புத்தர் போன்று ஆகிவிடு, அல்லது ஒரு இயேசு கிறிஸ்துவாக ஆகிவிடு அல்லது ஒரு ஆல்பர்ட் ஐன்ஸ்டீனாக ஆகிவிடு ... ... இப்படி, எப்படியாகிலும் வேறு யாராகவாவது ஆகிவிடு என்றே கூறுகின்றனர். நீ நீயாக ஒருபோதும் இருக்காதே. நீ ஒன்றுக்கும் உதவாதவன். உங்களது 'நான்' என்பதற்கு அநேக பட்டங்களும், அநேக அங்கீகாரங்களும், மரியாதை தரும் தேவை. அவைகள் தான் அதற்கு ஊட்டமளிப்பவை. அது, அவைகளால் தான் உயிர் வாழ்கிறது; மேலும், இந்த உலகினைத் துறக்கின்ற சந்நியாசிகளும், துறவிகளும் கூட தங்களது இந்த 'நான்' என்பதைத் துறப்பதில்லை. இந்த உலகத்தை துறப்பது சுலபம். ஆனால், இந்த 'நான்' என்பதை துறப்பது மிகவும் கடினம். ஏனெனில், உங்களுக்கு இதைத்தவிர வேறு எதுவும் தெரியாது. உங்களுக்கு, உங்களது தொழில் தெரியும், உங்களுக்கு, உங்களது கல்வி தெரியும், உங்களுக்கு, உங்களின் பெயர் தெரியும். மேலும், நீங்கள் ஒரு பெயரும் கூட இல்லாமல் இந்த உலகிற்கு வந்தீர்கள் என்பதையும், நீங்கள் முற்றிலும் அறிவீர்கள். நீங்கள் ஒரு தபுலா ரஸா போன்று வந்திருக்கிறீர்கள். உங்கள் மீது எதுவும் எழுதப்படவில்லை. ஆனால், உங்களது பெற்றோர்களும், உங்களது ஆசிரியர்களும், உங்களது மத குருக்களும் உங்கள் மீது எல்லா இடத்திலும் எழுத ஆரம்பித்துவிட்டார்கள்.

நீங்கள், இந்த 'நான்' என்பதை நம்பிக் கொண்டு, உங்களது வாழ்க்கை முழுவதும் இருக்கிறீர்கள். மேலும், இது உங்கள் மனதைத்

தொடுவதாக இருக்கும். ஏனெனில், இது மிகவும் மெல்லியது. மெல்லியது என்றால், இது பொய்யானது என்று அர்த்தம். அதனால் தான், ஆணவன் மிக்க மக்கள் உங்கள் மனதைக் கவர்கிறார்கள்.

நான், பல்கலைக் கழகத்தில் ஆசிரியராக இருந்த போது, காலையில் நடைப்பயணம் போவது வழக்கம். அவர் யார் என்று எனக்குத் தெரியாது. ஆனால், அவர் வயதானவர். மேலும், அவர் வயதானவர் என்பதால், அவருக்கு, "காலை வணக்கம்," கூறுவதுண்டு. மேலும், அந்த அதிகாலைப் பொழுதில், காலை மூன்று மணிக்கு நாங்கள் இரண்டு பேர் மட்டுமே செல்வோம். ஒருநாள், நான் அவருக்கு, "காலை வணக்கம்," சொல்வதற்கு மறந்துவிட்டேன். உடனே அவர், "என்னப்பா, நீ மறந்துவிட்டாயா?" என்று கேட்டார்.

அதற்கு நான், "இது விநோதமாக உள்ளது! உங்களை எனக்குத் தெரியாது. நீங்கள் எனது தாத்தாவைப் போன்று மிகவும் வயதானவராக இருந்ததால், உங்கள் மீது மரியாதை நிமித்தமாக காலை வணக்கம் கூறினேன். ஆனால், இதை நான் தினந்தோறும் செய்ய வேண்டும் என்கிற ஒப்பந்தம் கிடையாது," என்றேன். அவர், அதை கேட்டுப் பெற்றுக் கொண்டார். ஏனெனில், அது அவரது அந்த 'நான்' என்பதில் ஒரு குறிப்பிட்ட பகுதியை திருப்திப்படுத்துவதாக இருந்தது. எனக்கு, அவர் யார் என்று தெரியாது. ஆனால், அவர் என்னைப் பற்றி ஒவ்வொன்றையும் தெரிந்து வைத்திருந்தார். மேலும், நான் அவருக்கு, "காலை வணக்கம்," சொல்லாமல் போனது அவரைக் காயப்படுத்திவிட்டது.

நான் அவரிடம், "நான் இதை மீண்டும் உங்களுக்கு சொல்ல மாட்டேன். அல்லது, எந்த வயதானவருக்கும் சொல்ல மாட்டேன். மேலும், மரியாதை கொடுப்பது என்பதற்காக நான் உங்களது மனதை விஷமாக்கிவிட்டேன்," என்று கூறினேன்.

நீங்கள் இதைப்பற்றி எப்போதாவது சிந்தித்ததுண்டா? இந்த உலகிற்கு நீங்கள் பெயர் இல்லாமல் தான் வந்தீர்கள். ஆனால், யாராவது உங்களது பெயருக்கு எதிராக ஏதாவது சொல்லி விட்டால் போதும், நீங்கள் இந்த உலகிற்குப் பெயர் இல்லாமல் தான் வந்தீர்கள் என்பதைக் கூட சிந்திக்காமலும், இந்தப் பெயர் என்பது ஒரு பொய்யான அடையாளம் என்பதைச் சிந்திக்காமலும், அவரோடு சண்டை போடத் தயாராகியிருக்கிறீர்கள். உங்களுக்கு எந்தப் பெயரும் கிடையாது. 'பெயரில்லாமை' தான் உங்களது உண்மையான நிலை.

இந்த உலகினைத் துறந்தவர்கள் புனிதர்களாக வழிபடப்படுகிறார்கள். ஆனால், அவர்களது 'நான்' என்னும் தன்முனைப்பானது, முன்பு இருந்ததைவிடவும் கண்ணுக்குத் தெரியாத வகையில், பலம் வாய்ந்ததாக உள்ளது என்பதை யாரும் காண்பதில்லை.

நான் கேள்விப்பட்டது இது :

மலைக்காட்டினுள் மூன்று கிறிஸ்தவ துறவியர் மடங்கள் இருந்தன. ஒருநாள், ஏதேச்சையாக அந்த மூன்று மடத்திலிருந்தும் ஒவ்வொருவராக மூன்று பேர் சாலையில் சந்தித்தனர். அவர்கள், நகரத்தில் இருந்து வந்ததால், மிகவும் களைப்பாக இருந்தனர். எனவே, அவர்கள் ஒருமரத்தின் அடியில் இளைப்பாறினார்கள். முதல் துறவி மற்றவர்களைப் பார்த்து, "எனது மடத்தைப் பற்றி நான் பெருமையடைகிறேன். உங்களது மடத்தில் உள்ளவர்களைப் போன்று நாங்கள் அறிவுஜீவிகளாக இல்லாமல் இருக்கலாம். ஆனால், தவவாழ்க்கையைப் பொருத்தமட்டில், நீங்கள் எங்களோடு போட்டி போட முடியாது," என்றார்.

இரண்டாவது துறவி சிரித்துவிட்டு, 'தவ வாழ்க்கையை எல்லாம் விட்டுவிடுங்கள். தவ வாழ்க்கை என்பது உங்களது உடலை துன்புறுத்திக் கொள்வதைத் தவிர, வேறு ஒன்றும் இல்லை. உண்மையான விஷயம் என்னவென்றால், பழைமை வாய்ந்த புனித சாஸ்திரங்களில் உள்ள அறிவுதான் உண்மையானது. அதில், எங்களோடு யாரும் போட்டி போட முடியாது. எங்களது மடம் மிகவும் பழைமை வாய்ந்தது. மேலும், நாங்கள் எல்லாப் புனித நூல்களையும் வைத்திருக்கிறோம். எனவே, எங்களது மக்கள் மிகவும் அறிவுஜீவிகள். தவ வாழ்க்கையை வைத்துக் கொண்டு என்ன செய்வது? நீங்கள் உண்ணா நோன்பு இருக்கிறீர்கள், இரவில் நீங்கள் சாப்பிடுவதில்லை. மேலும், ஒரு நாளைக்கு நீங்கள் ஒருமுறை தான் சாப்பிடுகிறீர்கள். என்ன துணிச்சல் இது? இந்த விஷயங்களையெல்லாம் ஒரு முட்டாள் செய்துவிடுவானே. ஆனால், நீங்கள் பெற்ற ஞானம் என்ன?" என்று கேட்டார்.

மூன்றாவது துறவி அமைதியாக கேட்டுக் கொண்டிருந்தார். அவர், "நீங்கள் இருவர் கூறுவதும் சரியானதாக இருக்கலாம். ஒருவர் தங்களது உடலைத் தியாகம் செய்து, மிகவும் கஷ்டப்பட்டு வாழலாம்; அடுத்தவர், தனது மக்கள் அனைவரும் மிகப்பெரிய அறிவாளிகள் என்பதும் சரியாக இருக்கலாம்," என்றார்.

உடனே மற்ற இருவரும் அவரிடம், "உங்களைப் பற்றியும் உங்களது மடத்தைப் பற்றியும் கூற முடியுமா?" என்றனர்.

அதற்கு அவர், "என்னைப் பற்றியும், எனது மடத்தைப் பற்றியுமா கேட்கிறீர்கள்? நாங்கள் தான் பணிவுடமையில் உச்சத்தில் இருப்பவர்கள்," என்றார்.

பணிவுடமையில் முதலாவதாக இருப்பவர்கள்! இது மிகவும் கடினமானது. இப்போது அவர்கள் வளர்ந்துவிட்டார்கள். அவர்களது 'நான்' என்பது ஒரு மத ஆடை, அவ்வளவு தான். அது மிகவும் பலம் வாய்ந்ததாக ஆகிவிட்டது. அதனால் தான், பாவிகள் கூட வாழ்க்கையில் முடிவான கரையை அடைந்துவிடுவார்கள். ஆனால், புண்ணியம் செய்தவர்களால் அடைய முடியாது என்று நான் கூறுகிறேன். ஏனெனில், பாவி ஒருவனுக்கு அவன் தவ வாழ்க்கை வாழ்கிறானா அல்லது அவன் அறிவுஜீவியா, அல்லது அவன் பணிவானவனா என்பது தெரியாது. ஒன்றும் தெரியாத ஒரு சாதாரண மனிதன் தான் அவன். ஒருவேளை, அவன் மிகவும் சமயப்பற்று உள்ளவனாக இருக்கலாம். ஏனெனில், அவனிடம் இந்த 'நான்' என்பது குறைந்து, அவன் ஆன்மாவை நெருங்கி வருகிறான்.

உண்மையான விடுதலை என்பது, அரசியல் விடுதலையும் அல்ல பொருளாதார விடுதலையும் அல்ல. உண்மையான விடுதலை என்பது, ஆன்மீக விடுதலை தான். அது அப்படி இல்லையென்றால், ராமகிருஷ்ணர் பின்னாளில் எப்படி ஆனாரோ, அதாவது தனக்குத் தானே ஒளிவிளக்காக ஆனாரோ, அதே போன்று ஆகியிருக்க முடியாது. ஏனெனில், அந்த காலக்கட்டத்தில் இந்தியாவானது பிரிட்டிஷ் நாட்டினரின் அடிமைத்தனத்தில் இருந்தது. அதன் பிறகு ரமண மகரிஷி அவர்கள் அப்படிப்பட்டதொரு அமைதி நிறைந்தவராக, வரம் நிறைந்தவராக, புகழ் பெற்றவராக இருந்திருக்க முடியாது. ஏனெனில், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் இன்னமும் இந்த நாட்டை அடிமைப்படுத்தியிருந்தது.

ஆன்மீக விடுதலையை யாரும் தொடக்கூட முடியாது.

உங்களின் இந்த 'நான்' என்பது அடிமைப்படுத்தப் படலாம். ஆனால், உங்களது ஆன்மாவை அடிமைப்படுத்த இயலாது. உங்கள் இந்த 'நான்' என்பதை விற்பனை செய்ய முடியும். ஆனால், உங்களது ஆன்மாவை விற்பனை செய்ய முடியாது. உண்மையான விடுதலை என்பது என்ன என்று நீங்கள் அறிய விரும்பினால், உங்களது இந்த 'நான்' என்பதன் பகுதிகளை விட்டுவிட வேண்டும். நீங்கள் ஒரு சூத்திரர்

அல்ல, ஒரு பிராமணர் என்பதை மறந்துவிட்டு, நீங்கள் ஒரு கிறிஸ்தவன் என்பதை மறந்துவிட்டு, நீங்கள் வெறுமனே ஒரு மனிதன் தான் என்று நினைக்க வேண்டும். உங்களது பெயரையும் கூட மறந்துவிட்டு, அதாவது அந்தப் பெயர் உங்களது உண்மை நிலை அல்ல என்றும், அது சாதாரண உபயோகத்திற்கானது மட்டும் தான் என்றும் அறிந்து கொண்டு, நீங்கள் கற்றவைகளை எல்லாம் மறந்துவிட்டு, அதாவது அவைகள் எல்லாம் உங்களது சொந்த அனுபவம் இல்லை என்றும், நீங்கள் சொந்தமாக அடைந்த விஷயம் இல்லை என்றும், அது மற்றவர்களிடம் இருந்து பெற்றது என்றும் அறிந்து கொள்ள வேண்டும்.

இந்த உலகம் முழுவதும் வெளிச்சம் நிரம்பி இருக்கலாம். ஆனால், உங்களுக்குள் ஆழத்தில் நீங்கள் இருளில் தான் வாழ்கிறீர்கள். நீங்கள் உங்களுக்குள் ஒரு சிறிய ஒளிச்சுடர் கூட இல்லாமல் இருக்கும் போது இந்த உலகம் முழுவதும் வெளிச்சம் இருந்து என்ன பயன்? எனவே, கொஞ்சம் கொஞ்சமாக, நீங்கள் பிறந்த பிறகு உங்களிடம் எந்தெந்த விஷயங்களை சேர்க்கப்பட்டனவோ, அவையெல்லாம் உங்களது உண்மை நிலை அல்ல என்பதைப் புரிந்து கொள்ள வேண்டாமா?

மேலும், இப்படி உங்களது 'நான்' என்பதன் பகுதிகள் மறைந்துவிட்ட பின்னர், நீங்கள் இந்த வெளி உலகில் உள்ள வானத்தைப் போன்று உங்களுக்குள்ளும் ஒரு பிரமாண்டமான வானம் ஒன்று இருப்பதை அறிந்து கொள்வீர்கள். ஏனெனில், இயற்கை எப்போதும் சமநிலையில் தான் இருக்கும் வெளியும், உள்ளும் ஒத்திசைவோடும், சமநிலையிலும் தான் இருக்கும். உங்களது ஆன்மா என்பது இந்த உடலோடு மட்டும் அடங்கிவிடுவது அல்ல; உங்களது உண்மையான ஆன்மாவானது, உங்களது உடலை எரித்தாலும் அது எரிந்து போகாது.

"எந்த ஒரு ஆயுதமும் என்னைத் தொட முடியாது. அல்லது, எந்த ஒரு நெருப்பும் என்னை எரித்துவிட முடியாது," என்று கிருஷ்ணர் கூறியது சரிதான். அவர் இந்த உடலைப் பற்றி, இந்த மூளை, இந்த 'நான்' இவைகளைப் பற்றிப் பேசவில்லை. அவைகள் எல்லாமே அழிந்து போகும். ஆனால், அழிக்கவே முடியாத, எப்போதும் இருக்கின்ற, அமரத்துவம் பெற்ற ஒன்று உங்களுக்குள் உள்ளது. அது, நீங்கள் பிறப்பதற்கு முன்பும் உங்களோடு இருந்தது. மேலும், நீங்கள் பிறந்த பின்பும் உங்களோடு இருக்கும். ஏனெனில், அது தான் முக்கியத்துவம் வாய்ந்த உங்களது ஆன்மா.

இதை அறிந்து கொள்வது தான் சுதந்திரமாக இருப்பதாகும். எல்லாச் சிறைகளில் இருந்தும் விடுதலை பெற்றதாகும். உடல் என்னும்

சிறையில் இருந்து, மனம் என்னும் சிறையில் இருந்து, மேலும் உங்களுக்கு வெளியில் இருக்கின்ற சிறைகளில் இருந்து எல்லாம் விடுதலை பெற்றதாகும்.

உங்களது வாழ்க்கையை இந்த இயற்கையின் ஒரு பரிசாக எண்ணிக் கொண்டு, எந்த அளவுக்கு சந்தோஷமாகவும், கொண்டாட்டத்திலும் வாழ முடியுமோ, அந்த அளவுக்கு வாழுங்கள். வெயிலிலும், மழையிலும், காற்றிலும் ஆடும் இந்த மரங்களோடு சேர்ந்து ஆடுங்கள். இந்த மரங்களுக்கு என்று ஒரு புனித நூலும் கிடையாது அல்லது இந்த மிருகங்களுக்கு என்று ஒரு புனித நூலும் கிடையாது; இந்த நட்சத்திரங்களுக்கும் கூட எந்த புனித நூலும் கிடையாது அல்லது அவைகள் எந்த புனிதரையும் தங்களிடம் வைத்திருக்கவில்லை. மனிதனைத்தவிர, வேறு எதுவும் இறந்து போன விஷயங்களில் அதி தீவிர ஆசை வைப்பதில்லை. இந்த அதி தீவிர ஆசையைத் தான் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக செய்யப்பட்ட தவறுகளில் மிகப் பெரிய தவறு என்று நான் அழைக்கிறேன். இதை முழுவதுமாக நிறுத்துவதற்கு இது தான் நேரம்.

ஒவ்வொரு புதிய தலைமுறைக்கும், தேடுவதற்கான இடத்தை விட்டு வையுங்கள். உண்மையைக் காண்பதற்கான இடத்தை விட்டு வையுங்கள். ஏனெனில், உண்மையைக் காண்பது என்பது உண்மையைத் தேடி அலைவதை விட, ஆனந்தம் கொஞ்சம் குறைவானது. நீங்கள் கோவிலைச் சென்றடைவதல்ல, உங்களது புனிதப் பயணம் தான் உண்மையான விஷயம். உங்களது குழந்தைகள் கீழ்படிதல் இல்லாமல், அடிமைகளாக இல்லாமல், பெருமையுடன் இருப்பதற்கு உதவுங்கள். அவர்கள் சுதந்திரமாக இருப்பதற்கு உதவுங்கள். வாழும் சுதந்திரம், மற்றும் எதையும் வெளிப்படுத்தும் சுதந்திரம் ஆகியவற்றை விடவும் உயர்ந்த மதிப்புள்ளது. எதுவும் இல்லை என்று அவர்களுக்குக் கற்பியுங்கள். அவர்களைத் தகுதி படைத்தவர்களாக ஆக்குங்கள். தேவைப்பட்டால், எந்த ஒரு அடிமைத்தனத்தையும் ஏற்றுக் கொள்வதைவிட, மரணமடைவது சிறந்தது என்று கற்றுக் கொடுங்கள்.

ஆனால், இது செய்யப்படுவதில்லை. மேலும், இதை நீங்கள் செய்யாவிட்டால் இந்த உலகத்தை நீங்கள் அடால்ப் ஹிட்லர்கள், ஜோசப் ஸ்டாலின்கள், மா சே துகுள், ரோனால்ட் ரீகன்கள் போன்ற கொடுங்கோலர்கள் மற்றும் சர்வாதிகாரிகளிடமிருந்து காப்பாற்றவே முடியாது. உண்மையில், உங்களது அடி ஆழத்தில் இதை நீங்கள் விரும்புகிறீர்கள். உங்களது வாழ்க்கை முறையை யாராவது ஒருவர் வெளியில் இருந்து உங்களுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்று

நீங்கள் விரும்புகிறீர்கள். தவறுகளைச் செய்வதற்கு நீங்கள அப்படி பயப்படுகிறீர்கள். ஏனெனில், நீங்கள் சுதந்திரமானவராக இருந்தால், இயற்கையில் நீங்கள் அநேக தவறுகளைச் செய்வீர்கள். ஆனால், அது தான் வாழ்கின்ற வழி என்பதையும் நினைவில் கொள்ளுங்கள்.

அநேக தடவைகள் நீங்கள் விழலாம். அதில் எந்தக் கெடுதலும் இல்லை. மீண்டும் எழுந்து நில்லுங்கள்; மீண்டும் விழாமல் இருப்பது எப்படி என்று கற்றுக் கொள்ளுங்கள். மிகவும் ஜாக்கிரதையா இருங்கள். நீங்கள் தவறுகள் செய்வீர்கள். ஆனால், செய்த தவறையே மீண்டும் செய்யாதீர்கள். இப்படித்தான் ஒருவர் புத்திசாலியாக ஆக முடியும். இப்படித்தான் ஒருவர் தனி மனிதராக ஆக முடியும். ஒரு தேவதாரு மரத்தைப் போன்று உயரமாக வளர்ந்து, அந்த நட்சத்திரங்களைச் சென்றடைய முடியும்.

குள்ளனாக இருக்காதீர்கள். உங்களால் எவ்வளவு முடியுமோ, அந்த அளவுக்கு முடிவான உயரத்தை அடைவதற்கு முயற்சி செய்யுங்கள்.

மேலும், இந்த உலகில் எந்த ஒரு தனி மனிதனும், ஏதோ ஒரு குறிப்பிட்ட தகுதி இல்லாமல், அவனைப் பெருமைக்குரியவன் ஆக்குகின்ற ஆற்றல் இல்லாமல் பிறப்பதில்லை. மேலும், திறமை இல்லாமல், ஏதோ ஒன்றினை உருவாக்குவதற்குரிய கொண்டிராமல் புதியதும் மற்றும் அழகானதுமான ஏதோ ஒன்றிற்கு வாழ்வைக் கொடுக்காமல், இந்த இயற்கையை செழிப்பு மிக்கதாக ஆக்குகின்ற திறமை இல்லாமல் பிறப்பதில்லை. இந்த உலகிற்கு வெறுங்கையோடு வந்த ஒரு தனி மனிதன் கூட கிடையாது என்று நான் உங்களுக்குக் கூறுகிறேன்.

நீங்கள், குழந்தைகள் பிறக்கும் போது அவர்களைப் பார்த்திருக்கிறீர்களா? அவர்களின் கைகள் மூடப்பட்டிருக்கும். ஒரு மூடப்பட்ட கையானது, முஷ்டியானது ஒரு புதிர் நிறைந்தது. அதற்குள் என்ன மறைந்துள்ளது என்று யாருக்கும் தெரியாது. மேலும், கை முஷ்டியை மடக்கிக் கொண்டு இறந்த மனிதர் யாரையாவது நீங்கள் பார்த்ததுண்டா? யாராவது சாகும் போது, அவர் கை முஷ்டியை மடக்கிக் கொண்டு இறப்பதைப் பார்த்திருக்கிறீர்களா? இது நடக்காது. இறக்கின்ற ஒருவன் திறந்த கையோடு, வெறும் கையோடு, செலவு செய்துவிட்ட கையோடு தான் சாகிறான். இவைகள் எல்லாம் உருவகங்கள் தான். ஒரு குழந்தையானது முழு சக்தியோடும், சாத்தியக் கூறுகளோடும் தான் பிறக்கிறது என்று நான் கூறுகிறேன். அவன் யாரையும் பார்த்துப் பொறாமைப் பட வேண்டியதில்லை.

எனவே, நீங்கள் உங்களது 'நான்' என்கிற இதைத் தாண்டி சென்றபின், கடந்து சென்றபின், திடீரென்று எல்லையற்ற வானத்தைக் கண்டுபிடித்து விடுவீர்கள். சிலர் அதைக் கடவுள் என்று அழைத்திருக்கிறார்கள். சிலர் அதை பிரம்மா என்று அழைத்திருக்கிறார்கள். ஆனால், மிகச் சிறந்த வார்த்தை மகாவீரர் மற்றும் கௌதம புத்தரால் தான் பயன்படுத்தப்பட்டுள்ளது. அவர்கள் அதை மோட்சம் என்று அழைத்தனர். மோட்சம் என்றால் 'முழு விடுதலை'. உங்களைக் கட்டிப் போட்டிருக்கின்ற எல்லாவற்றிலிருந்தும் விடுதலை, பொய்யான எல்லாவற்றிலிருந்தும் விடுதலை, இறந்து போகின்ற எல்லாவற்றிலிருந்தும் தான் விடுதலை என்று அர்த்தம். மேலும், இப்படி நீங்கள் பொய்யானவற்றிலிருந்தும், மரணமடைகின்ற எல்லாவற்றிலிருந்தும் விடுதலை ஆகிவிட்டால், உடனடியாக மரணமில்லாப் பெருவாழ்வின் கதவுகள் உங்களுக்காகத் திறக்கப்பட்டுவிடும்.

உங்களில் ஒருவர்கூட அந்த ஆடலை, அந்த பாடலை, எப்போதும் இருக்கின்ற அந்த சங்கீதத்தை தவற விட மாட்டீர்கள் என்று நான் நம்புகிறேன்.